13. திரு தநிநாயகனென்றுல கடநிழல்
சகம் கற்றை காவலாம் ச
14. க் கொற்றத் தானக் குளிர் குடை
நிழல் கீழ் கற்றை கவரி காவலர் வீச
15. மிடைகதிர் நவமணி வீரசிங்காதனத்துடன்
முடிசூடி யுயர்குலத்திரு
16. வென்பைங்கய மலர்கரங்கள் குவித்து
பாத்துவர் மங்கையர் திரண்டு வணங்கும்
17. இ . . . சென்னியில் சுடரொளி அம்சுடர்
மணிமேலடச்சி வந்த இகல் . .
18. டிலற் சாடி கலமது தரங்கம் மென்றன்
உலகு முழுதுடையாரோடு
19. வீற்றிருந்தருளிய கோமாறப ன்மரானதிரி
புவனச் சக்ரவத்திகள் ஸ்ரீ
20. சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு
21. ......... நாள் இருபத்தஞ்சிநால்
22. மாடக் குளக்கீழ் மதிரை பள்ளி
23. யறைக் கூ டத்து
24. நிலாமுற்றத்து இருந்து கா ணப்பேர்
25. கூற்றத்து அள்ளியூர்
26. .......... த்தவந்தீச்சுரமுடை .......... லதார
27. செய்த திருவ
28. தருளிநபடி இத்திருவ .......... டையா ..........
29 வேம்ப நாட்டு மட
30. புரத்து ஆளுடையார் .......... த்தே வரு
31. .... .. ரிசத் திருப்பணிய்கு ......... ஈற்றுள்
32 ளிட்டு வேண்
33. டும் நிவந்தங்களுக்கு .......... ச்சங் ... ..... க்கு
34. இன்னாட்டு ம
35 ..... நிலம் காராண்மை ......... ஈயவ ......... விந்படி
36. நில
37 நில ..... மாவரைக்கும் ......... இறுக்க
38 துவ .. அந்தராயமும் விநியோகமும்
39 தவத்த வசதம் காரியவராட்சியும்
40 அந்தராயமும் வினியோகமும் .........
41 யும வெட்டி பாடடமும் பஞ்சுபீலியும்

42. எப்பேர் பட்டனவுமுள்படட முன்பு இறுக்கும்
43. விக்கிரகப் பேறுமற்ற ........ வாருக்கு இவ்வாண்டுமுதல்
44. ......... மபடி இத்திருப்பள்ளியறைநாச்சியார்
45. ப்பெற வேண்டுமென்று அய்யன் மழவராயன்
46. னமக்கு சொன்னமையில் அடையாத் திருவந்தீச்சரமுடைய . .
47. கு அள்ளியூரில் புரவின்படி நிலமொருமாவுகும் இறுத்துவரும் அந்தராயமும்
48. ஈயோர் கீழும் திருவி கரந் அழிவு பஞ்சுபீலி சந்திவிக்கிரப்பேறும்
49. மற்றும் எப்பேர்பட்டனவும் முன்பு இறுத்து வரும்படியே பள்ளியரை நாச் . . . .
50. இவாண்டுமுதல் இறுப்பதாக வரியில்லார் பேறும்
51. கைக்கொண்டு திருவாய் மொழிந்த
52. ஆவுடையானுய்ய நன்று இறுத்து வெட்டியூரான
53. பலவநாந மதுவராயர் நல்லூர் அதாவ
54. சங்கதேவன் இவர்கள்
55. பக்கல் விலைகொண்டு
56. அனுபோவித்து வரு
57. கிற சிறமான குணதுங்
58. க நல்லூரும் சூரமுடியும்
59. விலை ஓலைப்படி நான்
60. கெல்லைக்குட்பட்ட நில
61. த்தில் பழந்தேவதானம்
62. பள்ளிச்சந்தம் நீக்கிநி ..... ...
63. க உர நிலம் இரண்டாவது முதல்
64. தேவதான இறையிலியாய் இறு
65. ப்பதாகவும் இக்குளங்களில் இறு
66. க்கும் இடத்து இருபத்து நாலடி
67. யான சுந்தரபாண்டியன் கோல .........
68. நிலமளந்து பயிர்பார்த்து விளைந்
69. த நிலத்துக்கு அந்தராயமும் வினி
70. யோகமும் தருவதான அசசும் காரி
71. ஈராச்சியும் .... .   ழும் ப
72. ஞ்சுபீலி சந்து விக்கிரக்
73. பேறும் மற்றும் எப்பேர்

74. பட்டனவும் உட்பட மா
75. த்தால் காசு காலும் முத
76. ல் வீரபாண்டியனால் நெ
77. ல்லு முக்கலமும் குறுவை
78. விளைந்த நிலத்துக்கு
79. வ்வரிசையில் ஒன்
80. று பாதியும் துலாவிறை
81. த்து விளைந்த நிலத்து
82. க்கு ஒன்று காலுமாக வரகு
83. தினைப் புல்லு இறுங்கு விளைந்த நில
84. த்துக்கு மாத்தால் திரமம் ஒன்
85. றேகாலு ஆக இவ்வாண்டு முதல் இ
86. றைகட்டி இறுப்பதாகவும் இடபெ
87. றவேணுமென்று அய்யர் மழவ
88. ராயன் நமக்கு சொன்னமை
89. யில் இத்திருப்பள்ளிஅரை நாச்
90. சியார்க்கு திருப்படிமாற்று விலை . . .
91. இனாட்டு வேண்டு நிவந்த
92. ங்களுக்கு இக்கூற்றத்து
93. ராஜராஜ நல்லூர் ஊ
94. ர் பக்கல் குருந்தங்குடியா
95. ன அழியாமொழி நல்லூர
96. வர் விலைகொண்டு
97. விலை ஓலைப்ப
98. டி நான்கெல்லைக்குள்
99. பட்ட நீர்நிலமும் புன்செய்
100. நத்தமும் தோட்டமும் உட்ப
101. ட்ட நீர்நிலத்தில் பழந்
102. தேவதானம் பள்ளிச்சந்த
103 ம் நீக்கி நீக்கி உள்ள நிலம் இ
104. வ்வாண்டு முதல் செல்
105. வதான இறையிலி
106. இறுப்பதாகவும் இக்குள.
107. கள் இறுக்கும் இடத்து

108. இருபத்து நாலடியான சுந்தர
109. பாண்டியன் கோலால் நில
110. மளந்து பயிர் பாத்து விளைந்
111. த நிலத்துக்கு அந்தராயமும்
112. விநி$_3$ ஓகமும் தருவதான அச்சும்
113. காரிய ஆராட்சியும் வெட்டிபா
114. ட்டமும் பஞ்சுபீலி சந்துவிக்கிர
115. ம பேறும் மறறும் எப்
116. பேர்பட்டனவும் உட்பட
117. மாத்தால் காசுகாலும் . .
118. முதல் வீரபாண்டியனா
119. ல் நெல்லு முக்காலு .
120. குறுவை விளைந்த நில
121. த்துக்கு இவ்வரிசையில்
122. ஒன்று பாதியும் துலா
123. இறைத்து விளைந்த நிலத்து
124. க்கு ஒன்று காலுமாக எள்வரகு
125. உள் புல்லு இறுத்து நில
126. லத்துக்கு மாத்தால் திரமம் ஒன்றக்
127. காலும் ஆக இவ்வாண்டு முதல் இ
128. றைகட்டி இறுப்பதாகவும் இட
129 வரியிலார் எழுத்திட்ட உள்வரியும்
130. நம் கேள்வியும் தருவதாகச் சொன்
131. னோம் கைக்கொண்டு
132. ப்படி சந்தி
133. ராதித் தவற் செல்ல
134. கல்லிலும் செம்பிலும்
135. வெட்டுவித்து கொண்டு
136. இவை மிழலைகூற்றத்து
137. வகுதுடி பொதுவக்கு
138. டையான்னேன்

# 6. புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

6 : 1

இடம் : புதுக்கோட்டை மாவட்டம் ஆவுடையார்கோவில் வட்டம் ஒக்கூர் சிவன்கோவில் திருநிலைக்காலிலுள்ள கல்வெட்டு.

காலம் : மூன்றாம் குலோத்துங்கன், யா:23, (கி.பி. 1201).

செய்தி : ஒக்கூரிலிருந்த சீராமன் திருந்தசுரமுடையான் செம்பியதரையன். சந்தியாதீபம் விளக்கு எரிக்க ஒன்பது பழங்காசு கொடுத்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ தி
2. ருபுவனச் சக்
3. கரவத்திகள் ஸ்ரீ
4. குலோத்துங்க
5. சோழ தேவற்கி
6. யாண்டு இருப
7. த்து மூன்றாவது
8. மிழலைக் கூற்றத்
9. து நடுவிற்கூற்று
10. ஒக்கூரான உத்த
11. மசோழ நல்லூா
12. ர் ஒக்கூருடையா
13. ன் சீராமன் திருந்
14. தசுரமுடையானா
15. ன செம்பியதரை
16. யனுக்கு இவூர்
17. விழுத்தீஸ்வர முடை
18. யார் கோயில் சிவ
19. பிராமணன் நாரா
20. யணன் உத்தம பட்
21. டநேன் நாட்டுக்
22. குடுத்த பரிசாவ
23. து அகத்தீஸ்வரமுடை
24. யாற்கு இவர் தம
25. க்கையார் தா
26. . . . வக்கி சந்
27. தியாதீபம் திரு
28. விளக்கு ஒன்றுக்
29. கு இவாட்டை புர
30. ட்டாதி மாதம் முத
31. ல் சந்திராதித்தவர்
32. தராப் பே . . . க் கைக்
33. கொண்ட பழங்கா
34. சும் ஒன்பது பழங்காசுங்
35. . கைக் கொ
36. ண்டு சந்திராதித்தவா
37. இவ்விளக்கு ஒன் . . . . . . . . .

6 : 2

இடம் : புதுக்கோட்டை மாவட்டம் திருமயம்வட்டம் விரையாச்சிலை இரண்டு வயல் பழனிச்சாமித்தேவர் களத்து வீட்டின் மேற்கு வேலியில் கிடக்கும் தூண் கல்வெட்டு.

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கோயிலுக்கு விரையாச்சிலை மறவன்நம்பி ஐநூற்றுவப் பேரயர் உள்ளிட்டார் நிலக்கொடை கொடுத்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கு
2. லசேகர தே
3. வற்கு யாண்டு 5
4. கல்வாயி நா
5. ட்டு சுந்தரபாண்
6. டியபுரத்து அர
7. வத்துடையார்
8. பிள்ளையுடையா
9. ர் திருமாலிருஞ்
10. சோலை தாதர்
11. சோதியாழ்வா
12. ற்கு விரையாச்சி
13. லை மறவன் நம்பி
14. அஞ் நூற்றுவப் பே
15. ரயர் உள்ளிட்டா
16. ர் பக்கல் கொண்டு ஊ
17. ரவாற்கு துண்டிப்பா
18. க ஆண்டு ஒன்றுக்கு இ
19. றுக்கும் பணம் இப்
20. பக . கொள்ள சந்திரா
21. தித்தவரை இரண்டு வ
22. யலும் ஆள்க

**6 : 3**

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் புதுக்கோட்டை வாராப்பூர் சிவன் கோவில் அர்த்தமண்டபத்திலுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : தூண் கொடை.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கொலொ
2. லொதுங்கங்க
3. சோழதேவற்கு ய
4. ாண்டு 10 வது வா[ர]
5. ாபூருடையான் ம.
6. பன்மப நக்க கங்க
7. தொண்டைமாந் நாடா
8 வாந் தந்மம் இகக
9. ால்.

**6 : 4**

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் புதுக்கோட்டை வட்டம் வாராப்பூர் சிவன் கோவில் அர்த்தமண்டபத்திலுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : தூண் கொடை.

1 ஸ்வஸ்திஸ்ரீ கத்தி
2. ராம மாந்தனி
3 யாழீமை வலல
4. புரமுடையான் வ
5. ணிசந் உதையா
6 சாத்தநாந அந
7. தாநமயிருநம
8 பி இந்த கால

6 : 5

இடம் : புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் ஒடுக்கூர் கண்மாய் பெரியமடைத் தூணிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : மடைத்தூண் அமைப்பு அத்தூண் ஒன்றிலுள்ள பிள்ளையார் உருவப்புடைப்புச் சிற்பம் ஆகியவை கி.பி. 13 ஆம் நூற்றாண்டிற்கு உரியதாகத் தெரிகிறது. மடை செய்த மற்றும் மேற்பார்வை செய்த மூவர் பெயர்கள் பிற்கால எழுத்தில் உள்ளதால் இம்மடை கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கருதலாம்.

1. ஸ்ரீ மது
2 வரதர
3 ாசத் தெ
4. ாண்டை
5. மானார் . உ .
6. குமா
7. ருமணி
8. யகா
9. றன் . உ .
10. காணி
11. குழுமி
12. ஆண்
13. டி மக
14. ன் மெ
15. ய்யக் கு
16. டும்பன்

6 : 6

இடம் : புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டம் அன்னவாசல் பெரியகண்மாய் பழைய மடையின் தூணிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : மடைத் தூண்களின் அமைப்பு கி.பி.12 அல்லது 13 வது நூற்றாண்டைச் சேர்ந்தது.

1. பகட்
2. டுவா
3. ர் கண்
4. டன்.

# 7. மடைக் கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்

7 : 1

**இடம்** : சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், பழைய நெடுவயல் கண்மாய் மடை த்தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : நெடுவயல் ஊரார் குளத்தில் பராமரிப்புக்காக குளப்பட்டியாக நிலம் கொடையாக வழங்கியமை.

**முதல் தூண்**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள்
2 போலப் பெருநி
3. லச் செல்வியுந்
4. தனக்கே யுரிமை
5. பூண்டமை மன
6. க்கொள காந்தளூர்ச்
7 சாலைக் கலமறுத்தரு
8. ளி வேங்கை நாடும்
9. கங்கபாடியு நுள
10. ம்ப பாடியுந் தடி
11 கை பாடியுங் குடமலை
12. நாடுங் கொல்லமு
13. ங் கலிங்கமும் எண்
14. டிசை திகழ் ஈழமண்
15 டலமும ரட்டபாடியுந்
16. திண்டிறல் வென்றி
17 தண்டாற் கொண்ட த
18 ல் எழில் வளர் ஊழி
19. யுள் எலலா யாண்
20. டுந தொழுதகை விள
21 ங்கும யாணடே
22 செழியரை தேசு
23. கொள்

**இரண்டாம் தூண்**

24. ஸ்ரீ கோவிராஜ
25 ராஜகேசரி பன்
26 மரான ஸ்ரீ ராஜ
27 ராஜதேவற்கு
28 யாண்டு 22
29 ண்டாவது ரா
30 ஜராஜ வளநாட்
31 டுப் புறமலை நா
32. ட்டு நெடுவயல்
33 ஊரோம
34 ராஜர் வயலில்
35 . . ங்குர முக்கா
36. ணி நாலுமா
37 நீக்கி நின்ற நிலம்
38 நாலுமாவும குள
39. ப்படடியாக இது
40. . . க் குடுததோம்
41 .
42. ம்.

7 : 2

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் செம்பாட்டூர் பெரிய கண்மாயின் மடைத்தூணிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : குளமங்கலத்து கொற்றங்காரி என்பவன் மடைத்தூண் நிறுத்தியமை.

1. ஸ்ரீ குளமங்க
2. லத்து கொற்ற
3. ங்காரியேன்
4. நிறுத்தின
5. பெட்டைக் கால்.

7 : 3

**இடம்** : சிவகங்கை மாவட்டம் சிவகங்கை வட்டம் ஆதனிப்பட்டி கண்மாய் பெரியமடைத்தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 11 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : களவழி நாடாள்வான் என்ற சூரன் ஜெயங்கொண்ட சோழன் மடை அமைத்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ
2. இம் மடை
3. சூரந் ஜயங்
4. கொண்ட சோ
5. ழன்னான களவ
6. ழி நாடாழ்வான்

7 : 4

**இடம்** : இராமனாதபுரம் மாவட்டம் தேவகோட்டை வட்டம் ஓரியூர் மேற்குக் கண்மாய் மடையிலுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : மடை கட்டியமை.

1. இம் ம டை
2. டய் தென்
3. னை முழுது
4. டையான்.

# 8. மூன்றாம் கிருஷ்ணனின் மாமல்லபுரம் புலிக்குகைக் கல்வெட்டு

சு. இராஜவேலு, சென்னை

**8 : 1**

**இடம்** : புலிக்குகை (சாளுவான் குப்பம் - மாமல்லபுரம், செங்கற்பட்டு வட்டம் காஞ்சிபுரம் மாவட்டம்). மாமல்லபுரம் செல்லும் வழியில் புலிக்குகை அருகில் வடக்குப்புறம் கடற்கரையில் உள்ள பாறை

**காலம்** : இராட்டிரகூட அரசன் கன்னரதேவன் (மூன்றாம் கிருஷ்ணன்), யா:4, (கி.பி. 943).

**செய்தி** : ஆமூர்க் கோட்டத்தில் உள்ள திருவிழச்சில் என்ற ஊரில் உள்ள சுப்பிரமணியர் கோவிலுக்கு நிவந்தம் அளித்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னர தேவற்கு யாண்டு நாலாவது.
2. ஆமூர்க் கோட்டத்து திருவிழச்சில் ஊருடைய தே$_3$வர் சுப்ரமண்ய பட்டாரர் (கருடப்பாதி)
3. உண்ணாழிகைப் புறமாய்.......... ஊருடையோம் இதேவற்கு (11")

**குறிப்பு :**

இக்கல்வெட்டுக்கு அருகில் குலோத்துங்க சோழன் கல்வெட்டொன்று உள்ளது. இந்தப் பாறைக்கு அருகில் மேடான பகுதி கற்றளிக்கோயில் ஒன்றின் எச்சங்களுடன் காணப்படுகிறது இப்பகுதியை அகழாய்வு செய்தால் கோயிலின் பகுதிகள் கிடைக்கலாம். மூன்றாம் கிருஷ்ணனின் காலத்தில இருந்த சுப்பிரமணியர் கோவில் குலோத்துங்கசோழன் காலம் வரை இருந்து பின்னர் மண்மூடிப் போயிருக்கலாம்.

# 9. பராந்தக சோழனின் பழையசீவரம் கல்வெட்டு

சு. இராஜவேலு, சென்னை.

9 : 1

**இடம்** : காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரம் வட்டம், பாலாற்றின் வடகரையில் உள்ள சிற்றூர். ஊரின் மையத்தில் உள்ள புதையுண்ட கோவில், கருவறை மேற்கு மற்றும் வடக்கு ஜகதி.

**காலம்** : முதலாம் பராந்தகசோழன், கி.பி. 922.

**செய்தி** : ஊற்றுக்காட்டுக் கோட்டத்தில் உள்ள விண்ணபுரத்து பெருங்குறி ஸபையார் ஊரின் நடுவில் இருந்த சீர்க்குட்டி அம்பலத்தில் கூடி வாரியம் செய்யும் பெருமக்களுக்குச் செய்கின்ற முடிவைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. வாரியம் செய்கின்றவர் வாரியம் புகும் பொழுது சத்தியம் செய்தல் வேண்டும் என்றும் அதேபோன்று வாரியத்தில் இருந்து விலகும் பொழுதும் சத்தியம் செய்து விலகுதல் வேண்டும் என்றும் குறிப்பிடுகின்றது. வாரியம் செய்வோர் ஸபைக்கு ஏற்ப கணக்குக் காட்டுதல் வேண்டும் என்றும் அவர்கள் வார்பலம் என்ற வரிக்காக(?) இருகழஞ்சு பொன் தவிர ஏரிஆயம் சோறுமாட்டு மற்றும் ஆஞ்சாரஸம், பிரஹ்மஸ்யம் வரிகளைப் பெறக்கூடாது என்றும் குறிப்பிடுகிறது. மேலும் வாரியம் செய்வோர் பிற ஊர்களுக்கும் சென்று வாரியம் செய்கின்ற செய்தி இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கும் சிறப்புக்குரிய செய்தியாகும். (கல்வெட்டில் சிதைந்த பகுதி புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளது). பிரமதேய சபை நடவடிக்கைகளைக் கூறும் உத்திரமேரூர், மானூர் கல்வெட்டுகளோடு இதுவும் சேர்த்து எண்ணத்தக்க முக்கிய கல்வெட்டாகும்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரி பந்மற்கு யாண்டு 15ஆவது நாள் 12 ஊற்றுக் காட்டு கோட்டத்து விண்ணபுரத்து பெருங்குறி ஸபையோம் இந்நாளால் சீர்க்குட்டி அம்பலத்திலே கூட்டக் குறைவரக்
2. கூடி இருந்து இபபதினைந்தாவது முதல் வாரியஞ் செய்யும் வியவஸ்தையாவது ஆவ்வவ் குடும்பிற்கொத்தாரும் ஸபைக்கொத்தோம் வாரியஞ் செவதாகவும் வாரியம் புகும்போது ஸத்யஞ் செய்து வார்பலம்
3 இருகழஞ்சு பொன் அன்றி மற்று எப்பேர்படடிதும் ஏரி ஆயமும் சோறுமாட்டும் முதலாக மற்றும் ஆஞ்சாரஸமும் பிரஹ்மஸ்யம் எப்பேர்ப்பட்டிதும் கொள்ளோமென்று ஆண்டறுதி செய்து ஸபைய-

4. க்கு ஒக்க கணக்கு காட்டி விடுநாளும் ஸத்யஞ் செய்வாராகவும் புகும்போதும் ஸத்யஞ் செய்து புகுவாராகவும் இவ்வாரியம் வார்பலங் குடுத்துப் போக்கு காட்டப் பெறாதாராகவும் வாரியம் புக்காரல்லாதார்.

5. வஸ்தரந்தோறும் வார்பலங் கொள்வதாகவும் இதன் மேல் வாரியத்து மன்று கொள்ளப் பெறாதாராகவும் வாரியம் இரண்டாண்டடுத்து வாரியஞ் செய்யப் பெறாதாராகவும்

6. கு......... அவ்வவ் குடும்புக்கு ஒத்தாரேய் வாரியஞ் செய்வாராகவும் ..........ம் அட்டு செய்து இறைய் குடும்பு மட்டி ஒக்க அடத்துக் கொள்வதாகவும் மன்றாட ஊர் நின்றும் புறப்பட்ட நாள் முதல் ஊர் சோறு

7. உண்பதாகவும் வியவஸ்தை ......... செய்யப்பெறாதோம் ஆகவும் இவ்வியவஸ்தை அன்றென்றாரை ஸபையிலும் ஸத்யஞ்.........

8. கவும் ஸத்யஞ் செய்யாதார் வாரியஞ்....... ஸத்யஞ் செய்தோம் பெருங்குறி ஸபையோம்

# 10. காவேரிப்பாக்கம் கல்வெட்டுகள்

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்

**10 : 1**

**இடம்** : வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், காவேரிப்பாக்கம் முக்தீசுவரர் கோயில், கர்பகிருகத்துக்கு வெளியே வடமேற்கு மூலையில் கூரையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

**காலம்** : கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு.

**செய்தி** : துண்டுக் கல்வெட்டு இக்கோயிலில் பெருமக்கள் மேற்பார்வையில் ஒரு நாளைக்கு ஒரு விருந்து உணவுஅளிக்க ஏற்பாடு செய்யப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.

1. ........
2. கு யாண்டு இருபத்திரண்டாவது ப........
3. செய்வாருங் கண்டுகா [ருள்] பசிண்டி........
4. பெருமக்கள் கடைக் கண்டு ரக்ஷிப்பார்கள்
5. முப்பத்தினாலும் ஒரு விருத்தூண் ஆசந்திர கா........

**10 : 2**

**இடம்** : காவேரிப்பாக்கம், முக்தீசுவரர் கோயிலுக்கு வெளியே, சுற்றுச்சுவரில் வடமேற்கு மூலையில் கற்பலகையிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : துண்டுக் கல்வெட்டு நிலவிற்பனை பற்றியது.

1. ........ ஆயிரங்குழியும் ஆக விற்றுக்........
2. ........ வந்த விலைய்ப் பொன் எல்லாம் மறக் கொண்டு........
3. ........ வையும் இதுவே ஆக ஒட்டிக் குடுத்தோம் மகாச........
4. ........ க்குறிய ஏழாயிரவன் மகன் திருவேங்க........

**10 : 3**

**இடம்** : காவேரிப்பாக்கம், காந்தி வீதியிலுள்ள ஆசிரியை இரமணிபாய் என்பவருடைய வீட்டின் புறக்கடையிலுள்ள துண்டுக் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : துண்டுக் கல்வெட்டு.

1. .......... கத்து பழந்திருக்கோயில் மகாதேவ..........
2. .......... ஒன்பதரை மாறிநிறை அறுபதின் கழஞ்சு இப்..........
3. .......... கணப் பெருமக்களோம் இ. த்துக்கு விண்ணப்பஞ் செய் ..........
4. பிராமணர்க் குளை.......... கிராமவித்தன்..........



10 : 1



10 : 2

# 11. சத்தியமங்கலம் கல்வெட்டுகள்

கோ. தில்லைகோவிந்தராஜன், தஞ்சாவூர்.

11 : 1

**இடம்** : கபிஸ்தலத்திலிருந்து 4 கல் தொலைவில் உள்ள சத்தியமங்கலம் ஆத்மநாதர் கோயில்.

**காலம்** : கோயில் முகமண்டபத்தூணில் அடியவர் ஒருவரின் சிற்பத்தையொட்டியுள்ள 10 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு.

**செய்தி** : சோழன் இரணன் ஆன உத்தமசோழன் மண்டபம் கட்டியதைக் கூறுகிறது.

1. ........ ஸ்வஸ்திஸ்ரீ இம் மண்
2. டபம் செய்விச்ச சோழன்
3. இரணன் ஆந உத்தம
4. சோழ மூகொலைத்த
5. ரையர் இவர்

**குறிப்பு** : இக்கல்வெட்டிற்கு மேல் "சுருதிமான்" என்று 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தமைதியில் கல்வெட்டு காணப்படுகிறது.

11 : 2

**இடம்** : இடதுபுறச் சுவரில் உள்ள கல்வெட்டுக்கள்.

**காலம்** : இராஜராஜன், யா:24,

**செய்தி** : திருமழபாடியில் இருந்த நாற்பத்தெண்ணாயிரவன் மடத்துக்கு நிலம் விற்றுக் கொடுத்ததைக் கூறுகிறது.

1. ...... ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜதேவற்கு யாண்டு 24 த$_4$று நாயற்று பூர்வ பட்
2. சத்து திதியையுந் திங்கள்கிழமையு[ம்] பெற்ற திருவோணத்துநாள் குலோத்துங்க சோழவ
3. ளநாட்டு திருநரையூர்நாட்டு அகரம் ஸ்ரீ ராஜராஜ சதுவேதிமங்கலத்து சோளேந்திரசிங்கச்
4. சேரிகாரமபிச்செட்டு விருஷவாஹன பட்டனேன் இவ்வூர் பிடாகை மேல் காராஞ்சேரி உடையார்
5. திருமழபாடி உடையார் திருமடைவிளாகத்து வடக்கில் சிறகில் நாற்பத் தெண்ணாயிரவன் திரும
6. டததுக்கு மடசேஷமாக விற்று கொடுத்த நிலமாவது ஷயூர் பிடாகை உலகுடை முக்கோ

7. [க்] கிழாநடிவதிக்கு மேற்கு ராஜராஜ வாக்காலுக்கு தெற்கும் மூன்றாங் கண்ணாற்று நாலாங்கண்ணாற்றும்

8. இரண்டாஞ்சதிரதது நிலம் ஒருமாவின் மூன்று இதில் எந்தம்பி விற்ற நிலம் காணி முந்திரிகைகிழ்மூவரையும் ஆக நிலம் ஒருமாவின் கீழ் மூவரையும் மடசேஷமாகக் கொண்டது.

11 : 3

1 மேல்ப்படியான் மாதுயரந் தீர்த்தாநேன்.........

2. ணாகோயில் எழுந்தருளி இருக்கும் ஆளுடைய பிள்ளையாருக்கு இத்தரணி முழுதுடையவதிக்கு மேற்கு.

3. இராஜராஜ வாய்காலுக்கு தெற்க்கு மூன்றாங்கண்ணாறு.

4. 20ஞ் சதிரத்து தெற்கடைய நிலம் மூன்றுமாவில் கிழக்கடைய நிலம் ஒருமாவில் தெற்கடைய கொல்லை நிலம் காணி முந்திரிக்கை.

11 : 4

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனசக்கரவத்திகள் ராஜேந்திரசோழதேவற்க்கு

2. வ்ருஷ நாயற்று பூர்வபக்ஷத்து திறயோதஸியும் வியாழக்கிழமையும் பெற்ற சோதிநாள் [குலோத்து]

3. ங்க சோழ வளநாட்டு திருநறையூர் அகரம் ஸ்ரீ ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து பிடாகை மே

4. ல் காரஞ்செரி உடையார் மழப்பாடி உடையார் திருமடவிளாகத்துக் இந்தரும் தெங்குடையான் மாதுயரந்தீத்தானேன் சேரி ஸொமடத்து தி

5. ரு வெண்காடுபட்டனுக்கு நான் அ[க]ரம் குடுத்த மனை கிழாநடி

6. வதி மேற் மங்கல வடக்கில் மங்கலம் திருப்பொவுரெ (இக்கல்வெட்டு தொடர்ச்சி நின்றுள்ளது)

11 : 5

**காலம்** : இராஜராஜன் மூன்றாவது ஆட்சியாண்டு.

**செய்தி** : நிலவிற்பனை குறித்தது

1. ஸ்வஸ்தி[ஸ்ரீ] திரிபுவன சக்கரவர்த்திகள் இராஜராஜதேவற்குயாண்டு மூன்றாவது. நாயிறறு பூர்வபட்சத்து திங்கள்கிழமையும் பெற்ற உத்திரட்டாதி நாள குலோத்துங்க .. ராஜ ராஜ . தது பிடாகை மேல் காராஞ்சேரி உடையார் திருமழபாடி உடையார் திருநாமதது இந்நாள வரையும் விலைகொண்ட உலகுடை முககோக் கிழானடிவதிக்கு மேற்கு இராஜராஜ வாய்காலுககு முன்றாங்கண்ணாறறு இரணடாஞ்சதிரத்து நெதொறுபட்டித் நதத்து வடசிறகு நிலம் அரைமாவரைக் காணி முந்திரிகை முக்காலெ

கொண்டு இம் முக்காணி இவ்வதிக்கு மேற்கும் இவ்வாய்காலுக்கு இரண்டாம் கண்ணாற்று இரண்டாஞ்சதிரத்து திருநாமத்துகாணி கொண்ட விளைநிலம் ஐய்மாவரை

2. இத்தெருக் கண்ணாற்று மூன்றாம் சதிரத்து வடக்கடைய நில மூன்று மாவில் இவனுடைய நிலம் ஒருமாவில் கிழக்கடைய திருநாமத்து விலை கொண்ட நில அரைமா இவ்வதிக்கு மேற்க்கு இவ்வதி......... மண்ணிப்படுகை நிலங்காணிக்கிழகாலு வாய்காலுக்கு மேற்காலு ராஜவாய்க்காலுக்கு வடக்கு மூன்றாம் கண்ணாற்று ஐஞ்சாசதிரத்து திருநாமத்து விலை கொண்ட நிலம் ஒருமா



11 : 1

# 12. விருதுநகர் மாவட்டத்தில் புதிய செக்குக் கல்வெட்டுகள்

ஆர். பாலச்சந்திரன், திருத்தங்கல்

12 : 1

**இடம்** : விருதுநகர்மாவட்டம், விருதுநகர்வட்டம், முத்துலாபுரம் என்னும் ஊரின் கிழக்குப்பகுதியில் சின்னாண்டிகோயில் என வணங்கப்படும் பாறையின் மேல் செதுக்கப்பட்ட செக்கில் பொறிக்கப்பட்டுள்ளது.

**காலம்** : கி.பி.12-13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இருஞ்சோணாட்டு வீரபாண்டியபுரத்து தன்மன் என்பவன் செக்கு அமைத்தது. கல்வெட்டுத் தொடக்கத்தில் குத்துவிளக்கு கோட்டுருவமாக உள்ளது. இவ்வூருக்கு வடகிழக்கில் சிவகாசி செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவில் வீரபாண்டியபுரம் என்னும் ஊர் அமைந்துள்ளது.

1. ஸ்ரீ (இரு)ஞ்சோணாட்டு வீரபாண்[டி]யபுரத்து தன்மன்
2. ..........ரன் இடுவித்த செக்கு

12 : 2

**இடம்** : விருதுநகர்மாவட்டம் சிவகாசிவட்டம் சிவகாசி திருவில்லிபுத்தூர் சாலை விலக்கில் அமைந்துள்ள ஈஞ்சார் கிராமம். இங்கு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் அமைச்சராக இருந்த மல்லிநாட்டுத் தடங்கண்ணியைச் சேர்ந்த குருகுலத்தரையன் கட்டிய சிவன்கோவில் உள்ளது. அதன் அருகில் சாலையோரத்தில் இச்செக்கு காணப்படுகிறது.

**காலம்** : கி.பி.11 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : உடையான் வானவிச்சாதிரனான எண்ணங்கலக்கி பேரையன் என்பவன் செக்கு செய்ததைக் கூறுகிறது.

1. ஸ்ரீஉடையான் வான(விச்சா)திரனான எண்ணங்கலக்கி பேரையன் [இட்டசெ]க்கு

# 13. பெரம்பலூர் மாவட்டத்தில் வணிக நகரங்கள் பராமரித்த குளங்கள்

இல. தியாகராஜன், அரியலூர்

13 : 1

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், உடையார்பாளையம் வட்டம், விக்கிரமங்கலம் சோழீஸ்வரர் கோயில் கருவறைத் தெற்குச் சுவர்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா:23, கி.பி.1201. (இ.க.எண் 1956:178).

**செய்தி** : விக்கிரமசோழபுரத்து நகரத்தார்கள் செய்த விவஸ்தை (தீர்மானம்) பற்றிக் கூறுகிறது. இவ்வூர்க் கிடாரங்கொண்ட சோழப் பெருந் தெருவில் முன்னாளில் வெட்டப்பட்ட இரண்டு குளங்களை ஊர்ப் பயன்பாட்டுக்குப் பொதுவாக ஆக்கியதுடன் இக்குளங்களுக்கு வருகின்ற தண்ணீரைத் தடுதுதுப்பாய்ச்சுதல், நெல்லு நடுவதற்குப் பயன்படுத்துதல் கூடாது எனவும் நகர அவை தீர்மானம் செய்தது. இதிலிருந்து இக்குளங்களின் நீரை ஊர்மக்களின் குடிநீர் உள்ளிட்ட தேவைகளுக்கு மட்டுமே பயன்படுத்த வேண்டும், விவசாயப் பணிகளுக்குப் பயன்படுத்தக் கூடாது என்றும் நகர அவை முடிவு செய்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்
2. கரவத்திகள் மதுரையும்
3. ஈழமும் பாண்டியன் முடி
4. த்தலையுங் கொண்டருளினஸ்ரீ குலோத்
5. துங்கசோழ தேவற்கு யாண்டு
6. உயஉ விக்கிரமசோழபுரத்து நக
7. ரத்தோம் விவத்தை பண்ணினபடி
8. எங்களூர் கிடாரங்கொண்டசோழ பெரு
9. ந்தெருவிலே முந்நாளில் இரண்டு குளங்
10. கல்லுவித்து இக்குளங்கள் பொதுவாக்கி
11. இத்தெருவிலும் மதுராந்தகப் பெருந்தெரு
12. விலும் இரண்டு மங்கல வீதியிலும் அளந்து
13. முதலான குழி மாகாணி மனையிலே விழுக்
14. காடிட இவ்வாண்டு எழுதிந ஒழுகிந்படியே சந்திராதித்தவ
15. ரையும அனுபவிப்பதாகவும் அனுபவிக்குமிடத்து வி
16. ச்சு தடுத்துப் பாசுதல் நெல்லு நடுதல் செய்யா தொ
17. ழியக் கடவோமாக விவத்தை பண்ணினோம் வி
18. க்கிரமசோழபுரத்து நகரத்தோம்

13 : 2

**இடம்** : ஜெயங்கொண்டசோழபுரம் ஆவேரி நடுவே நடப்பட்டிருந்த கல். இக்கல் தற்போது கங்கைகொண்ட சோழபுரத்தில் தமிழ்நாடு அரசுத் தொல்லியல்துறை அருங்காட்சியத்திற்குக் கொண்டு சென்று வைக்கப்பட்டுள்ளது.

**காலம்** : நான்காம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், யா:18, கி.பி. 1321.

**செய்தி** : நன்னையைச் சேர்ந்த திருவிக்கிரமர் என்பவர் இந்த ஏரியை வெட்டினார். பெரம்பலூர் மாவட்டம், வேப்பூர் வட்டத்தில் நன்னை கிராமம் உள்ளது. திருவிக்கிரமன் வெட்டிய ஏரி ஜெயங்கொண்ட சோழப் பேராவி அகவாய் என அழைக்கப்பட்டது. இப்பெயரே இன்று ஆவேரி என வழங்குகிறது. இந்தக் குளத்தில் உள்ள தண்ணீரை இறைத்தல், நீர்பாய்ச்சுதல் செய்யக்கூடாது. அதாவது விவசாயத்திற்குப் பயன்படுத்தக்கூடாது என இவ்வூர் நகர அவை தீர்மானித்துள்ளது. அவ்வாறு செய்பவர்கள் நகரத் துரோகிகள் எனவும் நகரத்தார்களில் ஒருவராகக் கருதப்படமாட்டார்கள் எனவும் தெரிவித்துள்ளனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோச்ச
3. டபன்மர்
4. திரிபுவந
5. ச் சக்கர
6. வத்திக
7. ள் ஸ்ரீசு
8. ந்தரபா
9. ண்டிய
10. தேவற்
11. க்கு யாண்
12. டு யஅ - வ
13. து வை
14. ய் காசி
15. மாதமு
16. தல் செ
17. யங்கொ
18. ண்ட சே
19. சாழப்
20. பேரா
21. வி அக
22. வாயில்
23. நன்னை
24. யுடை
25. யார் தி
26. ருவிக்
27. கிரமர் வெ
28. ட்டின
29. தன்ம
30. க்குள
31. த்தில் யி
32. றைக்குத
33. ல் நீர் ப
34. ாச்சுத
35. ல் செய்
36. யநினை
37. த்தார்
38. உண்டா
39. கில் நக
40. ரத்து
41. ரோகி
42. நம்மி
43. லொ
44. ருத்த
45. ரல்ல உ.

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், அரியலூர் வட்டம், பெரிய திருக்கோணம் சௌந்தரப் பெருமாள் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவர்.

**காலம்** : இரண்டாம் ஜடாவர்மன் விக்கிரம பாண்டியன், யா:4, கி.பி. 1348.

**செய்தி** : மதுராந்தகபுரத்து நகரத்தார்கள் (நகர அவை) செய்த தீர்மானம் பற்றிக் கூறுகிறது. இவ்வூரிலுள்ள பழியஞ்சிப் பேரேரி மற்றும் பிற குளங்களை வெட்டிப்பராமரிக்க விதித்த வரிகள், வசூலிக்கப் பட வேண்டிய தொகை பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டு உள்ளது. அதன்படி இந்த ஏரி நீரைப் பயன்படுத்தும் நன்செய் புன்செய் நிலங்களை வைத்துள்ளோர் பின்வரும் அளவில் குழி வெட்டித்தர வேண்டும். நன்செய் நிலம் ஒரு வேலிக்கு 4 குழிகளும் புன்செய் நிலத்திற்கு ஒரு வேலிக்கு ஒரு குழியும் வெட்டித்தர வேண்டும். இந்த ஏரியிலிருந்து கிடைக்கும் பாசிப்பாட்ட வரி மற்றும் வாசல்குழி வரியாகப் பேரொன்றுக்கு ஒரு பணம் வீதம் வரி விதித்து அதன் மூலம் கிடைக்கும் தொகையைப் பயன்படுத்த வேண்டும். மேலும் இந்த ஊரிலிருந்து பிற மண்டலங்களுக்கு வணிகத்தின் பொருட்டும் பிற காரணங்களுக்காகவும் சென்று தங்கி விட்டவர்களிடமிருந்து பேரொன்றுக்கு ஒரு பணம் வீதம் வசூலித்துக் கொள்ள வேண்டும்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடபன்மர் திருபு
2. வனச் சக்ரவத்திகள் ஸ்ரீவிக்ரம பா
3. ண்டிய தேவர்க்கு யாண்டு அ - வது
4. ஆவணி மாஸம் மதுராந்தகபுரத்து நகரத்தோம் நகர வ்யவஸ்வதை பண்ணினபரி
5. சாவது பழியஞ்சிப் பேரேரி உள்ளிட்ட ஏரிக்குள(ம்) வெட்டு கைக்கு நிச்சயி
6. த்தபடி நன்செய் நிலத்துக்கு பொத்தகப்படி வேலி
7. யொன்றுக்கு நாலு குழியும் நன்செய் நிலத்துப் புன்செய்க்கு வேலி ஒன்
8. றுக்கு ஒரு குழியும் இவவேரிக்கால் பாசிப்பாட்ட முதலும் வாசற்குழியும் பே
9. ரொன்றுக்கு ஒரு பணமும் நம்மூரராய் பல மண்டலங்களிலும் இருக்கிற ே
10. பர்களும் பேரொன்றுக்கு ஒரு பணமும் இம் முதல்கள் தண்டுமிடத்து மண்கல
11. ந்தகத்தும் வெண்கலமெடுத்துங்கொள்ளக் கடவதாகவு மிப்படிக்கு முதலானதி
12. லொன்று பாதி பழியஞ்சிப் பேரேரி வெட்டவும் நின்ற ஒன்று பாதி பல ஏரியும் வெட்ட
13. வுமிப்படி சம்மதித்து நகர வ்யவஸ்தை பண்ணினோம் மதுராந்தகபுரத்து நகரத்தோம் உ.

# 14. செட்டித் திருக்கோணம் கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன்,** அரியலூர்
**பெ. இரவிச்சந்திரன்,** அரியலூர்,
**வே. செவ்வேள்,** அரியலூர்

**14 : 1**

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், உடையார்பாளையம் வட்டம், செட்டித் திருக்கோணம் இரணேஸ்வரர் கோயில் கருவறை வடக்கு, மேற்கு, தெற்குச் சுவர் பீடம்.

**காலம்** : முதலாம் இராஜாதிராஜன், யா:35, கி.பி.1053.

**செய்தி** : இவ்வூரின் பெயர் திருக்குன்றம் என்றும் கோயிலின் பெயர் இரணசிங்க ஈஸ்வரமுடைய மகாதேவர் எனவும் குறிப்பிடப் பெறுகிறது. இப்பெயர்கள் இன்று செட்டித்திருக்கோணம் எனவும், இரணேஸ்வரர் எனவும் மருவி வழங்கப்படுகிறது. இவ்வூர் ஸ்ரீவானவன்மகாதேவிச் சதுர்வேதிமங்கலத்தின் மேற்குப் பிடாகையாக இருந்தது. இச்சதுர்வேதி மங்கலத்தின் ஊர்ச்சபை இவ்வூரில் உள்ள நடுவில் திருமுற்றம் என அழைக்கப்பட்ட பெருமாள் கோயிலின் திருமுற்றத்தில் கூட்டம் கூடி இருந்து திருக்குன்றம் இரணசிங்க ஈஸ்வரமுடைய மகாதேவர் கோயிலுக்காக பதினொன்றரை வேலி நன்செய் நிலத்தை 25 கழஞ்சுப் பொன்னுக்கு இறையிலி தேவதானமாக விற்றது. இவ்விற்பனைப் பத்திரத்தில் பலர் கையொப்பம் இட்டுள்ளனர். நிலத்தின் எல்லைகளில் திரு நாராயணப் பேரேரி, ஊர்குளம், ஐவர்குளம், அடியார்குளம், சங்கயன் குழி ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜகேசரி பந்மற்க்கு யாண்டு 35-வது வடகரை ப்ரஹ்மதேயம் ஸ்ரீ வாநவந் மஹாதேவிச் சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி பெருமக்களோம் எங்களூர் மேல் பிடாகை திருக்குன்றத்து இரணசிங்க ஈஸ்வரமுடைய மஹாதேவற்க்கு இவ்வூர் நடுவில் திருமுற்றத்து இருந்து ஸபையோம் விலையாவணம் செய்து குடுத்த நிலமாவது திருநாராயணப் பேரேரிகீழ் கரைக்கு கிழக்கும் தென்பாற்கெல்லை திருக்குன்றத்து ஊர் குளத்துக்கு வடக்கும் கீழ்பாற்கெல்லை ஐவர்குளமும் அடியார்க்குளமுட்பட காஞ்சிரம செய்க்கு மேற்க்கும் வடபாற்க்கெல்லை சங்கயன் குழிக்கு தெற்கு நடுவுள் பட்ட நிலம் பதிநொன்றரை வேலியும் இமஹாதேவற்க்கு விற்று இந்நிலத்துக்கு எம்மில்லிசைந்த விலைப்பொருள் இதேவர் ஆதி ஸண்டேஸ்வர தேவற்காக இதேவர் ஸிவப்ராஹ்மணக் காணி உடைய கௌஸிகன் நீலகண்டன் சந்திரசேகரன் பக்கல் நாங்கள் கொண்ட

பொன்மாடையோடொக்கும் குடிஞைக் கல்லால் கொண்ட பொன் இருபத்தைங் கழஞ்சும் இதேவர்க்கு ஆவணக்களரியே கைக்செலக் கொண்டு (விற்று) (ஸா)ஸ்வதிகம் சன்திராதித்தவற் இறையிலி தேவதாநமாக அநுபவிக்க பெறுவாராக

2. இதேவர் இரணசிங்க ஈஸ்வரமுடைய மஹாதேவற்க்கு விற்று குடுத்தோம் ஸ்ரீவாநவந்மாதேவி சதுவேதிமங்கலத்து ஸபையோம் இப்பிரமாணப்படி கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவார்களாக பிரமாணம் செய்து குடுத்தோம் பெருங்குறிப் பெருமக்களோம் இவர்கள் பணியால் எழுதிநேன் மத்தியஸ்த்தநாந வடுகன் கேசரியேன் இவை என்நெழுத்து இப்படிக்கு ஸபைக்கு சமைன்து இவூர் ப்ராஹ்மணந் பாரத்வாஜ கேரள பட்ட ஸபஸ்ரயநேன் இவை என் எழுத்து இப்படியறிவேன் இவூர் வைகாநஸன் தேவன் சக்கரபாணியேன் இப்படி அறிவேன் இவூர் வைகாநஸன் காரி தாமோதிரபட்டநேன் இப்படி பணியால் மத்யஸ்தன் அறுநூற்றெண்மநாந வடுகன் முந்நூற்றுவநேன் இப்படி பணியால் மத்யஸ்தன் எழுநூற்றுவநேன் இப்படி பணியால் இவூர் மத்யஸ்தன் காரி காடநாந ஆறாயிரத்து எழுநூற்றுவநேன் இப்படி பணியால் மத்யஸ்தன் ப்ரஹ்மப்ரியநாந தேவடி ராகவநேன்.

**14 : 2**

**இடம்** : இரணேஸ்வரர் கோயில் கருவறை மேற்கு, தெற்குச் சுவர் முப்பட்டைக் குமுத பீடம்.

**காலம்** : முதலாம் குலோத்துங்கன், யா:24, கி.பி.1094.

**செய்தி** : வடகரை இராஜேந்திரசிங்க வளநாட்டு மேல்காரைக்காட்டுச் சென்னிவலக்கூற்றத்து உறத்தூரைச் சேர்ந்த சுருதிமான் வேளான் மாழதனன் என்பவர் கங்கை நாடாழ்வான் சேதனன் என்பவரைக் கொன்றுவிட்டதாகத் தெரிகிறது. இந்த பகை தீருவதற்கு திருக்குன்றத்து மாதேவர் இரணசிங்க ஈஸ்வரமுடையார் கோயிலில் 32 விளக்குகளை இவர் ஏற்றி வைத்துள்ளார். இக்கல்வெட்டின் தொடக்கப்பகுதியில் முதலாம் இராஜாதிராஜனின் மெய்க்கீர்த்தியின் ஒரு வரி எழுதப்பட்டு முற்றுப் பெறாமல் உள்ளது.

**கல்வெட்டு :**

1. திங்களேர் வளர அங்கதிர்கட.......... ளங்கள் லகிய வட திசை கங்கையுந் தெந்றிசை இலங்கையும்...... ... தண்டார்க் கொடதாதை... ....

ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்து நாலாவது வடகரை ராஜேந்திர சிங்க வளநாட்டு மேல் காரைக்காட்டு செந்நி வலக் கூற்றத்து உறத்தூர்காணி உடைய சூனிமாந் வேளாந் மாழதனா..........

2. கங்கை னாடாழ்வாந் சேதநன் பட.......... கக்கு வைசத பகை திருந்த வேண்டுமென்று எல்லாரு சொல்ல சம்மதித்து திருக்குந்றத்து மாதேவர் இரணசிங்க ஈஸ்வரமுடையார்க்கு விளக்கு முப்பத்திரண்டும் சீராளந் துறந்தருப
3. .......... இருவர்.......... கனகந்.......... (கல்வெட்டு சில இடங்களில் மிகவும் சிதைந்துள்ளது)

**14 : 3**

**இடம்** : இரணேஸ்வரர் கோயில் சுப்பிரமணியர் சந்நிதி தூண் நான்கு பக்கத்திலும் உள்ளது.

**காலம்** : முதலாம் இராஜாதிராஜன், யா : 26, கி.பி. 1044.

**செய்தி** : இராஜேந்திரசிங்கப் பேராற்றில் இராஜேந்திர சோழன் கலிங்கு என்னும் தண்ணீர் தடுப்பு அமைப்பைக் கட்டிய சந்திரசேகரன் மேற்றளியான் சோழேந்திரசிங்கப் பெருந்தச்சன் என்ற தச்ச ஆச்சாரியானுக்குக் காணியாக நிலம் கொடுக்கப்பட்டது. அந்த நிலம் ஆச்சாரியபோகம் என அழைக்கப்பட்டது. அந்நிலம் கிடாரங் கொண்டசோழ வளநாட்டில் கலிங்கு சுட்டி என்ற ஊரில் இருந்தது. இந்த கல்வெட்டு எழுதப் பெற்றுள்ள தூணின் இரண்டு பக்கங்கள் சுவரினால் மறைக்கப்பட்டுள்ளது. எனவே கல்வெட்டை முழுமையாகப் படிக்க முடியவில்லை.

**இரண்டாம் பக்கம்**

1.
2.
3. .......... ந்றிநால யாண்
4. டு இருபத்து ஆறாவ
5. து ராஜேந்த்ர சிங்கப்
6. பேராற்றில் ராஜே
7. ந்த்ர சோழந் கலிங்
8. கு படுத்த தச்சாஸா
9. ர்யந் சந்திரசேகரந்
10. மேற்றளியாந் சே
11. சாளேந்திர சிங்கப்
12. பெருந்தச்சநுக்கு
13. காணியாக குடுத்
14. த நிலம் கிடாரங்
15. கொண்ட சோழ

16. வள நாட்டு கலிங்

17. கு சூட்டித்தவிர்வா

## மூன்றாம் பக்கம்

1.

2.

3.

4.

5. .......... நிலம் எட்

6. டேமுக்காலே மூ

7. ந்று மா முக்காணி

8. க் கீழெட்டு மாவில்

9. இவநுக்கு ஆச்சா

10. ர்ய போகமாக கு

11. டுத்த நிலம் ஸ்ரீசே

12. சாழசிகாமணி வ

13. திக்கு மேற்கு சோ

14. ழ.......... வாக்கா

15. லுக்கு வடக்கு க கண்

16. ணாற்று ச த்து.........

17. ண்ட நில.. ......

# 15. பென்னக்கோணம் கல்வெட்டுக்கள்

இல. தியாகராஜன், அரியலூர்

15 : 1

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம் பென்னக்கோணம் அருள்மிகு நறுமலர் பூங்கோதாம்பிகை உடனுறை திருமருதாந்தீஸ்வரர் கோயில் மகாமண்டபத் தெற்குச்சுவர்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:10, கி.பி.1188

**செய்தி** : கல்வெட்டில் இவ்வூரின் பெயர் பெருநெற்குன்றம் எனவும் கோயிலின் பெயர் திருமதுராந்தக ஈஸ்வரமுடையநாயனார் கோயில் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோயிலை அஞ்சாதபெருமாள் என்பவர் கட்டியுள்ளார்.

1. திருபுவநச் சக்கரவத்திகள் மதுரையும் பாண்டியன் முடித்தலையும்
2. கொண்டருளின ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்க்கு யாண்டு ய
3. ஆவது பெருநெற்குன்றத்து உடையார் திருமதுராந்தக ஈஸ்வரமுடைய
4. நாயனார் கோயில் அஞ்சாதபெருமாள் செ
5. ய்வித்தான் சிறுபாக்கமுடையான் செ..........
6. சம்பந்த வேளானான குளுப்பாள..........

15 : 2

**இடம்** : மாடவீதி நடுவில் நடப்பட்டிருக்கும் கல்பலகை.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:11, கி.பி.1189.

**செய்தி** : இக்கோயில் திருமாளிகையை பரவாயைச் சேர்ந்த நாதன் ஓம் அழகியார் கட்டியுள்ளார். பெருநெற்குன்றம் என்ற பெயர் இன்று பென்னக்கோணம் என மாறி உள்ளது. இது விஜயநகர காலத்து தெலுங்கு மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட மொழி தாக்கத்தால் ஏற்பட்ட மாற்றமாகும். இவ்வூர் வடகரை இராஜ சிங்க வளநாட்டு உகளூர்க் கூற்றம் என்ற நாட்டுப் பிரிவுகளின் கீழ் இருந்துள்ளது. உகளூர், பரவாய் ஆகிய ஊர்கள் பென்னக்கோணம் அருகில் உள்ளன.

1 ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்க
2. ரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோ
3. ழ தேவர்க்கு யாண்டு
4. யக - வது வடகரை இரா
5. சசிங்க வளநாட்டு உகளூ
6. ற்க் கூற்றத்துப் பெரு

7. நெற்குன்றத்து வுடையா
8. ர் திருமதுராந்தக ஈஸ்வ
9. ரமுடைய நாயநார் கோ
10. யிற் திருமாளிகை பரவ
11. ராய் உடையார் நாதன் ஒ
12. மழகியார் தன்மம்

15 : 3

**இடம்** : மகாமண்டப உள்புறம் தூண் வரிசை - வடபுறம் 3வது தூணில்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:12, கி.பி.1190.

**செய்தி** : மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயிலில் நெறிகொண்டான் இராமன் என்பவர் தூண் செய்து வைத்துள்ளார்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீதிருபுவ
2. னச் சக்கரவத்திகள்
3. ஸ்ரீ குலோத்துங்க சே
4. சாழ தேவற்கு யாண்
5. டு(ய)உ வது பெருநற்
6. குந்றத்து மதுராந்
7. தக யீஸ்வரமுடை
8. யார் கோயிலில்
9. தூண்
10. இட்டா
11. ர் நெறி கொண்
12. டான் ரா
13. மந்.

15 : 4

**இடம்** : மகாமண்டப உள்புறம் தென்புறத்தூண் வரிசை 3-வது தூண் உத்திரப்பகுதி

**செய்தி** : பெருநெற்குன்றத்தைச் சேர்ந்த குணாவல் சேனன் என்பவர் தூணின் உத்திரப்பகுதியைச் செய்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ பெருநற்குன்றமுடையான் குணாவல் சேநன் செய்வித்தாந்
2. இவ்வுத்திரம்

15 : 5

**இடம்** : கருவறைத் தென்புறச்சுவர் (தட்சணாமூர்த்தி கோஷ்டத்தின் இடப்புறம்).

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:14, கி.பி.1193.

**செய்தி** : மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயிலின் மேல் வியாளப்படை என்ற கட்டிடப்பகுதியைப் பெருநெற்குன்றத்துக் கீழை வடசேரியைச் சேர்ந்த சோமன் வடுகன் என்பவர் கட்டியுள்ளார். கீழை வடசேரி என்ற பகுதி இன்று கீழக்குடிக்காடு என்ற பெயரில் பென்னக்கோணத்தின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதுரை கொண்டு பாண்டியன் முடித்தலை கொ
2. ண்டருளின ஸ்ரீ கொலோத்துங்க சோழதேவற்க்கு யாண்டு 14
3. வது பெருநெற்குன்றத்து உடையார் திருமதுராந்தக ஈஸ்வரமுடைய
4. நாயனார் கோயிலின் மேல் வியாளப்படை செய்வித்தான் பெ
5. ருநெற்குன்றத்து கீழை வடசேரி உடையான் சோமன் வடுகன்

15 : 6

**இடம்** : மகாமண்டப நுழைவுவாயில் உத்திரம்.

**காலம்** : மூன்றாம் இராஜராஜசோழன் (கி.பி.1216 – 1257), யா:3, கி.பி.1219.

**செய்தி** : இக்கோயிலின் திருக்கதவை தேவன் சீரனான சோழ மூவேந்த வேளான் என்பவர் செய்துள்ளார். இவர் உத்துங்கதொங்க வளநாட்டு குன்றக்கூற்றத்துப் புலிமிசை என்ற ஊரைச் சேர்ந்தவர் ஆவார். அரியலூருக்கு அருகே பிலிமிசை என்ற ஊர் உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ இராஜஇராஜ தேவர்க்கு யாண்டு உ வது இத்திருக்கதவு செய்வித்தாந் வடகரை
2. உத்துங்கதொங்க வளநாட்டு குன்றக்கூற்றத்து புலிமிசை உடையான் தேவன் சீரனான
3. சோழ மூவேந்த வேளான் தந்மம் ஸ்வஸ்திஸ்ரீ உ.

15 : 7

**இடம்** : அர்த்த மண்டப வடபுற துர்கையார் தேவகோஷ்டம்

**செய்தி** : இந்த துர்க்கை சிற்பத்தை எழுந்தருளிவித்தவர் பெருநெற்குன்றத்து மேலை வடசேரியைச் சேர்ந்த தேவன்படியான் என்பவர் ஆவார். மேலைவடசேரி என்ற பகுதி இன்று மேலக்குடிகாடு எனவும் லப்பைக் குடிக்காடு எனவும் அழைக்கப்படுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ இந்த துர்க்கையாரை எழுந்தருளுவித்தான் பெருநெ
2. ற்குன்றத்து மேல்வடசேரிவுடையான் தேவன் படியான்

15 : 8

**இடம்** : அர்த்தமண்டபத் தென்புறச் சுவர்

**காலம்** : மூன்றாம் இராஜராஜசோழன், யா:5, கி.பி.1221.

**செய்தி** : மதுராந்தக ஈஸ்வரமுடைய நாயநார் கோயிலில் திருநந்தாவிளக்கு எரிக்க 150 காசுகளும் 80 பலம் எடையுடைய ஒரு குத்துவிளக்கையும் உமையாண்டாள்சாணி என்ற பிராமணப் பெண் வழங்கியுள்ளார். இவர் இராஜராஜ வளநாட்டுக் கலார் கூற்றத்துப் பிரம்மதேயம் திருமங்கலம் என்ற ஊரைச் சேர்ந்த ஆத்ரையன்

யக்ஞன் என்ற பிராமணரின் மகள் ஆவார். இப்பெண்மணியிடம் இக்கொடையை இக்கோயில் சிவப்பிராமணர்கள் பெற்றுக் கொண்டு விளக்கு எரிக்க ஒப்புக் கொண்டனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவந ஸக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவற்க்கு யாண்டு ரு - வது வடகரை ராஜ
2. ராஜ வளநாட்டுக் கலாற்கூற்றம் ப்ரஹ்மதேயந் திருமங்கலத்து அத்ரையந் ய
3. ஜ்ஞந் மகள் ப்ராஹ்மணி உமையாண்டாள் சானியேன் என்பர்த்தா அபிமர்த்த
4. தேவர் முதுகணாக ராஜஸிங்க வளநாட்டு உகளூற் கூற்றத்து பெருநெ
5. ற்குன்றத்து உடையார் திருமதுராந்தக ஈஸ்வரமுடைய நாயனாற்க்கு தி
6. ருநந்தா விளக்கெரிக்கைக்கு காஸ்யபந் அரைசு உய்யநின்றா
7. டியு மிக்குடியில் தாயந்தேவன் மருதன் சென்னியுள்ளிட்டாரு
8. முபையங் கைக்கொண்ட காசு எருய இக்காசு நூற்றைம்ப
9. தும் நெய்யாலெரிக்கக் கொண்டோம் திருக்குத்தி விளக்கொன்றி
10. னால் எடை எண்பதும் ஸ்ரீ சந்திராதித்யவத் பன்மாஹேஸ்வர ரக்ஷை
11. இவ்வுபையம் இப்படி ஸம்மதித்து கைக்கொண்டோம் இக் கே
12. காயில் காணி உடைய முற்சொல்லப்பட்ட வனைவோம் : ஹர

15 : 9

**இடம்** : அர்த்தமண்டப தென்புறச்சுவர்

**காலம்** : மூன்றாம் இராஜராஜசோழன், யா:12, கி.பி. 1228.

**செய்தி** : தாடப்பாவையுடையான் மருந்தாழ்வானான சிறுத்தொண்ட நம்பி என்பவர் இக்கோயில் இறைவனை அமாவாஸை தோறும் திருவீதிகளில் எழுந்தருளச் செய்ய ஆகும் செலவுக்கும் அந்நாட்களில் திருவமுது செய்விக்கவும் ஆகும் செலவுகளுக்கும் மற்றும் தீபந்தம் பிடிக்கவும் வீதிகளைத் திருவலகு கொண்டு சுத்தம் செய்யவும் மற்றும் பலவகை செலவுகளுக்கும் என 106 காசுகளை முதலீடாக கொடுத்துள்ளார். இதைப் பெற்றுக்கொண்டு இப்பணிகளைச் செய்ய இக்கோயில் சிவப்பிராமணர்கள் ஒப்புக் கொண்டனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ ராஜகேஸரி வர்மரான
2. ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு யஉ வது வடகரை ராஜசிங்க வ
3. ள நாட்டு உகளூற்க் கூற்றத்துப் பெருநெற்குன்றமுடையார் திரு
4 மதுராந்தக ஈஸ்வரமுடைய நாயனார் (அமாவாஸி தோறும் திருநாள்)
5., எழுந்தருளத் தாடப் பாவையுடையான் மருந்தாழ்வானான சிறுதொண்ட நம்பி

6. பக்கல் இக்கோயில் காணியுடைய சிவப்பிராமணன் காஸ்யபன் அரசன் உ
7. ய்ய நின்றாடி பட்டனுங் காஸ்யபன் தாயந்தேவனான ராசிங்க
8. பட்டனுங் காஸ்யபந் மருதன் சென்னி பட்டனுங் கௌ
9. ஸிகந் பிச்சன் மலைய பட்டனு மிவ்வனைவோமு மிவர் ப
10. க்கல் அமாவாஸி எழுந்தருளுவிக்க உபயங் கைகொ
11. ண்ட அன்றாடு நற்காசு 106 இக்காசு நூற்றாறு கொண்டு அமாவாஸி
12. எழுந்தருளு விக்குமிடத்து..........
13. க் காப்பு மஞ்சட்காப்பு நெல்லிக்காப்புஞ் சாத்தித் திருமஞ்சனம் ப
14. ண்ணவுந் திருஅமுதுக்கு அரிசி முக்குறுணியுங் கறியமுது [ம்]
15. தின்று பலமு மிளகு இரண்டரை செவிடு முப்பமுது உழக்கு
16. நெய்யமுது ஆழாக்குந் தயிரமுது நாழி அடைக்காயமுது பாக்கு இருப
17. து யிலையமுது நாற்பது மமுது செய்விக்கவுந் திருவீதியில் எழுந்தருளுமி
18. டத்துத் திருவலகு இடுவிக்க கடவர்களாகவும் மாவேனனை அருநாழி
19. யும் பந்த முப்புதுமிட்டு எழுந்தருளுவிக்க கடவர்களாகவு மிக்கோ
20. யிற் காணி உடைய குலாவனும்..... இராசனுங்.....
21. அன்றாடு நற்காசு இவர்கள் கொண்ட காசு பத்துங் கைக்கொண்டு
22. அற்றைக்கு வேண்டும்..... மிடக்கடவர்களாகவு மிக்கோயிற்கா
23. ணி உடைய உகச்ச நாயகயானுங் குலாவன் உகளூர் நாட்டு வேளா
24. நுமிவ்விருவருங் கைக்கொண்ட அன்றாடு நற்காசு இருபதும் கொண்டு
25. மூன்றாளிட்டுக் கொள்ளக் கடவர்களாகவு மிப்படி இவ்வனைவரு
26. ம்மே எழுந்தருளுவிப்பார்களாகவு உபயங்குடுத்தேந் தாடபா
27. வை உடையான் மருந்தாழ்வானான சிறுத்தொண்ட நம்பி
28. யேன் இது பன்மாஹேஸ்வரர் ரக்ஷை ஸந்த்ராதித்யவத் : உ

**15 : 10**

**இடம்** : அர்த்தமண்டப தென்புறச் சுவர்.

**காலம்** : மூன்றாம் இராஜராஜசோழன், யா:15, கி.பி. 1231.

**செய்தி** : இக்கோயிலில் முன்னாளில் அமாவாஸி எழுந்தருள தாடபாவை உடையார் கொடுத்த காசு மற்றும் விளக்கு எரிக்க உமையாண்டாள் கொடுத்த காசு ஆகியவற்றைப் பெற்றுக் கொண்ட சிவபிராமணர்கள் அவற்றை தங்களிடையே பங்கிட்டுக் கொண்டு பராமரித்து வந்த செய்தி பற்றிக் கூறுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ இராஜராஜ தேவற்கு யாண்டு யரு வது பெருநெற்குன்ற
2. த்து உடையார் திருமதுராந்தக ஈஸ்வரமுடைய நாயனார் கோயிலி

3. ல் முன்னாளில் காஸ்யபன் அரசன் உய்ய நின்றாடி பட்டன் அமாவாஸி உவாவுக்கு

4. த் தாடபா(வை) உடையார் பக்கல் கொண்ட உபையமும் உமையான்றாள் பக்கல்

5. திருநந்தாவிளக்கும் சந்திவிளக்குப் பதினாறும் இவ்வுபையங்களுக்கு யெங்க

6. ள் விழுக்காட்டால் நாள் ஆறரையே மூன்று மாக்காணி முந்திரிகைக் கிடக்காலுக்

7. கும் உபையம் நானே கைக்கொள்கையில் என் பாதியாளன் திருப்புறம் பியமுடையா

8. ந் திருமாந்துறை நம்பி ஒபாதி இன்னாளிற் செம்பாதிக்கும் இவ் வுய்ய நின்றாடி தே

9. வனான இராசிங்கபட்டன் இத்திருமாந்துறை நம்பி ஒபாதி உபையத்துக்காகத் திருப்பணி

10. க்கு ஒடுக்கின காசு நாலாயிரம் இக்காசு நாலாயிரமும் ஸ்ரீ பண்டாரத்தே.....

11. ந் நாளால் வந்த உபையம் ஸ்ரீபண்டாரத்தே இட்டு செலுத்த இது ஸந்த்ராதித்யவத்

12. இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை : ஸ்வஸ்திஸ்ரீ :-

# 16. மருவத்தூர் கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன்,** அரியலூர்
**பெ. இரவிச்சந்திரன்,** அரியலூர்

**16 : 1**

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர்வட்டம், மருவத்தூர் அழகபுரீசர் கோயில் மகாமண்டப வடக்குச் சுவர் பட்டிகை.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:2, கி.பி. 1180.

**செய்தி** : பேரகழி கோயிலை தென்னவராயனின் தந்தை (பிதா) உபானாதி முதல் தூபி பரியந்தமாகக் கருங்கல்லால் கற்றளியாகக் கட்டி சிவலிங்கப்பிரதிஷ்டையும் செய்து கருங்கல்லால் பிள்ளையார், சேத்ரபாலப் பிள்ளையார் உள்ளிட்ட தெய்வச் சிற்பங்களையும் செப்புத் திருமேனிகளையும் எழுந்தருளிவித்துள்ளார். இவ்வூரில் வாழ்ந்த புத்தூருடையான் தென்னவராயன் என்பவர் இக்கோயிலுக்குத் தேவதானமாக இவ்வூர் மேலைக்கழனியில் கால் செய் நிலமும், கீழைக்கழனியில் கால்செய் நிலமும் கொடுத்துள்ளார். இந்நிலங்கள் 14 அடி நீளமுடைய கோலால் அளந்து கொடுக்கப் பட்டுள்ளன. மேலும் இவ்வூர் முழுவதும் தென்னவராயனின் தந்தைக்குக் காணியாய் இருந்தது என்னும் செய்தியையும் இக்கல்வெட்டு தருகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது உத்துங்கதுங்க வளநாட்டு குந்றக்கூற்றத்துப் பேரகழியிலிருக்கும் புத்தூருடையாந் தெ(ன்னவராய)ன்னேந் தேவதானம் இட்டபடியாவது எங்கள் பிதா கொண்டுடைய காணியாய் வருகிற இப்பேரகழியிலே சிவலிங்கப் பிரதிட்டையும் பண்ணி உபானாதி தூபி
2. பரியந்தமாகத் திருக்கற்றளியுஞ் சாத்தி வினாயகப்பிள்ளையார் ஷேத்ரபாலப்பிள்ளையார் முதலான சிலா மூர்த்தங்களும் எழுந்தருளுவித்து திருமேனி நாயன்மாரையும் எழுந்தருளுவித்து இந்நாயனார் அழ(கியநாயன)ார் தேவதானம் பதிநாலடியும் விலக்கடியுமாந கோலால் இவ்வூர் மேலைக் கழனியிற் காற்செய்யும் கீழைக் கழனியிற்காற் செய்யும் இக்கோலாலே.

**16 : 2**

**இடம்** : அழகபுரீசர்கோயில் வடக்குப் பிரகாரத்தில் உள்ள நடராஜர் சன்னதி கிழக்குச் சுவர்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்க சோழன், யா:4, கி.பி. 1182.

**செய்தி** : குன்றக்கூற்றத்து மூஞ்சிப்பாடி என்ற ஊரைச்சேர்ந்த சீருடையான் கேசன் என்பவர் இந்த அழகியநாயனார் கோயிலில் க்ஷேத்திரபாலப்

பிள்ளையாருக்கு எனத் தனியாகக் கோயிலும் கட்டி க்ஷேத்திரபாலப் பிள்ளையாரையும் பிரதிஷ்டை செய்துள்ளார். மேலும் இரண்டு சந்திவிளக்குகளை அச்சன்னதியில் நாள்தோறும் எரிப்பதற்கு இக்கோயில் சிவப்பிராமணர்களிடம் 50 காசுகளை முதலீடாகவும் கொடுத்துள்ளார். மூஞ்சிப்பாடி என்ற ஊர் இக்காலத்தில் மூங்கில்பாடி என்ற பெயருடன் மருவத்தூரின் அருகே உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவநச் சக்ரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க
2. சோழ தேவர்க்கு யாண்டு நாலாவது வடகரை குன்ற
3. க் கூற்றமாந உத்துங்கதுங்க வளநாட்டு பேரகழியில்
4. உடையார் அழகிய நாயநார் கோயிலில் க்ஷேத்திரபால பிள்ளை
5. யார் கோயிலும் செய்து பிள்ளையாரையும் எழுன்தருளி
6. வித்த இந்நாட்டு மூஞ்சிப்பாடியுடையான் சீருடையான் கே
7. சந் இந்த பிள்ளையாற்கு வைத்த சந்திவிளக்கு இரண்டுக்கும் இ
8. நாயநார் கோயிலில் காணியுடைய சிவப்பிராமணர் கௌ
9. தமந் பழுவை கண்டந் உள்ளிட்டாரும் கௌதமந் ஆறணியந்
10. உடையாந் உள்ளிட்டாரும் புல்லாலி நாட்டு பெருமாந் பெரியா
11. ழ்வாநும் இவனைவோம் கைக்கொண்ட காசு ருய இக்காசு ஐ
12. ம்பதுங் கைக்கொண்டு இவ்வாட்டை ஆநி மாஸமுதல் இந்
13. த சந்திவிளக்கு இரண்டும் இக்கோயிலில் படி கடந்து புக்கு மு
14. றை செய்(வார்களே உப)யமாகச் செலுத்தக்கடவோ
15. மாக ஸம்மதித்தோம் இவ்வனைவோம் இப்படிக்கு இவை ப
16. ழுவை கண்டந் எழுத்து இப்படிக்கு இவை ஆறணியந் உ
17. டையாந் எழுத்து இப்படிக்கு இவை நாட்டுப் பெருமாந் பெரியா
18. ந் எழுத்து.

**16 : 3**

**இடம்** : அழகபுரீசர்கோயில் சோபானமண்டப படிக்கட்டு மற்றும் வாயிற்படி

**காலம்** : கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

**கல்வெட்டு : 1**

1. சங்கர நாற
2. யண முதலியா
3. ர் சதாசேறுவை

**கல்வெட்டு : 2**

1. சின்னிய்ய
2. முதலியார் சதா
3. சேருவை

**கல்வெட்டு : 3**

1. அம்பாயிர
   நட்டுவன்
2. சதாசேர்வை

**16 : 4**

**இடம்** : மருவத்தூர் வரதராஜப் பெருமாள் கோயில் கருவறைத் தெற்குச் சுவர் முப்பட்டைக் குமுத பீடம்.

**காலம்** : கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு, சோழர் காலம்.

**செய்தி** : இக்கோயில் அதிட்டான பீடப்பகுதியாக உள்ள கட்டிடத்தைக் கட்டியவர் தொண்டைமான் என்பவர் என்னும் தகவலைத் தருகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ இ படை தொண்டைமான்.

**16 : 5**

**இடம்** : பேரளி (பெரம்பலூர் மாவட்டம்), - தண்ணீர்ப்பந்தல் என்ற இடத்தில் நடப்பட்டுள்ள கற்பலகை.

**காலம்** : கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : பேறழியில் இருக்கும் மூர்த்தி கருணானந்த சாமியார் மடம், தண்ணீர்ப்பந்தல், நந்தவனம், நடைகிணறு ஆகியவை பற்றிக் குறிப்பிடுகிறது.

1. உ யீஸ்வற
2. ஞூம் பிறட்டா
3. சி *மீ* யக - பே
4. றழிலிறுக்கும்
5. மூற்தி கருணாநந்த
6. சாமியார் மடம் த
7 ண்ணீர் பந்தல் ந
8. ந்தவாநம் நடை
9. கிணரு யிது தரும
10. உற்பயம் யிதுக்கு
11. யாறா மொருத்தர்
12. விகர்தம் செய்
13. தால்
14. காசியிலே கெ
15. ங்கை கரையி
16. லே காறாம் பசு
17. வை கொன்ற
18. தோஷத்திலே
19. போவார்கள்
20. யிதை விள
21. ங்க வத்தாற்
22. க்கு மோக்ஷம்
23. அடைவர்.

# 17. சித்தளி கல்வெட்டுகள்

இல. தியாகராஜன், அரியலூர்
பி. முருகானந்தம், திருச்சி
பெ. இரவிச்சந்திரன், அரியலூர்
ப. சாய்கவிதா, அரியலூர்
வே. செய்வேள், விக்கிரமங்கலம்

17 : 1

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம் சித்தளி வீரபுரீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபத் தென்சுவர்

**காலம்** : மூன்றாம் இராசராச சோழன், யா:5, கி.பி.1221.

**செய்தி** : குன்றக்கூற்றத்து சிற்றகழி உடையார் திருவீரட்டானமுடைய நாயனார் கோயிலில் பணிசெய்த சிவப்பிராமணர்கள் இக்கோயில் ஸ்ரீமாஹேஸ்வரக் கண்காணி செய்பவர்கள், கோயில் கணக்கன், ஊரவர்கள் ஆகிய அனைவருக்கும் தெரிவித்துக் கொள்ளும் வகையில் இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. சிவப்பிராமணர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கோயிலுக்குச் சொந்தமாக இருந்த பத்து மா புன்செய் நிலத்தை தாங்களே பயிர்செய்து கொண்டு அதற்கு ஈடாக இக்கோயிலில் பத்து சந்திவிளக்கை எரித்து பராமரித்து வருவதற்கு ஒப்புக் கொண்டதை இக்கல்வெட்டு கூறுகிறது. சிற்றகழி என்ற ஊர்ப்பெயர் மருவி இன்று சித்தளி என அழைக்கப்படுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு ரு-வது குன்றத்கூற்றத்து சிற்றகழி உடை
2. யார் திருவீரட்டானமுடைய நாயநார் கோயில் ஸ்ரீமாஹேஸ்வரக் கண்காணி செய்வார்களும்.....
3. .... கோயிற் கணக்கனுக்கும் ஊரவர்க்கும் கோயில் முப்பது வட்டத் காணியுடைய
4. சிவப்பிராமணன் காச்யபனான மணி..... சொக்கனும் பெரியதேவனும் பெரியா ..
5. .... சொக்கனும் சொக்கன் மணியனும் இவ்வனைவோம் கொண்ட சந்திவிளக்கு ய-இ
6. ந்த விளக்கு பத்து எரிக்கக் கடவோமாகவும் எரிக்குமிடத்து இந்நாயனார் தேவதான
7. மான தெற்கிற் புன்செய் நிலம் பத்து மா இந்நிலம் நாங்களே பயிர் செய்து கொண்டு
8. இவ்விளகது யெரிக்கக் கடவோமாகவும் இந்த நிலம யாவனொருவந் படி கடந்து புக கடவா
9. ராகவும்

17 : 2

**இடம்** : கருவறை நுழைவாயில் அருவுகால் (இடப்பக்கம்)

**காலம்** : கி.பி. 1221 (மூன்றாம் இராஜராஜன்)

**செய்தி** : இக்கோயில் நுழைவாயில் நிலையையும் படியையும் ஸ்ரீசோழன் திருவன் இளங்கோ என்பவர் செய்துள்ளார்.

1. ஸ்ரீசோழந்
2. திருவன்இள
3. ங்கோ செ
4. ய்வித்த நி
5. லையும் ப
6. டியும்

17 : 3

**இடம்** : கருவறை நுழைவாயில் அருவுகால் (வலப்பக்கம்)

**காலம்** : கி.பி. 1221, (மூன்றாம் இராஜராஜன்)

**செய்தி** : இக்கோயில் நுழைவாயில் அருவுகால் கட்ட இரண்டு கற்களை சாத்தப்பாடி உடையான் சூற்றியன் தெற்றி என்பவர் கொடுத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ சாத்தப்பாடி உடை
2. யான் சூற்றியன் தெற்றி இட்
3. டான் கற்கவி இரண்டு

17 : 4

**இடம்** : கருவறை நுழைவாயில் மேல்நிலையில்.

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், கி.பி. 1221.

**செய்தி** : சேரமான் குப்பை என்பவர் கருவறை நுழைவாயில் மேல்நிலைப்படி கற்களை வழங்கியுள்ளார்.

1. ஸ்ரீசேரமான் குப்பை இட்ட கற்கவி

17 : 5

**இடம்** : முன்மண்டபத் தெற்குச் சுவர் ஜன்னல்

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், கி.பி. 1221.

**செய்தி** : சிற்றகழியைச் சேர்ந்த விளக்கத்தரையன் சொக்கன் என்பவர் முன் மண்டபத்திலுள்ள ஜன்னலை அமைத்துள்ளார்.

1. ஸ்ரீ சிற்றகழி விள்க்க
2. த் தரையன் சொக்கன்

17 : 6

**இடம்** : சித்தளி (பெரம்பலூர் வட்டம்) வரதராஜபெருமாள் கோயில் மகாமண்டப மேற்குச் சுவர்

**காலம்** : போசள மன்னர் வீரசோமீஸ்வரன், யா:4, கி.பி. 1237.

**செய்தி** : வீரசோமேஸ்வரனின் தளபதி ஹரிஹர தண்டநாயக்கர் என்பவர் 46 வேலி நிலம் இறையிலியாகச் சிற்றகழி தேவண்ணவிண்ணகர் எம்பெருமான் கோயிலுக்கும் தேவண்ணச் சதுர்வேதி மங்கலத்து பட்டர்களுக்கும் வழங்கிய செய்தியைத் தருகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீமந் மஹா ப்ரதாநி ஹரிஹர தண்ட நாயக்கனோலை
2. சிற்றகழி தேவண்ண விண்ணகர எம்பெருமான் கோயில் தாநத்தாரு
3. ம் தேவண்ணச் சதுர்வேதி மங்கலத்து பட்டர்களும் கண்டு பதுமா
4. த்தி அக்கன் தேவனுக்கு ரக்ஷாத்யமாக தேவன் ஸ்ரீஹஸ்தத்தாலே
5. தாரைஇறைப்பித்து இறையிலியாக இடுவித்த திருவிடையாட்
6. டம் நிலம் பதினாலு வேலியும் பட்டர்கள் நிலம் முப்பத்திருவேலி
7. யுமாகநிலம் நால்பத்து ஆறுவேலியும் தேவன் இராயஸப்படி வா
8. லிகண்டபுரத்து தொட்டிய கோலாலே நாலாவது தேவன் கூ
9. சுவர்க்கும் அக்கன் சிறுபிள்ளைகளுக்கும் தானத்தார்க்கும்
10. பட்டர்களுக்கும் ஏற என் அதிகாரி சோமண்ணனும் யாதவ
11. ராயனும் அளந்த திருவிடையாட்டம் நிலம் பதினாலு வேலியும்
12. பட்டர்கள் நிலம் முப்பத்திருவேலியுமாக நிலம் நால்பத்தறு வேலியும்
13. தேவன் இராஜஸப்படியே நாமும் இறையிலியாக விட்டோம் அனுபவிப்பதே.

17 : 7

**இடம்** : சித்தளி (பெரம்பலூர் வட்டம்) வரதராஜப்பெருமாள் கோயில் தென்சுவர்.

**காலம்** : போசள மன்னர் வீரசோமேஸ்வரன், யா:4, கி.பி. 1237.

**செய்தி** : வீரசோமேஸ்வரனின் மெய்க்கீர்த்தி எழுதப்பட்டுள்ளது. வெம்பார்பற்றில் குன்றகூற்றத்தில் சிற்றகழி கிராமம் இருந்துள்ளது. இவ்வூரைத் தேவண்ணச் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர் கொடுத்து பிரம்மதேய ஊராக இம்மன்னர் ஆக்கியுள்ளார். மேலும் இதில் 21 பிராமணர்களைக் குடியேற்றி ஆளுக்கு ஒரு வேலி நிலமும் வழங்கியுள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீஸமஸ்த புவநாஸ்ரய ஸ்ரீப்ருதிவி வல்லப மஹாராஜ ராஜபரமேஸ்வர துவராபதி புரவராதீஸ்வர யாதவ
2. குலாம் பரத்யமணி ஸர்வஸ்ஞ சூடாமணி மலராஜ ராஜ மலபருது கண்ட கத்ந ப்ரஸண்ட கண்டபேருண்ட நேகாங்க வீ
3. ரந் ஸஹாய ஸுரந் ஸநிவாரஸித்தி கிரிதுர்க்க மல்ல ஸலகந்தராம வைரிப கண்டீரவ மகத ராஜ்ய நிர்மூலந் பாண்டிய திஸாபத்த ஸோளராஜ்ய
4. ப்திரஷ்டாஸார்ய நிச்சங்க ப்ரதாப ஸக்ரவத்தி போசள ஸ்ரீவீரசோமேஸ்வர தேவரஸர் வெம்பார் ப
5. ற்றில் குன்றக்கூற்றத்து சிற்றகழி தேவண்ணச் சதுர்வேதிமங்கலமென்
6. னும் தேவதான அகர சதுர் பட்டர்கள் இருபத்திருவர்க்கும் சிற்றகழியில் புன்செய் நி
7. லம் இருபத்தொன்ப..... இறையிலியாக இட்டோம்.....
8. லாலே அளந்து கொண்டு இந்நிலத்துக்கு கல்வெட்டிக் கொண்டு.....
9. கண்ட ஸ்வஸ்திஸ்ரீமன் மஹாப்ரஸாயித்த தாயி பதுமாத்த அக்கன் ஓலை (குன்றக்கூற்ற)
10. த்து சிற்றகழியில் பிரிந்த தேவண்ணச் சருப்பேதி மங்கலத்துப் பட்டர்கள் இரு.....
11. செய் நிலத்திலே இவ்வூர்க்கும் மேலை ஏரிக்கும் ஓடைக்கும் மேற்கும் தென்பாற்கெ.....
12. மேல்பாற்கெல்லை பீலிபாடி எல்லைக்குக் கிழக்கு வடபாற்கெல்லை பீலிபாடி வழிக்கு.....
13. ......

சில இடங்களில் கல்வெட்டு சிதைந்தும் இறுதிவரி சிதைந்தும் உள்ளது.

**17 : 8**

**இடம்** : சித்தளி (பெரம்பலூர் வட்டம்) வரதராஜப் பெருமாள் மகாமண்டப வடக்குச்சுவர்

**காலம்** : (வீரசோமீஸ்வரன்)

**செய்தி** : சிற்றகழியில் உள்ள தேவண்ண விண்ணகர் எம்பெருமான் திருமுற்றம் (கோயில்) நாற்பத்தெண்ணாயிர ஸ்ரீமாஹேஸ்வரர்களின் பாதுகாப்பில் (ரக்ஷை) இருந்துள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திண்டீசுரன் ஓலை சாகரஞ் சூழ் வையகத்து பண்
2 டேயறஞ்செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதம் திறம்பாமல் சென்னி மேல வைத்

3. து சிற்றகழி தேவண்ண விண்ணகர எம்பெருமாள் திருமுற்றம் நாற்பத்தெண்

4. ணாயிர ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை

17 : 9

**இடம்** : சித்தளி (பெரம்பலூர் வட்டம்) வரதராஜப் பெருமாள் கோயில் மகாமண்டபத் தென்சுவர்

**காலம்** : மூன்றாம் இராசராசசோழன், யா:28, கி.பி. 1244.

**செய்தி** : மூன்றாம் இராஜராஜசோழனின் கீழ் சிற்றரசராக இருந்த வாண கோவரையன் என்பவரின் ஆணையாக இக்கல்வெட்டு உள்ளது. இவருடைய அதிகாரி சவுண்டபர் என்பவர் வாணகோவரையனுக்கு நன்மை ஏற்பட இந்த அகரத்தை (பிராமணர்கள் வாழும் ஊர்) உருவாக்கினார். இதில் குடியேறிய பிராமணர் 21 பேர்களுக்கு ஆளுக்கு ஒரு மனையும், ஒன்றரை புன்செய் நிலமும், வைத்திய விருத்திக்கு ஒரு மனையும் ஒன்றரை நிலமும் இவர் வழங்கியுள்ளார். அந்நிலம் மகதேசன்கோல் என்ற பெயருடைய கோலாலே அளந்து கொடுக்கப்பட்டது. மேலும் இவ்வூரில் பாடிகாப்பான் எனும் காவல் பணியைச் செய்பவர்களுக்கு மனையும் கால் நிலமும் கொடுக்கப்பட்டது.

1. ஸ்வஸ்திஸ்ரீ வாணகோவரையன் ஓலை சிற்றகழி ஊரவர் கண்டு தங்களூரில் இருபத்

2. தெட்டாவது முதல் மகனார் சவுண்(ட) பர் நமக்கு நன்றாக வைத்த (அகர)த்துக்குப்

3. பேர்கொண்ட பட்டர்கள் இருபத்தொருவர்க்கு தங்களூரிலே ஒருவர்க்கு ஒருமனையும் புன்

4. செய் நிலத்திலே ஒருவர்க்கு ஒன்றரையாக வந்த புன்செய் நிலம் முப்பத்தொன்றரை

5. யும் வைத்திய விருத்திக்கு ஒருமனையும் புன்செய் நிலத்திலே ஒன்றரை நிலமும்

6. ஆகப்பேர் இருபத்திருவருக்கும் மனை இருபத்திரண்டும் புன்செய் நிலம் முப்பத்திருவே

7. லியும் இறையிலி ஆக இட்டோம் இந்நிலம் மகதேசன் கோலாலே அளந்து கொ

8. ண்டு நமக்கு நன்றாக சந்திராதித்தவரையும் இறையிலியாக அனுபவிப்பார்களாகப்

9. பண்ணுவதே இவை வாணகோவரையன் எழுத்து உ

10. இப் பட்டர்கள் குடியிருக்

11. கிற மனைகளுக்கு நிலம் கா
12. லும் பாடிகாப்பானுள்
13. ளிட்ட பணிசெய் மக்களு
14. க்கு நிலம் காலும் ஆக நி
15. லம் முப்பத்திருவேலியும்
16. சந்திராதித்தவரையும் இ
17. றையிலி ஆக விட்டோம்
18. இந்நிலம் மகதேசன் கோலாலே
19. அளந்து கொண்டு அனுபவிப்பார்களாகப் பண்ணுவதே
20. (கன்னட மொழியில் கையெழுத்துள்ளது)

**17 : 10**

**இடம்** : சித்தளி (பெரம்பலூர் வட்டம்) விரத்தியாக்குளம் அருகே கிடக்கும் தனிக்கல் பலகை

**காலம்** : விஜயநகர மன்னர் விருப்பண்ண உடையார் சக வருஷம் 1309, கி.பி. 1387, தமிழ் வருஷம் : பிரபவ

**செய்தி** : விஜயநகர மன்னர் விருப்பண்ண உடையாரின் தளபதி முத்தரச உடையார் என்பவர் பிறப்பித்த ஆணை இந்த ஊர் காட்டப்பர் என்பவருக்கு ஜீவிதமாக இருந்தது. இவ்வூரில் நரசிங்க தேவர் என்பவர் புத்தேரி என்ற ஏரியை வெட்டினார். இந்த ஏரியின் கீழ் உள்ள நிலங்களில் பயிர் செய்தால் அந்த நிலங்களுக்கு முற்காலத்தில் விதிக்கப்பட்ட வரிகளின் படியே வரி விதிக்க வேண்டும் என்று கூறுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மஹாமண்டலேஸ்வரன்
2. ஹரி அரி இராச விபாடன் பா
3. ஷைக்குத்தப்பு மூவராயர் கண்டன்
4. ஸ்ரீ வீரவிருப்பண்ண உடையார்
5. பிறதுவி இராச்சியம் பண்ணி அருள
6. ா நின்ற ஸகாத்தம் 1309-ன் மேல்
7. செல்லா நின்ற பிறவ வருஷத்து
8. பூறுவ பக்ஷத்து திறயோதசி
9. யும் புதன்கிழமையும் பெ
10. ற்றஉரோசணி நாள் மஹா
11. ப் பிறதாநி முத்தரச உடை
12. யார் பட்டயம் குடுத்த ப
13. டி காட்டப்பர் சீவிதமா

14. ன வெம்பார் நாட்டு சிற்
15. றகழியில் நரசிங்க தேவர்
16. வெட்டின புத்தேரி கீழ்
17. காடும் வெட்டி கரம்
18. பை தித்தி நன்செயும் பு
19. ன் செயும் வான் பயிரு
20. ம் புன்பயிரும் பயிர்ச்
21. செய்து கொள்ளக் கட
22. வர்களாகவும் பயிற்செய்
23. த நிலத்துக்கு கடமை
24. பூற்வமரியாதியிலே கொ
25. காள்ளக் கடவராகவும் சந்திராதித்
26. தவரையும் செல்லக் க
27. ல் வெட்டிக் குடுத்த பட்டைய
28. மாக கொள்ளவும்.

# 18. வரகூர் கல்வெட்டுகள்

இல. தியாகராஜன், அரியலூர்
பெ. இரவிச்சந்திரன், அரியலூர்

18 : 1

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம் வரகூர் சிவலோகமுடையார் கோயில் மகாமண்டபத் தெற்குச்சுவர்

**காலம்** : மூன்றாம் இராசராசன் சோழன், யா:20, கி.பி.1236.

**செய்தி** : யாதண்ணர் என்பவர் சிவலோகமுடையார் கோயிலுக்கு நூற்றைம்பது காசு கொடுத்துள்ளார். கல்வெட்டு சிதைந்துள்ளதால் கொடை நோக்கம் பற்றி அறியமுடியவில்லை. இவர் *கண்ணனூரில்* வல்லாளதேவன் என்னும் போசள மன்னர் வீரசோமேஸ்வரன் தலைநகரம் அமைத்து ஆட்சி செய்து கொண்டு இருக்கும் போது இக்கொடையை வழங்கினார். இவர் கன்னடநாட்டைச் சேர்ந்த உயர் அதிகாரி என்றும் தெரிகிறது. மூன்றாம் இராஜராஜன் காலத்தில் போசளர்கள் தங்கள் ஆதிக்கத்தைச் சோழ நாட்டில் நிறுவி இணையாட்சி நடத்தியதை இக்கல்வெட்டு காட்டுகிறது. (கல்வெட்டு எழுத்துக்கள் மிகவும் தேய்ந்து உள்ளன).

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு
2. உய-வது கண்ணனூரில் வல்லாளதேவன் ராஜ்யம் செ(ய்) கையி
3. ல் கணமகணசோமணக் கேய நாச்சராசர் மகன் யாதண்
4. ணர் சிவலோகமுடையார் சீபண்டாரத்துக்கு காசு ளருய
5. இக்காசு நூற்றைம்பதும் பொலிசை குடுத்து நாங்கள்
6. .......... ..........
7. .......... ..........

18 : 2

**இடம்** : கருவறை வாயில் நிலைப்படி

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா:20, கி.பி. 1232.

**செய்தி** : இக்கோயில் கருவறை வாயில் நிலைக்கால்களைப் பிரம்மதேசத்தில் காணி உரிமையுடைய வண்ணான் செல்வன் சொக்கன் என்பவர் செய்து கொடுத்துள்ளார்.

1. பிரமதேசத்து காணி உடைய
2. வண்ணான் செல்வன் சொக்க
3. ன் இத் திருநிலை காலிரண்டும் எந்
4. தன்மம்

18 : 3

**இடம்** : சிவலோகமுடையார் கோயில் கருவறைத் தெற்குச்சுவர்

**காலம்** : இரண்டாம் ஜடாவர்மன் குலசேகர பாண்டியன், யா:21, கி.பி. 1258.

**செய்தி** : இக்கோயிலில் திருச்சூலதேவர் செப்புத்திருமேனியை அம்மையாழ்வான் வரகூர்ப் பெருங்கொல்லன் என்பவர் செய்து வைத்தார். ஆனால் அச்சிலை பாண்டியர் காலத்தில் ஏற்பட்ட படையெடுப்பின் போது கொள்ளையடிக்கப்பட்டு விட்டதால் அதேபோல மற்றொரு திருமேனியை அம்மையாழ்வானின் பேரன் உதையநான பெரியநாயக கொல்லன் வழித்துணையான் வரகூர்ப் பெருங்கொல்லன் என்பவர் செய்து வைத்தார்.

1. (ஸ்வஸ்திஸ்ரீ)* கோற்சடைபன்மரான குலசேகரதேவற்க்கு யாண்
2. டு உயக-வது முன்னாள் என்பாட்டன் அம்மையாழ்வா
3. னான வரகூர்ப் பெருங்கொல்லன் எழுந்தருளிவி
4. த்த திருச்சூலத்தேவர் கலகத்தில் எடுப்புண்டு பே
5. ாகையில் உதையனான பெரியநாயகக் கொல்ல
6. ன் வழித்துணையான் வரகூர்ப் பெருங்கொல்லன்
7. திருச்சூலதேவரை எழுந்தருளிவித்தேன்.

18 : 4

**இடம்** : பெருமாள்கோவில் தெற்குச்சுவர்.

**காலம்** : கி.பி.17-18 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ளது.

1. தெய்வங்கள் பெருமாள் சதா
2. சேர்வை பிரியாவிடை

# 19. கோயில்பாளையம் கல்வெட்டுகள்

இல. தியாகராஜன், அரியலூர்.

19 : 1

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், குன்னம் வட்டம், சோழீஸ்வரர் கோயில் அர்த்தமண்டப தெற்குச்சுவர் அதிட்டானம்

**காலம்** : முதற்குலோத்துங்கசோழன், யா:37, கி.பி. 1106.

**செய்தி** : வாணகோவரையர் என்பவர் தேனூரில் இக்கோயிலை எடுப்பித்துள்ளார். இன்று கோயில் அமைந்துள்ள பகுதி கோயில் பாளையம் எனவும் இதன் மேற்குப்பகுதி தேனூர் எனவும் அழைக்கப்படுகிறது. தேனூருக்கு வரசரிதநல்லூர் என்று பெயரிட்டு இவ்வூரை இறையிலியாக மன்னர் வழங்கியுள்ளார். ஆதனூர் மாடை, சித்திரநல்லூர் மாடை, என்னும் காசுகளின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. இவ்வூரிலிருந்து வரியாகக் கிடைத்ததொகை 50 மாடைகள் என அறிகிறோம். மன்னரின் ஆணையைச் செயல்படுத்திய வருவாய்த்துறை அதிகாரிகளின் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன.

1. ஸ்வஸ்தி (ஸ்ரீ) புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர்ந்து உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி வில்லவர் நிலைகெட மீனவர் குலைதர ஏனைமன்னவர் எண்டிசையிரி-தரத் திக்கணைத்துந்தன் சக்கரநடாத்தி வீரஸிங்ஹாஸநத்து அவனி
2. முழுதுடையாளோடு வீற்றிருந்தருளிய கோராஜகேசரி பம்மரான சக்கரவர்த்திகள் ஸ்ரீ கொலோத்துங்கசோழ தேவர்க்கு யாண்டு ஙயஎ ஆவது நாள் 211 ஒரூராய்க் கூடின படிக்கும் இறைஇலி இட்டபடிக்கும் வாணகோவரையர் எடுப்பித்த முடிகொண்ட சோழவள
3. நாட்டுக் காரைக்காட்டுத் துண்டத்து தேநூர் வரசரித ஈஸ்வரமுடைய மகாதேவர்க்கு முந்நுடையாரும் பழம்படியாரும் ஙயஎ ஆவது முதல் தவிர்த்து வரசரிதநல்லூரெந்நும் பியரால் இத்தேவர்க்கு வேண்டும் நிபந்தங்களுக்கு இறுப்பதாக 37 ஆவது முதல் அந்தராய முட்பட தே
4. வதான இறையிலி இட்ட உகளூர்க்கூற்றமான தேனூர் வாட்கை ஆதநூர் மாடை 39 முப்பத்தொன்பதே காலே நாலுமா சித்திரநல்லூர் மாடை யிஇ வப்பத்தரையே ஒருமா ஆக மாடை ருய ஐம்பதும் வரசரிதநல்லூரெந்நும் பியரால் இவை புரவரிதிணைக்களத்து முகவெட்டி பூதங்
5. குடையாநெழுத்து இவை வெளயூர் கிழவ நெழுத்து இவை புரவரி திணைகளத்து முகவெட்டி பல்லவந் மூவேந்தவேளாநெழுத்து

இவை புரவரித்திணைக்களத்து முகவெட்டி பிடவூர் உடையா-னெழுத்து இவை புரவரித்திணைக்களநாயகம் ஆலத்தூருடையானெழுத்து இவை புரவரித்திணைக்களத்து முகவெட்டி வரகூருடையாநெழுத்து இவை பிடவூர் வேளாநெழுத்து இவை வெள்ளூருடையா னெழுத்து.

19 : 2

**இடம்** : மகாமண்டப வடக்குச்சுவர் பீடம்

**காலம்** : இரண்டாம் இராஜாதிராஜன், யா:4, கி.பி. 1167.

**செய்தி** : சேந்தன் ஆதித்தன் ஆன இராஜராஜன் வங்கார முத்தரைய தேவன் என்பவர் இக்கோயிலில் 15 சந்தி விளக்குகளை ஏற்றி வைத்து அதை பராமரிக்க இவருக்கு இக்கோயில் தேவதான நிலங்களில் இருந்து வருகின்ற பாடிகாவல் வரி வருமானத்தைக் கொடுத்துள்ளார். இவர் சோழர் கால வருவாய்த்துறையைச் சேர்ந்த பாடிகாவல் அதிகாரியாக இப்பகுதியில் பணியாற்றியுள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு நாலாவது சேந்தந் ஆதித்தநான இராஜராஜ வங்காரமுத்தரையதேவன்
2. தேனூர் வரசரித ஈஸ்வரமுடைய நாயநார் கோயிலில் ஸ்ரீ மாகேஸ்வர கண்காணி செய்வார்க்கும் தேவகந்மி கோயிற்கணக்குங்கண்டு இன்ந
3. ாயநார் கோயிலில் வைத்த சந்திவிளக்கு பதினைந்து இவிளக்கு பதினைந்துக்கும் இவ்வூரில் தேவதானமான நன்செய் புன்செய்யாலும் வந்த பாடிகாவல் கெ
4. ாண்டு விளையிலும் விளையாவிடிலும் வையம் சந்திராதித்தவல் இவ்விளக்கு பதிநஞ்சும் எரிக்க கடவதாக சொந்நேன் இப்படியை பிள்ளைகண்ட ராஜபன்மற்கு சொல்
5. லி இப்படி கல்வெட்டிப் பண்ணுவித்த இப்படிக்கு இவை வங்கார முத்தரயந் எழுத்து இவை எதிரிலிசோழ மூவேன்தவேளான் எழுத்து.

19 : 3

**இடம்** : இராஜகோபுர நுழைவாயில் வலதுபுற நிலைக்கால்.

**காலம்** : இரண்டாம் இராஜாதிராஜன், கி.பி. 1170.

**செய்தி** : இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ள கோபுரத்தையும் இதையொட்டி அமைந்துள்ள திருமாளிகையையும் துண்டநாடுடையான் திருவுடை அடிகளான துண்டராயபன்மன் ஆரியவாயன் என்பவர் செய்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ துண்ட
2. நாடுடையாந்
3. திருவுடை அ
4. டிகளான துண்
5. டராய பந்ம
6. ந் ஆரிய வாய
7. ந் செய்வித்த
8. திருக்கோபுரம்
9. திருமாளிகை
10. யும் செய்வித்த
11. ாந் .

19 : 4

**இடம்** : மகாமண்டபத் தென்சுவர் பீடம்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1178-1218), யா:2, கி.பி. 1180

**செய்தி** : துண்டநாடுடையான் ஏகவாசகன் குலோத்துங்கரான பிள்ளை வாணகோவரையன் என்பவர் இக்கோயிலில் திருநந்தாவிளக்கு வைத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருப்புவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு இரண்டாவது மீந நாயற்று அபர பட்சத்து பஞ்சமி
2. யுந் திங்கட்கிழமையும் பெற்ற ஆனித் திருநாள் வடகரை முடிகொண்டசோழ வளநாட்டுத் துண்டநாட்டுத் தேனூரான வரசரித ஈஸ்வரமுடைய நாயநா
3. ர்க்கு துண்ட நாடுடையான் ஏகவாசகன் குலோத்துங்கராந பிள்ளை வாணகோவரையர் வைத்த திருநந்தாவிளக்கு நெய்க்கு உடையார் பிள்ளை வைத்த திருநுந்தாவிளக்கு ஒந்றுக்கு உபையமாக வைத்துக் குடுத்த பரிசாவது இக்கோ
4. யிலில் காணி உடைய சிவபிராமணந் சோழந்நாந நாற்பத்தெண்ணாயிரபட்டனும் சிவாக்ய தேவனும்
5. நாயகநும் கயிலாயந் திருவீரட்டாநமுடையாநும் திருவனந்தசேகரநும் திருப்புறம்பிய முடையாநும் தேவந்சேந்தனும் அருமொழி தேவ
6. னையும் தேவநாயகநும் தேவந்ஆதியும் இவ்வனைவோம் இவிளக்கொன்று சந்திராதித்தவர் செலுத்த ஸம்மதித்தோம் இவ்வனைவோம் இவ
7. ன் சமைந்து தேவர்கந்மி நாற்பத்தெண்ணாயிர பட்டந் எழுத்து தேவர்கந்மி திருச்சிற்றம்பல பட்டந் எழுத்து ஆதிநாயகப் பட்டந் எழுத்து தரணஞ்சேகர பண்டிதர் எழுத்து

19 : 5

**இடம்** : மகாமண்டபத் தென்புறச் சுவர் பத்தி

**காலம்** : மூன்றாவது குலோத்துங்கன், யா:11, கி.பி. 1199.

**செய்தி** : இக்கோயிலில் தேனூரில் காணி உரிமை உடைய துண்டராயன் திருவிராடன் குன்றன்தேவி குலோத்துங்கசோழியர் என்ற பெண்மணி மஹாதிருவாடிப்பூர நாச்சியார் என்ற தெய்வச் செப்புத்திருமேனியைச் செய்துவைத்து வழிபாட்டுக்கு 32 காசுகளும் ஒரு உழக்கும் கொடுத்து உபயதானம் செய்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ மதுரை கொண்டருளிய குலோத்
2. துங்க சோழ தேவர்க்கு யாண்டு பதிநொந்றாவது நாயற்றுகிழமை பெற்
3. ற பூசமும் அமாவாசையான ஆடியந்திதி அந்று வடகரை முடி கொண்ட சோழ வள
4. நாட்டு மேல்காரைக்காட்டு துந்டநாட்டு தேனூர் உடையார் வரைசரித ஈஸ்வர முடைய நாய
5. நாற்க்கு இவ்வூர் காணியுடைய துண்டராயன் திருவிராடன் குந்றந் தேவி குலோத்துங்க
6. சோழியர் மஹா திருவாடிப்பூரம் நாச்சியாரை எழுந்தருளிவித்ததர்க்கு கோயில் காணிஉடை
7. ய சிவபிராமணரில் நிறைஞ்சாந் திருநட்டப்பெருமாள் சந்திரசேகரநு
8. ம் கயிலாயமுடையாந் அடிகள் மகப்பிராயமுடையான் அருமொழி
9. தேவன் மதுணஞ் சங்கநும் சிவ . . . . . நும் இவ்வநைவோம்
10. எரிக்கக்கடவோம் மாக சம்மதித்து உபையம் கொடுத்தோம் இவ்
11. வநைவோம் கயிலாயமுடையான் அருமொழிதேவநேந் மேற்படியார் வசம் நாந் சந்தி விளக்கொந்றுக்கு உ
12. பையத்துக்கு நாந் கைக்கொண்ட காசு முப்பத்து இரண்டும் கைக் கொண்டு கல் வெட்டிவி
13. த்து திருவாடிப்பூரத்துக்கு சிவபிராமணர்
14. போதாதெந்க பிந்பு மேற்படியார் சிவப்பி
15. ராமணர் பக்கல் குடுத்தது.

**19 : 6**

**இடம்** : மகாமண்டபத் தென்புறச்சுவர் ஓரம் உள்ள இரண்டு தனிக்கற்கள்

**காலம்** : சகம் 1428, கி.பி.1506.

**செய்தி** : விஜயநகர மன்னரின் பிரதிநிதியான அப்பாச்சியன் என்ற அதிகாரி சோழீஸ்வரசாமி கோயிலுக்கு தேனூர் கிராமம் முழுவதையும் திருப்பணி மானியமாக வழங்கியுள்ளார் இவ்வூரின் நான்கு எல்லைகளிலும் அமைந்தவையாக துங்கபுரம், நமங்குணம், காடூர் ஆகிய கிராமங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை இன்றும் இப்பெயரில் அமைந்துள்ளன. விஜயநகர காலத்தில் தான் இக்கோயில் அமைந்துள்ள பகுதி கோயில்பாளையம் என்ற பெயரைப் பெற்றது எனலாம்.

1. உ சிவமயம்
2. சொஷ்தஸ்ரீ சாலிவாக
3. ன சகாற்தம்
4. 14 செல்லா நின்ற
5. பிறபஷூட வையாசி மீ
6. யரு உ ஸ்ரீ மது றாயர் காரி
7. யத்துக்கு கற்த்தறாகிய அப்
8. பாச்சியன் பண்ணி குடு
9. த்த புண்ணிய பாகம்
10. ஸ்ரீமது சோளீசுபர ச
11. ாமி கோவிலுக்கு நா
12. னே தேனூர் யெல்லை
13. க்கிக் கிழக்கு துங்க
14. புரத்து யெல்லைக்கு தெ
15. ற்கு நமங்குண யெல்
16. லைக்கு மேற்கு காடூர் ெ
17. யல்லைக்கு வடக்கு
18. யிந்த நான்கு யெ
19. ல்லையுள் திருப்பணி
20. மானியமாக சே
21. த்தபடியினாலே ச
22. ந்திறாதித்த வரை

**அடுத்த கல் பலகை**

23. க்கும் அனுபவித்துக்
24. கொள்ளவும் யிந்த மா
25. னியத்தை பரிபால
26. னம் பண்ணின பேர்க
27. ள் கெங்கை கரையி
28. லே ஆயிரஞ் சி
29. வலிங்கம் பிறதிஷ்
30. டை பண்ணின ப
31. லனும் பெறுவார்
32. க(ள்) யிந்த தற்மத்து
33. க்கு அகிதம் பண்ணி
34. ன பேற்கள் கெங்
35. கை கரையிே
36. ல ஆயிரங் காராம்
37. பசுவைக் கொ
38. ண்ண தோசத்தி
39. ல் போகக் கடவர்க
40. ளாகவும்.

# 20. ஆலத்துடையான்பட்டி கல்வெட்டு

வி.பி. தங்கவேலு, முசிறி,
இல. தியாகராஜன், அரியலூர்.

20 : 1

**இடம்** : திருச்சி மாவட்டம், முசிறி வட்டம் ஆலத்துடையான்பட்டி சிவன் கோவில் சுவர் கல்வெட்டு.

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா:27, 1243.

**செய்தி** : வள்ளுவப்பாடி நாட்டு நாட்டார்கள் பெரியநாவலூர் அழகிய சேமீச்சுரமுடையநாயனார் கோயில் அதிகாரிகளுக்கு ஓலை அனுப்பி இக்கோயில் இறைவன் இறைவி திருமேனிகளுக்குப் பூஜை வழிபாடு நடத்த முப்பது காசுகள் முதலீடாக வைத்ததைப் பற்றிக் கூறுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்க(ர) வத்திகள் ஸ்ரீ இராசஇராச தே
2. வற்க்கு யாண்டு உயஎ - வது வள்ளுவப்பாடி நாட்டோம்
3. ஓலை பெரிய நாவலூர் உடையார் அழகிய சேமீச்ர முடை
4. யன் நாயனார் கோயில் தேவர்கன்மி கோயில் கணக்கன்
5. கண்டு இந்நாயன் நா(ர்) தேவதானம் இறையிலி திருக்கற்ற
6. ளியில் கல்வெட்டுப்படியும் திருச்சூல தேவ(ர்)க்கு உள்பட்ட
7. நன்செய் புன்செய்யும் இளையநங்கை நாச்சமரப் (மரப்படி) ந
8. நன் செய்க்குடி இருபத்தேழாவது முதல் மாக்கலத்துக்கு ஆட்
9. டைக்கு சுற்ற அடையாக ஒடுக்கும் காசு 30 இக்காசு முப்பதினாட்
10. (டோ) மும் இறுத்து நீக்கி நின்ற உடல் கொண்டு தேவன் திருமேநிக்கு
11. ம் தேவியார் திருமேனிக்கும் நன்றாக பூசையும் திருப்பணியும்
12. செலுத்தப் பண்ணுவதே இப்படிக்கு துறையூர் உடையான்
13. நடுஇருக்கு நம்பி எழுத்து அரசரில் அஞ்சாத கோபாலர் சயிஞ்
14. ஞ சுனமைக்கு மை நீரடு கொண்ட வெள்ளு எழுத்து மை
15. நீரடு கொண்ட வெள்ளு எழுத்து இது கண்ணூர் உடையான்
16. சக்கரவத்தி எழுத்து பிரண்டையில் வயிராதரா(ய)னே(ன்) எழுத்து திரு
17. வாக்குலத்துக் கோன் எழுத்து கங்கை கொண்ட விசையபாலன் எழுத்து
18. செழியகோன் எழுத்து வண்டுவராவதி நம்பி எழுத்து தென்னவராயன் எழுத்து நா
19. வலூருடையான் திருமழபாடி உடையான் சயஞ்சின்னதனமைக்கு இளையான்
20. .........ரையன் எழுத்து .....

# 21. வெங்கடாசலபுரம் செக்குக் கல்வெட்டு

**வி.பி. தங்கவேலு**, முசிறி.
**இல. தியாகராஜன்**, அரியலூர்.

**21 : 1**

**இடம்** : திருச்சி மாவட்டம், துறையூர் வட்டம் வெங்கடாசலபுரம் ஊரில் சிவன்கோயில் அருகே கிடக்கும் செக்குக் குழியைச் சுற்றி எழுதப்பட்ட கல்வெட்டு

**காலம்** : பரகேசரிவர்மன் (முதலாம் பராந்தகன் அல்லது உத்தம சோழன்), யா:4, கி.பி. 911 அல்லது 974.

**செய்தி** : கொல்லிநாட்டு நாவலூரைச் சேர்ந்த தாழிகொற்றன் என்பவர் பூந்துறைதேவர்க்கு இட்ட செக்கு. பூந்துறைதேவர் என்ற கோயில் இவ்வூரிலுள்ள சிவன் கோயிலாக இருக்கலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோபரகேசரி பன்மர்க்கு யாண்டு நாலாவது கொல்லிநாட்டு நாவலூரு
2. டையான்னான தாழிகொற்றன் பூந்துறைத் தேவர்க்கு இட்ட செக்கு இது இறக்குவான் ஏழா உழியும் நரகம் புகுவான்

# 22. ஸ்ரீபுரந்தான் சிவன்கோயில் கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன்,** அரியலூர்.

**22 : 1**

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம் உடையார்பாளையம் வட்டம், ஸ்ரீ புரந்தான் ஓட்டைக்கோவில் கருவறைத் தென்புறச் சுவர்

**காலம்** : வீரராஜேந்திரன் (மூன்றாம் குலோத்துங்கன், யா:6, கி.பி. 1184.

**செய்தி** : இக்கோயில் இறைவனுக்குத் திருப்படிமாற்றுக்கு அயிற்காடுகிழான் திருஞானசம்மந்தன் என்பவர் மூன்று மா நிலம் கொடுத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநச் சக்கரவத்திகள்
2. சிரி வீரராசேந்திர தேவற்க்கு யாண்டு ஆறாவது ப
3. ர ஸ௱தேவதிக்கு கிழக்கு பரகேஸரி வாய்க்கா
4. லுக்கு தெற்கு ஏழாங் கண்ணாற்று மூன்றாஞ் சதிர
5. நிலமொன்பது மாவில் தெற்கடைய நில நான்மா
6. வரையில் மேற்கடைய நிலமரை மாவில் கீழ் மூ
7. ன்று மாவும் பெரியதேவற்க்கு திருப்படிமாற்றுக்
8. கு அயிற்காடு கிழையாய்(ன்) திருநானசம்பந்தன் வி
9. ட்டது

**22 : 2**

**இடம்** : கருவறைத் தென்சுவர்

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா:6, கி.பி. 1184.

**செய்தி** : இக்கோயில் முழுவதையும் கருங்கல்லால் கற்றளியாகக் கட்டியவர் ஆர்க்காடுகிழான் கண்ணப்பன் திருவையாறு உடையான் ஆன வாணாதிராஜன் என்பவர் ஆவார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ இக்கோயில் இத்திரு
2. க் கற்றளி திருப்பணி செய்
3. வித்தான் ஆற்காடு கிழா
4. ந் கண்ணப்பந் திருவையா
5. றுடையாநான வாணாதிராஜந்.

**22 : 3**

**இடம்** : கருவறைத் தென்சுவர்

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா:22, கி.பி. 1200.

செய்தி : ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலத்து உடையார் சிவபாதசேகர ஈஸ்வரமுடையார் கோயிலில் உள்ள பிராமணர்களிடம் மணவண கடாந்தகச்சேரி இங்கண ஆளுடையார் என்பவர் திருநந்தாவிளக்கு எரிக்க நூறு காசுகளை முதலீடாக வைத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள்
2. மதுரையும் ஈழமும் பாண்டியன் முடித்த
3. லையும் கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க
4. சோழதேவர்க்கு யாண்டு உயஉ ஆவது நாள்
5. இருபத்துநாலு நாள் சீ பராந்தக சதுப்
6. பதி மங்கலத்து உடையார் சிவப
7. ாதசேகரவீசுவரமுடையார் கோயில்
8. முப்பது வட்டத்து காணிவுடையச் சி
9. வ பிராமணரோம் உபயங் கொண்ட
10. பரிசாவது இவூர் மணவண கடாந்த
11. கச் சே(ா)ரி இங்ஙண ஆளுடையார் பக்
12. கல் நாங்கள் திருவிளக்கெரிக்க வுப
13. யம் கொண்ட காசு நாநூறு இக்காசு
14. நான்நூற்றுக்கு திருவாட்டம் துட
15. ங்கி திருவைத்த சாம அறுதி
16. ஆக திருமுந்நே மூன்று சந்தி வி
17. ளக்கு எரிக்க கடவோமாக ச
18. ன்திராதித்த வரை செல்ல உபையங் கொ
19. ண்டோம்.

**22 : 4**

**இடம்** : முன்மண்டபத்து தென்மேற்கு வாயில் நிலைப்படி.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன் காலம்.

**செய்தி** : சிவபாதசேகர ஈஸ்வரமுடையார் கோயிலில் காணியுடைய ஸ்ரீ கிருஷ்ணன் பட்டன் என்பவரின் மனைவி ஒரு சந்திவிளக்கு எரிக்க 1.25 காசுகள் கொடையாக வழங்கியுள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. சிவபாத சே
3. கரீஸ்வர
4. முடையார் கோ
5. யில் காணியு
6. டைய சிவப்ராஹ்ம
7. ண ஸ்ரீ கையில
8. ாஸ முடையா
9. ன் கோட்டை
10. ஸ்ரீ க்ருஷ்ண பட்ட
11. ன் ப்ராஹ்மணி
12. வைச்ச ஸந்தி

13. விளக்கு ஒன்று
14. இது சந்திரா
15. தித்தவத் செ
16. லுத்த கொ
17. ண்ட காசு
18. ஒன்றே கா
19. லு . . . . . . . . .
(இறுதி வரி சிதைந்துள்ளது).

**22 : 5**

**இடம்** : கருவறை மேற்குச் சுவர் குமுதம், ஜகதி பகுதிகள்.

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா:31, கி.பி. 1247.

**செய்தி** : இக்கோயில் திருச்சிற்றம்பலமுடையார் என்னும் (ஆடவல்லார்) செப்புதிருமேனியின் பூஜை வழிபாட்டுக்குத் திருப்பாவாடைப்புற இறையிலியாக நிலம் கொடுக்கப்பட்டது. இது வழங்கியவர் ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலத்தில் - காணி உரிமையுடைய பிரளயங்காத்தான் ஆழ்வான் சோழகங்கதேவன் என்பவன் ஆவார். இக்கல்வெட்டின் இறுதி பகுதி பூமியில் புதைந்துள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு 31-வது சித்திரை மாஸத்து ஒரு நாள் உடையார் திருச்சிற்றம்பல-முடையார் கோயில் காலும் பிடாருஞ் செவார்களுக்கும் கண்காணிக் கரணத்தாற்க்கும் வட க
2. ரை விக்கிரம சோழவளநாட்டு ஸ்ரீபிராந்தகச் சதுர்வேதிமங்கலத்து காணிஉடைய பிரளயங்காத்தான் ஆழ்வானான சோழகங்க தேவனேன் இற்றை நாளால் உடையார் திருச்சிற்றம்பல முடையார்க்கு திருப்பாவாடைப்புற திருநாமத்துக் கா
3. ணியும் இறையிலியுமாக நான் திருப்படியில் நீர்வார்த்துக் குடுத்த நிலமாவது நாயனாரினக்கு பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி நான் காணியும் இறையிலியுமாக பெற்ற நிலத்து இவ்வூர்ப் பிடாகை மதுராந்தக நல்லூர் கோதண்ட
4. ராம வதிக்கு மேற்கு ஆச்சப்பிடாரி வாய்க்காலுக்கு நாலாங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து நிலம் நான் மாவரையும் ஐஞ்சாங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து நிலம் எழுமா கீழரையும் ஆறாங்கண்ணாற்று நாலாஞ் சதிரத்து நிலம் எழுமா அரை*

**22 : 6**

**இடம்** : மகாமண்டப கிழக்குச் சுவர் (நுழைவாயில் வலது பக்கம்).

**காலம்** : .....

**செய்தி** : ஸ்ரீபராந்தக சதிர்வேதிமங்கலத்தில் இருந்த ஸ்ரீகைலாசமுடையார், மற்றும் சிவபாதசேகர ஈஸ்வரமுடையார் கோயில் என்னும் இரண்டு கோயில்களுக்கும், கீழ்வார குடிமை என்னும் வரி செலுத்துவதில்

இருந்து விலக்கு கொடுக்கப்பட்டது. இதிலிருந்து இன்று ஓட்டைகோயில் என அழைக்கப்படும் கோயிலின் பெயர் சிவபாதசேகர ஈஸ்வரம் என்று புலனாகிறது.

1. ஹரஸ்வஸ்திஸ்ரீ பெரும்ப .......... ..........
2. லார்க்கும் ஸபையார் உடையார் ஸ்ரீகைலாஸமுடையாற்கும் உடையார் சிவபாத சேகர
3. ற்கும் கீழ்வாரக்குடிமை(ம) சந்த்ராதித்யவரை தவிர்ந்து எழுதின நியோ
4. ழ வளநாட்டு ஸ்ரீ பராந்தகச் சருப்பேதிமங்கலத்து மகர நாயற்று
5. .......... ..........
6. .......... ..........
7. உடையார் ஸ்ரீ கைலாய முடையார்க்கும் உடையார் சிவபாத சேகரமுடையார்க்கும்
8. சந்த்ராதித்யவரை தவிரக் கடவதாக சொன்னோம் பணியால் பிரமபிரியன் எழுத்து இது .......... ..........
9. ம் இளைய எஞ்ஞப்பட்டஸ்ய ப்ரஹ்ம .......... ..........

(பல இடங்களில் கல்வெட்டு சிதைந்துள்ளது)

## ஸ்ரீ புரந்தான் ஏரிக்கரை

## அருகில் உள்ள கைலாசநாதர் கோயில் கல்வெட்டுக்கள்

**22 : 7**

**இடம்** : இரண்டாம் பிரகார மண்டபத்தூண்.

**காலம்** : வீரராஜேந்திரன் (மூன்றாம் குலோத்துங்கன்), யா:6, கி.பி. 1184.

**செய்தி** : கல்வெட்டில் இக்கோயில் ஸ்ரீகைலாசமுடையார் கோயில் என்று குறிப்பிடப்படுகிறது. ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலத்து உடையார் ஸ்ரீ கைலாசமுடையார் கோயில் இறைவன், இறைவி, ஆகிய இருவரின் பொன் ஆபரணங்கள் பற்றிய விவரங்கள் குறிப்பிடப்படுகின்றன. ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் மருவி இன்று ஸ்ரீ புரந்தான் என அழைக்கப்படுகிறது.

1. திருபுவனச் சக்கர
2. வத்திகள் ஸ்ரீவீரரா
3. ஜேந்திர சோழ
4. தேவற்கு யாண்டு
5. ஆறாவது சீ பராந்
6. தகச் சருப்பேதி
7. மங்கலத்து உ
8. டையார் சீ கயிலா
9. ஸமுடையார் திரு
10. வாபரணத்துக்கு
11. முதல் திருப்பட்ட
12. ம் ஒன்றினால் பொ

13. ன் ஒன்பதின் கழ
14. ஞ்சே காலே ப
15. த்து மாற்று
16. பட்டம் ஒன்றினால்
17. பொந் நாற்கழஞ்சே
18. ச முக்காலே பத்து
19. மா மாற்று
20. பட்டம் ஒன்றினால் பொ
21. ன் முக்கழஞ்சே மு
22. க்காலே மூன்றுமஞ்
23. சாடியும் ஆறுமா
24. திருவுத்திரியம் ஒன்
25. றினால் பொன் நா
26. ற் கழஞ்சரையே
27. ஐஞ்சுமா
28. பிறை ஒன்றினால்
29. பொன் கழஞ்சே
30. க் கால்
31. நாச்சியார் திருத்தோ
32. டு ஒரணையினால்
33. பொன் கழஞ்சே ஒ
34. ன்பது மஞ்சாடியும்
35. மூன்று மா
36. (கிரிவால) உரு நாலி
37. னால் பொன் .....
38. நாயகர் திருவுடை
39. யாடை முற் தகடும் பி
40. ற் தகடும் பொன் ஐ
41. ம்பத்து இரு கழஞ்
42. சு மாற்று
43. திருத்தோடு ஒர
44. ணையினால் பொன்
45. இரு கழஞ்சு.

**22 : 8**

**இடம்** : வாகன மண்டபத்தூண்.

**காலம்** : முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன், யா:44, கி.பி. 1312.

**செய்தி** : விக்கிரம சோழ வளநாட்டு ஸ்ரீ பராந்தக சதுர்வேதிமங்கலத்து ஸ்ரீ கைலாசமுடையார் திருக்கோயிலில் பாண்டிமண்டலத்து மதுரை உதயவளநாட்டு அளறூர் நாட்டு குளத்தூர் ஆன ஜனநாதநல்லூரை சேர்ந்த ஒருவர் இறைத் செப்புத்திருமேனிகளைத் செய்து வைத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ
2. மாறுபன்மர் திரு
3. புவனச் சக்கரவ
4. த்திகள் ஸ்ரீகுலசே
5. சகரதேவற்கு ய
6. ாண்டு 44-வது
7. ..........அபர பக்ஷ
8. த்து ..........கிழமையும்
9. பெற்ற ......... து நாள் வட
10. கரைவிக்ரம சோ

11. ழ வளநாட்டு சீபரா
12. ந்தகச் சருப்பேதிம
13. ங்கலத்து உடையா
14. ர் சீகையிலாயமு
15. டையார் திருக்கோ
16. யிலுக்கு பாண்டி
17. மண்டலத்து மது
18. ரை உதைய வள ந
19. ாட்டு அளற்றுார் நா
20. ட்டு குளத்துாரான
21. ஜனனாத நல்லூர்
22. உடையான்
23. பெருமாளையும்
24. நாச்சியாரையு
25. ம் திருவாதவூர்
26. நாயனாரையும் ஏ
27. றி அருளப்பண்
28. ணினபடியாகே
29. ல இக்கோயில்
30. தேவரடியாரில்
31. இவர் மக்கள்(மக்கள்)
இன் நிலம் .................. வலப்புற .......... இதுக்கு

**22 : 9**

**மண்டபத்தூண்**

1. ஸ்வஸ்திஸ்ரீ இத்
2. திருமண்டப
3. ம் வீரசூரியன்

**மண்டபத்தூண்**

1. திருபுவனச் சக்கரவ
2. த்திகள் மதுரையு
3. ம் பாண்டியந் முடி
(முற்றுப்பெறவில்லை).

# 23. அத்திப்பட்டு ஓலை ஆவணம்

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.

**23 : 1**

**இடம்** : வேலூர் மாவட்டம், ஜமுனாமரத்தூருக்கு அருகில் அத்திப்பட்டு என்னும் ஊரில் வசிக்கும் கோவிந்தன் நாட்டார் என்பவரிடம் உள்ள ஓலைச் சுவடி.

**காலம்** : கி.பி. 1870.

**செய்தி** : சவ்வாது மலைத்தொடரில் எழுபது மலைக்குப் பெரிய மலை நாட்டாராகிய ஆண்டிக்கவுண்டன் குமாரனாகிய சின்னாண்டி கவுண்டன் நாட்டார் முன்பாக, நடுபத்து நாட்டுக்கு எது (ஜ) மானனாகிய அருணாசலகவுண்டன் பேரனாகிய ஆண்டிக் கவுண்டனுக்கு எழுதிக்கொடுத்த 13 கிராமங்கள் பற்றியது.

### முன்பக்கம்

1. பிறமாதூத வரு ஆவணி மீ 21 எழுபத்துமலைக்கி பெரியமலை நாட்டாராகிய ஆண்டி கவுண்டன் குமார நாகிய.
2. சின்னாண்டி கவுண்டன் நாட்டார் முன்பாக நடுபத்து நாட்டுக்கு எது மானனாகிய அறுணாசலகவுண்டன் பேரனாகிய ஆண்டிக்.
3. கவுண்டனுக்கு எழுதிக் குடுத்த கிராமங்கள் விபரம் கல்லியாண மந்தை – 1, யெலாமரத்தூர் – 2 சின்னவ்வர் குட்டை 3, குறி
4. யானுறு 4, தெத்தூறு 5, அத்திப்பட்டு 6, பொன்னா நெல்லிமரத்தூர் – 7, ..........8 மாட்டுக்கானூறு 9, கும்புபெலா.
5. மரத்தூறு 10, ஆட்டியானூறு 11, புள்ளிச்சை குட்டை 12, நல்லா ..........மங்களம் 13 பதிமூன்றும் ஒனக்கு

### பின்பக்கம்

6. சேர்ந்தபடியால் நீயே அனுபவித்து கொள்ளவும் மேலும் சேலம் ப .......... ப்ப கவுண்டனுக்கு யாதொறு பாத்தியமும்
7. மில்லை யிந்த படிக்கி யென்ங்கள் றாசியில் எழுதி குடுத்த கிறாமங்கள் விபரம், யிதர்க்கு சாஷச்சியகே.......... அரள்ளி கவுண்டன்.
8. மகன் அறுணாசல கவுண்டன் அறுவேன் பழங்கோட்டை நாடு நாட்டான் கட்டிய கவுண்டன் மகன் வெள்ளைய கவுண்டன் அறுவேன் பள்ளப்ப நாடு
9. பெலாம பட்டு காடைய கவுண்டன் தட்டான் நடுல்ல கவுண்டர் அறுவேன். எழுதி நல்மைக்கி காஞ்சிபுரம் அருணாசல முதலியார் சோறுத்
10. தலகிதம் யிதக்கு யாராவது விற்பன்னம் செயிதால் காராவை கொன்ன பாவத்தில் போக வேண்டியது சுப மஸ்த்து.

# 24. திருத்தங்கல் பெருமாள்கோவில் கதவு எழுத்துப் பொறிப்பு

ஆர். பாலச்சந்திரன், திருத்தங்கல்

24 : 1

**இடம்** : விருதுநகர் மாவட்டம் சிவகாசி வட்டம் திருத்தங்கலில் ஸ்ரீ நின்ற நாராயணப் பெருமாள்கோவிலில் ஸ்ரீரங்கநாத பெருமாள் சன்னிதியின் முன் கதவு.

**காலம்** : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : ரெங்கநாதர் சன்னிதி. குடைவரைக் கோயில் முன்மண்டபத்தின் மரக்கதவு அமைத்துக் கொடுத்த தானத்தை இப்பொறிப்பு தெரிவிக்கிறது.

1. 1707 மாண்டு பில
2. வ வருஷம் மார்க
3. ழி மாசம் எ தீ நல்ல
4. வீரப்ப முதலியா
5. ர் பேரன் அழகப்ப
6. முதலியார் குமார
7. ற் கிருஷ்ட்ண மு
8. தலியார் உபயம்





# 25. ஆவுடையார் கோயில் கல்வெட்டு

கோ. உத்திராடம், சென்னை

25 : 1

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம், ஆவுடையார் கோயில், ஆத்மநாதசாமி கோயில் தெற்குக் கோபுரத்தின் கீழுள்ள பலகைக் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 1842.

**செய்தி** : காஞ்சிபுரத்தைச் சார்ந்த பச்சையப்ப முதலியார் ஆவுடையார் கோயிலில் உள்ள ஆத்மநாதசாமி கோயில் வழிபாட்டிற்காக ஒரு குறிப்பிட்ட பணத்தை வட்டிக்கு விட்டு அவற்றின் மூலம் வரும் வருவாயைக் கொண்டு வழிபாடு செய்ததையும் பணம் அரசு கருவூலத்தில் வைக்கப்பட்டிருந்ததையும் குறிப்பிடுகிறது.

1. காஞ்சிபுரம் பச்சையப்ப முத
2. லியாருடைய தர்மம். சகல
3. ருக்கும் பிரசித்தமாகத் தெ
4. ரியும் பொருட்டும் நிரந்தர
5. மான ஞாபகத்தின் பொருட்
6. டும் செய்யும் விளம்பரமாவது
7. இறந்துபோன புண்ணிய பு
8. ருடராகிய மேற்படி பச்சைய
9. ப்ப முதலியாரவர்களாலே வை
10. க்கப் பட்டிருக்கும் லட்சம் வரா
11. கனுக்கு வரப்பட்ட வட்டிப்ப
12. ணத்தில் நின்றும் ஆவிடையா
13. ர் கோவிலில் சாயரசைக் கட்
14. டளைத் தர்மமானது கனம்பொ
15. ருந்திய சூப்ரீம் கோட்டுக்
16. கவரன்மெண்டு அதிகாரிக
17. ளால் தர்ம விசாரணைக் கர்
18. த்தார்களாக நியமிக்கப்பட்
19. டுச் சென்னப்பட்டணத்திலி
20. ருக்கும் இந்து சபையாரவ
21. ர்களுடைய உத்தரவின் ப
22. டி சாலிவாகனச் சகாப்தம்
23. 1764 ம் வருசத்துக்குச்

24. சரியான சுபகிருது வருசம் முத
25. ல் வருசம் 1520 வர
26. ாகன் செலவுள்ளதாக நட
27. ந்து வருகின்றது. மேற்படி மூலத
28. னம் சூப்ரீம் கோட்டு அதிக
29. ாரிகளுடைய உத்தரவின் ப
30. டி சென்னப்பட்டணத்திலிருக்
31. கும் ஜெனல்திரேசரி யென்னும்
32. கவரன்மெண்டாருடைய
33. பொக்கிசத்தில் வைக்கப்ப
34. ட்டிருக்கின்றது. மேற்படி தர்
35. மம் கிரமமாக நடவாவிட்டா
36. ல் தர்மத்தில் சிரத்தையுள்ளவ
37. ர்கள் மேற்படி சபையாரவர்களுக்
38. கு தெரியப்படுத்த வேண்டுவது.

# 26. பாலசித்து குருநமசிவாயம் கல்வெட்டு

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்

26 : 1

**இடம்** : வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், காவேரிப்பாக்கத்தில் இருந்து கட்டளைக்குச் செல்லும் வழியில், முக்தீசுவரர் கோயில் அருகே குளக்கரையின் வடமேற்கு மூலையில், 5 அடி நீளம் 1 அடி அகலம் உள்ள கற்பலகையில் அமைந்துள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கற்பலகையின் மேல்பகுதியில் பழைய கஜலட்சுமியின் உருவம் கோட்டுருவமாக வரையப்பட்டு அதன் நடுவில் சூலம் பொறிக்கப்பட்டுள்ளது. இதற்கு கீழே மூன்று சதுரக்கட்டங்கள் ஒன்றினுள் ஒன்று வரையப்பட்டுள்ளன. மூன்றாவது சதுரக்கட்டத்தினுள் மூன்று வட்டங்கள் ஒன்றினுள் ஒன்று வரையப்பட்டுள்ளன. மூன்றாவது வட்டத்தினுள் ஒரு நட்சத்திரம் வரையப்பட்டுள்ளது. சதுரக்கட்டங்கள், வட்டங்கள், நட்சத்திரம் இவைகளின் உள்ளே மந்திரச் சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளன. கீழே கல்வெட்டு 11 வரிகளில் வெட்டப்பட்டுள்ளன. கல்வெட்டின் வலப்பக்கம் வேலும், இடப்பக்கம் பாம்பும் பொறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டின் கீழே சூலம் வரையப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டில் சிதம்பரம் திருப்பெருந்துறையைச் சேர்ந்த பால சித்து குருநமசிவாயம் மந்திரக்கல் அமைத்துக் கொடுத்தது குறிக்கப்பட்டுள்ளது.

1. காவேரிப்பாக்கம்
2. அகிலா
3. ண்ட கோ
4. டி பிறமாண்
5. ட நாயகர் சித
6. ம்பரம் திருப்
7. பெருந்துறை
8. வீர சிம்மாச
9. னம் எடுக்கும்
10. பாலசித்து குருநம
11. சிவாயம்

# 27. திருக்குறுங்குடி அக்ரஹாரக் கல்வெட்டு

சு. கண்ணன், அண்ணாமலை நகர்.

**27 : 1**

**இடம்** : திருநெல்வேலி மாவட்டம், நான்குனேரி வட்டம் திருக்குறுங்குடியில் உள்ள அழகியநம்பி கோயிலின் தெற்கு மற்றும் வடக்கு மாட வீதியில் நடப்பட்டுள்ள கற்பலகையில் ஒரே மாதிரியான வாசகங்களுடன் இரண்டு கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன.

**காலம்** : கி.பி.1848.

**செய்தி** : திருநெல்வேலி மாவட்டம் சேரன்மாதேவியில் சார் ஆட்சியராக பணிபுரிந்த ஆங்கிலேய அதிகாரி வி.ஹெச். லிவிஞ்ச் (Sir Veer Henry Livinge) திருக்குறுங்குடி அழகியநம்பி கோயிலின் தெற்கு மற்றும் வடக்கு மாட வீதியில் அக்ரஹாரம் ஏற்படுத்தியதைத் தெரிவிக்கிறது.

1. VHL
2. 1848
3. மகாறாஜஶ்ரீ
4. விஹெச்
5. லிவிஞ்சு
6. துரையவர்கள்
7. உண்டுபண்ணின
8. அக்கிரகாரம்

# 28. நொடியூர் கல்வெட்டுகள்

மா. பவானி, தஞ்சாவூர்
மு. ராஜேஷ், தஞ்சாவூர்

28 : 1

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம், கந்தர்வக்கோட்டை வட்டம், நொடியூர் சிவன்கோயில் கருவறையில் மேற்புற அதிட்டானம்

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா:24, கி.பி. 1240

**செய்தி** : இக்கோயிலில் க்ஷேத்திரபாலப் பிள்ளையாரை எழுந்தருளிவித்து அதற்கு நிலம் விலைகொண்டு அமுதுபடைக்க அரிசி அளித்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்ரவத்திகள் இராசராசசோழ (தேவர்கு) யாண்டு இருபத்து மூன்றாவது வெதிராமாண்டு நொடியூரு உடைய ஆதினா
2. யகர் கோயில் பட்டமுடையான் திருவையா(று) உடையார் எழுந்தருளுவித்த க்ஷேத்திரபால பிள்ளையாற்கு
3. . . . . தன் குளத்து வயலில் குளக்கீழ் விலைகொண்டு காடுவெட்டி. திருத்திவிட்ட வடுகநாதன் வயக்கல் நிலம் இரு மா முக்காணி (நி)லம் இக்கோயிற் சி
4. வ பிராமணர் முப்பது வட்டத்தாருங் கைக்கொண்டு தாங்களுடைய (விலை) கொண்டு பிள்ளையாற்கு அமுதுபடி நாளொன்றுக்கு னாயகனால் நாழி அ
5. ரிசி அமுது செய்விக்க கடவர்களாகவும் இன்னிலம் விளைந்தவரா
6. கவும் இத்திருவையார் உடையார் பொன் அம்பலவன் சிறுத்தொ
7. (ண்)டன் னிரு பலம் அரிசி நாழியும் சந்திராதித்தவரை அமுது செய்விக்க க.
8. .......... இப்படி அமுது செய்ய கடவதாக
9. .......... அமுது படைக்க கொண்டிட்ட பரிகலம் ஒன்றினால் இட
10. க்கடவராகவும் இப்படி இசைந்து விட்டேந் [சேதிறுதி கொண்டானன்]

28 : 2

**இடம்** : கருவறையின் மேற்புற அதிட்டானத்தின் ஜகதிப்பட்டை.

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா.20, கி.பி. 1236.

**செய்தி** : இக்கோயிலில் குன்றமெறிஞ்சப் பிள்ளையாரை எழுந்தருளிவித்து அதற்குத் திருப்படிமாற்றுக்கும் நித்தப்படிக்கும் நிலக்கொடை அளித்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச்சக்ரவர்த்திகள் ராசராச தேவர்க்கு
2 யாண்டு 20வது நொடியூருடையார் ஆதிநாயகர் கோஇலில்

3. சூரைக்குடையான் செல்வன் கிளியூர் நாட்டுக்கோனேன் நான் எழு
4. ந்தருளிவித்த குன்றமெறிஞ்ச பிள்ளையார்க்கு திருப்படிமாற்றுக்கு நித்தபடி ..........
5. இருநாழி அரிசி அமுது செய்தருளவிலை கொண்டு விட்ட நிலம் பாப்பான்
6. வயலின் அரியலுடையாந் ......... புஞ்செய் மருதன் வயலில் வி
7. லை கொண்ட பூத வயக்கலும் ......... (நொடி)யூரு நாடாழ்வார் பக்கல் விலை கொண்
8. (ட) .......... (பெ)ரிய்ய மழையர் வயலில் ......... இவர் பக்கல் விலை கொண்ட நில
9. ம் சந்திராதித்தவரை நெதியதுக்கு இந்த .......... க்கு இரு நாழியும் உபையமாக கொண்டு ..........

**28 : 3**

**இடம்** : கோயில் மண்டபத்தின் தென்புறச் சுவர்

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா.30, கி.பி. 1246

**செய்தி** : இக்கோயிலில் க்ஷேத்திரபாலப் பிள்ளையாரை எழுந்தருளிவித்து, திருமண்டபம் அமைத்து அதற்குக் கொடையாக நிலமும் பணமும் கொடை வழங்கப்பட்டுள்ளது. கொடை முப்பது வட்டத்து சிவபிராமணரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ராசராசதேவர்க்கு 30வது நொடியூர்
2. உடையார் ஆதிநாயகர் கோயில் சேத்திரபாலப் பி
3. ள்ளையாரைய் பட்டமுடையார் திருவையாறு
4. டையான் எழுந்தருளிவித்து யிவர் ஒருமா முக்கா
5. ணி நிலமும் விட்டு (த)ம் அபா(வ)த்து பிள்ளையாற்கு
6. நீக்கின செம்பொந் இருகழஞ்சு நால்க் காசு யிர
7. ண்டாயிரமும் உடையார் கோயில் திருமலை திரு
8. ப்பணியிலே இடுகையில் யிக்காசுக்கும் இவர்
9. பொன் திருவயாறுடையா நான சிறுத்தொண்
10. டன் திருமண்டபத் திருப்பணிக்குக் குடுத்த நெல்லால்
11. க்காசு ஐநூறும் இக்காசு யிரண்டாயிரத்தைஞ்னூ[று]
12. (சண்) டேசுரப் பெருவிலையாக சாதனம் பண்ணிக் குடுத்த நிலம் யி
13. ரண்டு மா காணியும் ஆக நிலம் நாலு மாவும் முப்பது வட்டத்துச்சிவ
14. பிராமணர் உபையமாக கைக்கொண்டு யிப்பிள்ளையாற்கு நாள்ளொ
15. ன்றுக்கு இரு நாழி அரிசி திருப்படிமாற்றுச் சந்திராதித்தவரை
16. செலுத்தக் கடவோமாகச் சம்மதித்துக் கல்வெட்டிக் குடுத்தோம்

17. முப்பது வட்டத்துச் சிவப்பிராமணரோம் இப்படி செய்யும்
18. பயிர் விளைந்த ஆண்டும் விளையா ஆண்டு முட்டாமல் அமுது செல்வதாக சம்மதித்தோம்

**28 : 4**

**இடம்** : கோயில் மண்டபத்தின் தென்புறச் சுவர்.

**காலம்** : வீரபாண்டியன், யா:14, கி.பி. 1267.

**செய்தி** : இக்கோயில் ஆதிநாயகருக்கு நந்தாவிளக்கெரிக்க வாணிப குடிமக்கள் எண்ணெய் கொடை வழங்கிய செய்தி. கொடை வயிராகிகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடய பற்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஈழமுங் கொங்குஞ் சோ
2. ழ மண்டலமுங் கொண்டு பெரும்பற்றப்புலியூரில் வீரா அபிஷேகமும் விஜையா அபிஷே
3. கமும் பண்ணியருளிய ஸ்ரீவீரபாண்டியதேவற்கு யாண்டு பதின்மூன்றாவதி னெதிரா
4. மாண்டு கீழ்செங்கிளி நாட்டு நொடியூர் உடையார் ஆதினாயகர்க்கு இவ்வூர் வாணிய
5. க்குடி மக்களோம் ஆடி மாதத்து முதற் தியதி முதல் திருநந்தா விளக்குக்கு நாளொன்றுக்கு
6. ஆழாக்கு எண்ணை அளக்கக் கடவோமாகவும் இது வயிராகிகள் வெட்டியுங்
7. குத்தியுங் கொண்டு அ(ள)ப்பிக்கக் கடவர்களாகவும் இப்படி சந்திராதித்தவரை
8. செல்வதாகச் சம்மதித்தோம் வாணியக்குடி மக்களோம் இது கண்ணறைந்தார் செய்வித்ததன்மம்.

**28 : 5**

**இடம்** : கோயில் கருவறையின் தென்புறச் சுவர்

**காலம்** : மூன்றாம் இராசராசன், யா. 10, கி.பி. 1226

**செய்தி** : திருஞானசம்பந்தன் மடம் அமைத்து மடப்புறமாக நிலக்கொடை.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவ
2 த்திகள் ஸ்ரீ (ராச) தேவற்கு யாண்டு
3. (10) வது நொடியூருடையான்
4 சொக்கன் அரைங்குளவந(ர)

5. ன வாகீசப் பெருமாளேன் உடை
6. யார் ஆதிநாயகர் திருமடை
7. விளாகத்து திருஞானசம்பந்
8. (த)ன் திருமடமும் கற்பித்து இ
9. துக்கு மடப்புறமாக பாப்பான் வ
10. யலில் எங்கள் பிதாக்கள் விலை கொ
11. காண்டுடைய மல்லன் வயக்க
12. லும் மருதன் வயலில் விலை கொ
13. ண்டுடைய புத வயக்கல் த(ளை)
14. (யு)ம் இம்மடம் னோக்க எங்க
15. சாந தாநியத்து முதலிகளுக்கு
16. ச் சீவனசேஷமாக சந்திராதித்த
17. வரை செல்வதாக விட்டேன்.

**28 : 6**

**இடம்** : கோயில் மண்டபத்தின் தென்புறச் சுவர்

**காலம்** : சுந்தரபாண்டியன், யா:12, கி.பி. 1263?

**செய்தி** : பல நாட்டுப்பிரிவுகளில் வாழும் கண்மாளர்களும் தங்களுக்குள் வரி தொடர்பாக செய்து கொண்ட ஒப்பந்தம் பற்றியது. இதில் ஏதேனும் பிரச்சினை ஏற்படும் பட்சத்தில் அதை நொடியூர் கோயில் தானத்தார்களும், இவ்வூர் அரையர்களும் தீர்த்து வைக்க வேண்டுமாய் ஒப்பந்தம் உள்ளது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாறபன்மரான திருபுவனச் சக்கரவத்தி
2. ஸ்ரீ சுன்திரபாண்டிய தேவற்கு யாண்டு 12 வது நொ
3. டியூருடையார் ஆதினாயகற்கு பெருங்களூர் அஞ்சினான் புகலிடமும்
4. (வ)ன்காட்டுனாடும் மீசெங்கிளி நாடும் வல்லனாடும் பிரம்பில் கா(ன)
5. னாடும் இன்த அனைத்து னாட்டு கண்மாளரோம் இன்த னாடுகளி
6. ல் குடி ஒன்றுக்கு காருக்கு பதக்கும் பசாந்ததுக்கு பதக்கும் தண்டி கொள்ள
7. கடவராகவும் இந்த நாடுகளில் கண்மாளர்க்கு அழிசங்கேதம் பிறன்தால் இக்
8. கோயிலில் தாநத்தாரும் இவூரில் லரையகளும் கண்மாளர்க்குச் சங்கேத
9. நிலைனிறுத்திதரக கடவர்களாகவும்
10. இப்படி சம்மதித்து இந்த நெல்லும் அ
11. ளந்துக் குடுத்தோம் இந்த அனைத்
12. து னாட்டு கண்மாளரோம்

28 : 7

**இடம்** : கோயில் மண்டபத்தின் தென்புற குமுதப் பட்டை.

**காலம்** : கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : பெரிச்சிச் சோழகன் என்பவனை வெட்டிக் கொன்றமைக்காக கிருஷ்ணராய சுவாமி, வேதாண்டி சோழகன் இருவரும் பாட்டு காணிக்கையாக 30 பொன் கோயிலுக்குச் செலுத்துமாறு கோரப்பட்டுள்ளதைத் தெரிவிக்கிறது.

1. ராசஷ சோபகிரித ஸ்ரீ பங்குனி மீ 25 ஸ்ரீமது சகலகுண சம்பன்னரான ராயமானிய ராய ஷத்திரி கிஷ்டிணராய சுவாமி யாரவர்கள் செங்கிளினாட்டிலிருக்கும் வேதான்டிச் சோழகனும் பாட்டுக் காணிக்கை நம்பிக்கைபட்டோலை குடுத்தபடி இத்தனான் பெரிச்சிச் சோழகனைப்
2. பிடிச்சு வெட்டிப் போட்ட படியினாலே அவர்களு இனாட்டி ரேகையில் வருஷத்திலே முப்பது பொன் உம்பிளிக்கை மானியமாக கட்டிளை யிட்டோம் இந்த முப்பது பொன்னும் மண்ணும் விண்ணும் முள்ள காலத்து இசந்திர சூரியனுள்ள காலத்து இங்கல்லுங் காவேரி
3. ரியுமுள்ள காலத்துக்கெல்லாம் இந்த முப்பது பொன்னும் பத்திக் கொள்ள கடவாராகவும் இந்தப் பாட்டுக் காணிக்கையான உம்பிளிக்கை மானியத்து [இளந்தெந்தச் சுபையள மறுமணியங்கள்] வந்தாலும் யிசகு பிசகு வராமல் நடப்பிக்க கடவோராகவும் இசுபைகாறர்
4. மணியகாறர் பின்னை ஆராகிலும் யிசகுபிசகு பண்ணினால் கெங்கை கரையிலே காராம் பசுவைக் கொண்ண தோஷத்திலே போவாராகவும் இந்தப்படி இசெங்களி னாட்டார் அஞ்சுகரைப் பெறிய ஸ்ரீ கிஷ்டிணராயர் யவர்கள் வேதாண்டிச் சோழகனு இப்பட்டோலை குடு
5. த்தபடி இசாட்டி சணாபற்று மாதவராயருடவாலு தாரு மீராபாயி பலபத்திரச் சோழகன் அடைக்கலங் காத்தார் செம்பிய முத்தரசன் பிள்ளை சாட்சி இந்தப்படி இதி ஆதினாயகர் கோயில்க்கு முதகவரியிலார் சவுத்திரி திருமலைராயர் சுவாமியா
6. ரு மலை ரய சுவாமி
7. மி யாரவர்கள்

28 : 8

**இடம்** : கோயில் மண்டபத்தின் மேற்புறச் சுவர்

**காலம்** : சாளுவத் திருமலை

**செய்தி** : பூசைக்கும், திருப்பணிக்கும். திருவிளக்குக்கும் சந்தை வழிச்சாரி வரித்தொகை கொடையாக வழங்கப் பெற்றமை.

1. தாருண வருஷம் (தை)மாதம் 10தேதி ஸ்ரீ மன்மகா மண்டலீசுரன் மேதி
2. னி மிசுர கண்டன் கட்டாரி சாளுவன் சாளுவ திருமலை தேவ
3. மகாராச நொடியூர் தானீஸ்வரர் உடை(ட)யாற்கு நிருபம் நொடியூர்
4. சந்தைவழிச் சாரி ஆயம் உள்ளது நயினார் ஆதிநாயகர்
5. கோயில் பண்டாரத்துக்கு தன்ம சாதனப் பட்டையம் கு
6. டுத்த படியாலே பூசை திருப்பணி திருவிளக்கு கட்டளைக்கு
7. சந்திராதித்தவரையு நயினார் ஆதிநாயகர் கோயில் பண்
8. டாரத்துக்கு நடக்க கடவதாக வி .......... துக்கு ..........
9. த்தன் இடைஞ்சல் பண்ணினவன் கெங்கை கரையிலே காரா
10. ம் பசுவை கொன்றவன் பாபத்திலே நிற்க கடவானாகவும்.

**28 : 9**

**இடம்** : கோயில் மண்டபத்தின் வடபுறச் சுவர்

**காலம்** : ரகுநாத நாயக்கர்?, கி.பி. 1612?

**செய்தி** : கோயிலில் நாயகர், நாச்சியார் செப்புத்திருமேனி அமைத்து அபிஷேகத்திற்கும், பூசைக்கும் பொன் கொடை.

1. துந்துபி வருஷம் ஆவணி 14 தேதி ஸ்ரீமது ரகுனாத (நாயக்கர்) ய்யன் காரியதுக்கு ..........
2. .......... நொடியூர் ஆதிநாயகர் கோயிலுக்கு நாயகர்
3. நாச்சியார் தாம்பரத் திருமேனி நவமாக உண்டான படியினா
4. லே அவர்க்கு பூசை காரியத்துக்கும் அவிஷேக கட்டிளைக்கும் கட்டளையிட்டது
5. நொடியூரவர் அரை மனைக்கு இறுக்கும் இலக்கத்திலே இ
6. ருபத்தஞ்சு பொன்னும் குளக்குடிப் பகுதியில் முத்த
7. ன் மாலையாண்டான் உள்பட்டார் உழவடையில் அஞ்சு
8. பொன்னும் ஆக பொன் 30 இந்தப் பொன் முப்பதும் தானத்தார்
9. வாங்கி நடத்திவரக் கடவராகவு இந்தப்படி சந்திர ஆதித்த வ
10. ரையும் கல்வெட்டி கேடு விழாமல் நடத்திவரவும் இந்தப் புண்
11. ணியத்தை யினி மேல் சீர்மைக்கு வந்தது னா....... யன் இசை
12. கேடு பண்ணினவன் கங்கை கரையிலே காராம் பசுவை கொ.........

**28 : 10**

**இடம்** : கோயில் மண்டபத்தின் வடபுறச் சுவர்

**காலம்** : கி.பி. 16-17 ஆம் நூற்றாண்டு?

**செய்தி** : கோயிலில் திருநந்தவனம் அமைத்தமை.

1. தொண்டை மண்டலம்
2. ஆத்தப்பாக்கம் ஊருடையான்
3 வென்று மாலையிட்டான் திருநந்தவனம்

**28 : 11**

**இடம்** : கோயில் மண்டபத்தின் வடபுறச் சுவர்

**காலம்** : கி.பி. 16-17 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : கச்சிறான்குளத்தில் வசித்த குடிகள் வரிக்கட்டாது ஓடியமையால் அக்குடிகளைச் சார்ந்த பல ஊரவர்கள் பண்டாரத்திற்கு வரியை நாகம நாயக்கர் பெயரில் கொடையாகச் செலுத்தியுள்ளமை

1. சித்தரபானு வருஷம் மாசி மாதம் 22 (ஸ்ரீ)மது சூப்பய அம்பிள ளாயக்கர்
2. அய்யன் பண்டாரத்துகு கீழ் செய்ங்களினாட்டில் வன்னியன் தச்சனகு
3. ......... வன்னியன் னரசிங்கதெவன் உள்ளிட்டாரும் நொடியூ
4. யூர் ஊரவர் உள்ளிட்டாரும் செங்கணா கோட்டை ஊர
5. வர் ஊரவர் உள்ளிட்டாரும் நடுவின் முல்லைவாசல் ஊரவர் உ
6. வர் ஊரவர் உள்ளிட்டாரும் தெற்கு முல்லைவாசல் ஊரவர் உ
7. ள்ளிட்டாரும் உடைய(ா)ண்டி கோட்டையூரவர் உள்ளி
8. ட்டாரும் களக்குடி (விகிர)தெவர் உள்ளிட்டாரும் க. . . னா கோட்டை வாரலர் உ
9. ள்ளிட்டாரும் மங்கள ஊரவர் உள்ளிட்டாரும் யி(ந்த)இருபது உ(ர)வர்களும்
10. மோம் தெண்டன் னிட்டு முற்குடுத்தபடி தெற்கு முல்லைவாசல் கச்சிறன் குளகுடி
11. ஓடிப் போயிருந்து யிராசகர முற்றார் பங்க பண்ணினபடியினால்
12. அவனும் கையேசாமல் புதுக்குடியிலே குடி ஓடிபோன படியாலே அவர்கள்
13. மன்று மனை காணியாச்சி கச்சிறா பெற்றான் பங்கும் . . . . பெரியான்
14. பங்கும் அவன் பங்கும் உண்டான கான உண்டான தெல்லா ஆதி
15. னாயகர் தம்பிராற்கு னாகமனாயக்கர் அய்யந் தன்மமாய் கல்வெட்டி னாட்டின
16. படியினாலே யிந்த கல்வெட்டின காரியத்தை யிந்த கல்வெட்டுக்கு உடை
17. ட ஊராராய் கச்சிரான்களுக்கு வக குடுத்து யிந்த தந்மத்தை தவுத்தவன் அம்பி
18 ள னாயக்கர் அய்யன் பண்டாரத்துக்க ஆயிருத்து யிருனூறு பொன் அவதா

19. ரமுங் குடுத்து ஆக்கினையும் படக் கடவோம் ஆகவும் யுந் தன்ம காரியத்தை
20. (இத)ன் மேல் எந்த ராசகரம் வந்தாமலும் யிந்த தன்மத்தை ணடத்திக் கு
21. டுக்க கடவாராகவு ணடத்தாமல் யிந்த தன்மத்தை யிராசகரம் ஆவது யிந்
22. னாட்டான் ஆவது தாறுமாறு பண்ணி அகுதம் பண்ணினவன் கெங்கை க
23. ரையில் காராம் பசுவை கொன்ற பாவத்திலே போக கடவாராகவும்
24. பிராமணனைக் கொன்ற பாவத்திலே போக கடவராகவும்
25. தங்கள் மாதா பிதாவை கொன்ற பாவத்திலே போக கடவராகவும்
26 ரு அ (ர)ல முன்னத்தூரார் தென்மாவூரார் வத்தணா கோட்டையார்
27. சிள்ளன ஊரார் அ . . .

**28 : 12**

**இடம்** : கோயில் மண்டபத்தின் நுழைவாயில்

**காலம்** : கி.பி. 16-17 ஆம் நூற்றாண்டு?

**செய்தி** : மண்டபத் திருத்தளம் அமைத்தமை

1. துன்மதி வருஷம் ஆனி மாத
2. ம் 20 தேதி தொண்டைமண்டலம் ஆ
3. தந்ப்பாக்கம் ஊருடையான் வென்று
4. மாலையிட்டான் திருத்தளம் தன்மம்

**28 : 13**

**இடம்** : கோயில் எதிர்புற வீட்டிலுள்ள தனிக்கல்

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : புடவை, நூல், மிளகு ஆகியவற்றுக்கு வரிவிதித்தமை பற்றியது

1. .......... ..........
2. .......... ..........
3. .......... ..........
4. .......... ..........
5. குடுத்த படியாவது
6. புடவை பொதி ஒ
7. ன்றுக்கு புதுக்காசு க
8. ாலும் நூ(ல்) பொதிகு பு
9. துக்காசு முக்காலும்
10. மிளகு பொதி ஒன்
11. றுகு புதுகாசு .......
12 பற்றின ச(ரக்கு நிர)
13. ம் பாது கொள்(ள)
14 க் குடுத்தோம்.

# 29. தென்பாதி கல்வெட்டுகள்

ஆ. துளசேந்திரன், தஞ்சாவூர்
மு. ராஜேஷ், தஞ்சாவூர்

29 : 1

**இடம்** : திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம், தென்பாதி சிவன் கோயில் கருவறையின் மேற்புற, தென்புற அதிட்டானத்தின் ஜகதிப் பட்டை

**காலம்** : திரிபுவனச் சக்கரவர்த்திகள் மூன்றாம் இராஜேந்திரன் யா.30, கி.பி 1273

**செய்தி** : இராஜேந்திரசோழபுரத்து நகரத்தாரும் ஜெயங்கொண்ட சோழ பேரிளமை நாட்டாரும் திருத்துறை நாயனாருக்கு திருநாமத்துக் காணியாக பூசைக்கும் திருப்பணிக்கும் இறை நீக்கி நிலமளித்தமை. இ.க.ஆ. 417 - 418/1925.

1. திருபுவனசக்கரவர்திகள் ஸ்ரீ இராஜேந்திரசோழதேவர்க்கு யாண்டு 30வது கும்ப ஞாயிற்று அபர பக்ஷசத்து ப்ரதமையும் புதன் கிழமையும் பெ(ற்ற) .......... ராஜேந்திர சோழ வளநாட்டு புறங்கரம்பை நாட்டு செயங்கொண்ட சோழபுரமான ராஜேந்திரசோழபுரத்
2. து நகரத்தோமும் செயங்கொண்ட சோழ பேரி(ளமை) நாட்டோ(மும் எம்மில்) இசைந்து நம்மூருடையார் திருத்துறை நாயனார் கோயிலில் ஆதிசண்டே(சுர.) ... ... (இ)சைந்து விவஸ்தை பண்ணி (க் குடுத்த) பரிசாவது யிந்நாயனார் திருநாமத்துக்காணி ஆயவரி விற்று வருகிற நி
3. லங்கள் கடமை யிறுத்துடல் மிகுதி கொ(ண்டு) ...... ம் செல்லாதே தீட்டு விட்டு போகையில் யின்னாயனார் திருநாமத்துக் (காணி) ... .. லே பூசைக்கும் திரு(ப்பணிக்கும் உட) லாக ஊர்கீழ் இறையிலி ஆக சேது குடுத்த நிலம் சோ
4. ழ குலமாணிக்க வதிக்கு மேற்க்கு பிச்சதே ..... . நாலாங் கண்ணாற்று நாலா சதுரத்து கீழக்கடைய 5 வேலி நிலம் ... .. மாவினால் மடக்கு 5 வேலி நிலம் இம்மடக்கு நிலம் ....... காணி கீழ் அரையும் யின்னாள் முதல் ஊரிலே ஏற்றிக்
5. கடமை குடிமை வினியோகம் உள்ளிட்ட(னவும்) . . . இந்நிலம் இரண்டு (மாவில் பரப்பு) மடக்கு .......... குடுத்தோம் சந்திராதித்தவரையும் இந்நிலம் இரண்டு மடக்கு ......... த்து ஊர்கீழ் இறையிலி ஆக சேது குடு
6. த்தோம் நம்மூருடையார் திருத்துறை நாயந(ார்) ...

7. ஸ்வர தேவற்கு செயங்கொண்ட சோழபுரமான (ராஜேந்திர சோழ பு)

8. ரத்து நகரத்தோமும் செயங்கொண்ட சோழ (பேரிள)மை நாட்டோமு

9. ம் இவ்வனைவோம் - நகரம் பணிக்கன் நகர கணக(ன்) மி (ப குடை)யான் திருவரங்கப்

10. பெருமான் கண்ணமங்கைனாஇன ராசேந்(திர) சோழப்பிரியன் எழுத்து

**29 : 2**

**இடம்** : மேற்படி கோயில் கருவறையின் தென்புற அதிட்டானத்தின் ஜகதிப் படை

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு?

**செய்தி** : கைலாசமுடையான் ஐநூற்றுவ பட்டனும் அவன் தம்பியும் இக்கோயில் பிள்ளையாருக்கு இரவு நேரத்தில் தயிர் அமுதிட அரிசி கொடையளித்தமை.

1. (மெய்கீர்த்திக்)கு மேல் (திரி)புவனச் ச(க்கரவர்த்திகள்) .......... அபர பக்கத்து

2. .......... பூசத்து நாள் ராசேந்திர சோழ வளநாட்டு புறங்கறம்பை நாட்(டு) .......... (நம்முருடைய)ார் திருத்துறை நாயனர்

3. .......... (க)யிலாசமுடையான் ஐந்நூற்றுவர் பட்டனும் இவன் தம்(பி) . . . ராசேந் .......... தம்பியும் அழகியானான க

4. .......... அரும்பாக்கிழையான் சுந்தரன் திருவிடையாற்க்கு நாங்கள் குடுத்த பரிசாவது ........ வினாகப் பிள்ளையார் ஆண்டு

5. ஒன்றுக்கு இரு நாழி அரிசி பல(ர்) கையிலே அளந்து அமுது செய்து .......... இராக் காலத்து ஒரு தயிர் அமுதுக்கு இடக்கடவோம் ஆக

6. .......... கடவோம் (இ)ரவும் இப்படி சம்மதித்து கல்லு வெட்டி குடுத்தோம் ..........

# 30. மாத்தூர் கல்வெட்டுகள்

ஆ. துளசேந்திரன், தஞ்சாவூர்.
சா. சுகந்தி, தஞ்சாவூர்.

**30 : 1**

**இடம்** : தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம், மாத்தூர், மருந்தீசுவரர் கோயில் கருவறையின் வடபுற அதிட்டானத்தின் ஜகதிப்பட்டை

**காலம்** : முதலாம் குலோத்துங்கன், யா.19, கி.பி.1089.

**செய்தி** : இக்கோயில் நாயனாருக்குப் பூசைக்கும், திருப்பணிக்கும் நிலக்கொடை அளித்தமை பற்றியது.

1. .......... ரின்மை கொண்டான் நித்தவி (னோ)த வளநாட்டு கிழார்க் கூற்றத்து மாத்தூர் கிழவன் . . . தியஞ் செய்த ........ கோ ..........
2. .......... கத் திருப்பணி செய்கிறதுக்கு சுங்கந்தவிர்த்தருளின குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு 19 ......... வில் .........
3. (குலோ)துங்க சோழ மங்கலத்தும் அகழிமங்கலத்தும் நிலமங்கலத்தும் மேற்புறக்குடியிலும் அரியலூரிலும் உள்ளிட்ட ..........
4. .......... மணல் குன்று மா நீங்கலான நிலம் ராச சோழகோன் திரிபுவன வீரப்பெருவிலை கொண்டு (உடையார்) .........

(இதற்கு கிழே காணப்படும் பிறவரிகள்)

1. .......... துவந் கற்மணலும் மணற்குன்றும் மணல் திருத்திப் பயிர் செய்ய(லாம்) நிலமும் உட்பட உள்ளடங்கநிலம் இன்னாயனார் பூசைக்கும் திருப்(பணிக்கும்) .........

**30 : 2**

**இடம்** : மேற்படிக் கோயிலின் தென்புற அதிட்டானத்தின் ஜகதிப் படை

**காலம்** : திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியன், 13 ஆம் நூற்றாண்டு?

**செய்தி** : குலசேகர பல்லவரையர் தம் பெயரில் பூசைக்குச் சந்தி ஏற்படுத்தியமை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ நாயனார் குலசேகர பல்ல(வரை)யர் குலசேகர சந்தியும்
2. திருநாளும் தம் பேராலே கட்டு ......... இவர் நித்தப்படி ஆக நாள்
3. ஒன்றுக்கு இவர் கட்டின சந்தி(ப்) பேறும் சோறும் அறு நா
4. ழியும் அப்பம் ஆறும் நாள்தோறும் சந்திராதித்தவரை ஆக
5. .......... பெறக் கடவாராக .......

30 : 3

**இடம்** : மேற்படிக் கோயிலின் தென்புற அதிட்டானத்தின் ஜகதிப் படை

**காலம்** : திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியதேவன், யா:7, 13 ஆம் நூற்றாண்டு?

**செய்தி** : பல்லவரையன் சந்திக்கு நிலக்கொடை.

1. திரிபுவநச் சக்ரவத்தி சி சுந்தரபாண்டிய தே(வ)ர்க்கு யாண்டு ஏழாவது
2. பல்லவராயர் கட்டிந சன்திக்கும் திருநந் .......... படி சாத்துபடி உள்ளி ..........
3. .......... ரை வேலி நிலமும் ஆக .......... வேலி நிலம் ஏழாவது (ஆ)
4. .......... மை கடமை .......... பயிர் கடமை காணி கடை ..........

30 : 4

**இடம்** : மேற்படிச் சுவரின் குமுதப்படை

**காலம்** : திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியன், யா:7, 13 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : குலசேகர பல்லவரையர் தம் பெயரில் சந்தி ஏற்படுத்தியமை. ஆள்தேவை, தச்சத்தேவை, ஆனைச்(சாலை) போன்ற வரிகளின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டிய தேவர்க்கு ஏழாவது ..........
2. .......... க்கு குலசேகர பல்லவ(ரையர்) கட்டின ..........
3. இஞ்சி மஞ்சள் பருத்தி ஆமணக்கு எள்ளு .......... (செ)ய்து கொ ..........
4. .......... தேவை ஆள்தேவை தச்சத்தேவை ஆனைச் சா ..........
5. (இ)ந்த நிலத்திலே திருச்சூலத்தாபனமும் பண்ணிக் கொண்டு பூசையும் திருநாளும் ..........

30 : 5

**இடம்** : கருவறையின் மேற்புற, தென்புற அதிட்டானம்

**காலம்** : ..........

**செய்தி** : நகரக்கணக்கு உள்ளிட்டார் இறையிலியாக நிலம் அளித்தமை. நிலத்தின் எல்லைகள் பேசப்படுகின்றன.

1. .......... (ை) டயான் கரைபெற வட்டானு .......... கருப்பூரூர் உடையா(ன்) ..........
2. ல்லியக்குடையான் இனையாமனை இவனும்ம நகரக் கணக்கு முன ..........
3. காணியும் இறையிலியுமாக குடுத்த நிலமாவது இம்ம ..........
4. .......... முந் திருநந்தவனமும் உள்ளனவை வயிற்றுகுக் நிங்க
5. .......... த்த வதிக்கு மேற்கு தென்பாற்க .......... க்கு நோக்கி போகிற த ..........

**இதற்கு கீழே காணப்படும் பிற வரிகள்**

1. .......... தன்னாற்றில் தென்குலைக்கு தெற்கும் ..........
2. .......... லைத் திருவீதியில் ..........
3. இவ் எல்லைக்கு மேற்கு
4. .......... ல் திருவீதியில் தெரு(வில்)
1. இந்நாள் கெல்லையுள் நடுவு ப ..........
2. ... . .... க்குத் தெற்கு தெ ..........
3. .......... லை ஒழுக்கை ........ ..
4. .......... லம் நீக்கி தென்சி ..........

**30 : 6**

**இடம்** : அம்மன் சன்னதி வடபுற அதிட்டானத்தின் ஜகதி படை

**காலம்** : மூன்றாம் இராஜேந்திரன்? கி.பி. 1266.

**செய்தி** : கல்வெட்டு சிதைந்துள்ளது.

1. (திரி) புவனச் சக்கரவர்த்திகள் சிரி ராசேந்திர
2. .......... தேவர்க்கு யாண்டு 23 வது
3. .......... கோயிஇல்க் காரியம் இராசநாராயண
4. ...... ... மாராயன் எழுத்து.

**30 : 7**

**இடம்** : அம்மன் சன்னதி மேற்புற அதிட்டானத்தின் ஜகதி படை.

**காலம்** : ..........

**செய்தி** : திருப்பரிசட்டத்துக்கு தேவகன்மிகளிடம் கொடை ஒப்படைப்பு.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச்சக்கர ..........
2. ஆதிசண்டேசுர தேவகன்மிகனோ ..........
3. த் திருநட்டப் பெருமான் ......... க் கலவரங்க ..........
4. க்கும் திருப்பரிசட்டத்துக்கும் இவன் ..........

**30 : 8**

**இடம்** : அம்மன் சன்னதி மேற்புற அதிட்டானத்தின் ஜகதி படை

**காலம்** : ..........

**செய்தி** : நிலவிற்பனையினால் வரும் காசிற்கான வட்டி கோயிலுக்கு வழங்கப்பட்டுள்ளது. நட்டுவக்காணி என்ற தொடர் இடம் பெற்றுள்ளது.

1. .......... (பெ) ற்ற உத்திரத்து நாள் நித்தவினோத வளநாட்டுக் கிழாய் கூற்று மாத்தூர் உ (டைய) ..........
2. .......... னுக்கு நட்டுவக்காணி விலைப்ரமாணம் இசைவுதீட்டு முன்னாள் இன்னாயனார் கோயிலு ..........
3. .......... (பொ)பாலிசை ஏற்றி காசு 1250 இக்காசு ஆயிரத்து இருநூற்று ஐம்பதுக்கும் உடையா(ர்) ..........
4. .......... இவன் .......... ங்களுக்கும் உரித்தாகவும் இவ ..........

**30 : 9**

**இடம்** : அம்மன் சன்னதி மேற்புற அதிட்டானத்தின் பத்மவரி.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கல்வெட்டு சிதைந்துள்ளது.

1. .......... (க)ள் ஸ்ரீ போசள வீரராமனாத தே(வர்க்கு) ..........
2. .......... வளநாட்டு உடையார் திருவையாறு ..........

# 31. கோட்டூர் குமிழிக் கல்வெட்டுகள்

கரு. இராஜேந்திரன், மேலப்பனையூர்
மு. ராஜேஷ், தஞ்சாவூர்

31 : 1

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம் கோட்டூர் பெரியகுளம் மடை.

**காலம்** : சுந்தரசோழன், யா:2, கி.பி.958(?)

**செய்தி** : கோட்டியூரைச் சேர்ந்த இருமடிசோழ சிங்களாந்தி முத்தரையன் ஆன தரங்கம போளறன் இவ்வூர் குளத்தில், கற்குமிழி, கற்கால் அமைத்தது. குமிழி, கால் எனத் தனித்தனியே குறிப்பிடுவதால் இவையிரண்டும் வெவ்வேறான பாகங்கள் என்பதும் புலனாகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோஇராச கே
3. சரி பன்மற்கு யா
4. ண்டு 2 இவா
5. ண்டு கான
6. நாட்டு கோட்டி
7. ஊர் குளம் கற்கு
8. மிழி வைச்சு க
9. ற் கால் நாட்டினா
10. இவ்வூர் இரு
11. மடி சோழ சி
12. ங்களாந்தி மு
13. த்தரையனா
14. ன தரங்கம
15. போளறன்

31 : 2

**இடம்** : மேற்படி குளக்கரையின் பாறை மீதுள்ள கல்வெட்டு.

**காலம்** : முதலாம் குலோத்துங்கன், யா:47, கி.பி.1117.

**செய்தி** : பெரியான் உட்காரக் கண்டனான குலோத்துங்க சோழ கனகராஜன் என்பான் அழிந்த குமிழியை முன்னாளில் அமைத்தவனான இருமடி சோழசிங்களாந்தி முத்தரையன் இக்கல்வெட்டிலும் குறிக்கப் பெறுவது சிறப்பாகும். இதன் மூலம் இக்குமிழியானது 150

ஆண்டுகளுக்கும் மேலாகப் பயன்பாட்டில் இருந்துள்ளமையையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

1. திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ கொலோ
2. துங்க சோழ தேவர்கு யாண்டு 47
3. ஆவது கான நாடான விருதராச பயங்க
4. ர வளநாட்டுக் கானநாட்டுக் கோட்டியூர் அ
5. ரையன் பெரியான் உட்காரக் கண்டனான கொ
6. லோத்துங்க சோழக் கனக ராஜனேன் எங்க
7. ள் மு(த)லிகள் மும்முடி சோழ சிங்களாந்தகி முத்த
8. ரையர் இவ்வூர்க் குளம் கற்குமிழி படுத்துக் கல் நா
9. ட்டி நாட்டின கல்லிலே எழுத்து வெட்டின பின்பு இக்
10. குமிழியழிந்தது அழிந்த குமிழி புதுக்கினே
11. ன் கொலோத்துங்க சோழ கனக ரா
12. ஜனேன்

# 32. திம்மிச்சூர் உரல் கல்வெட்டு

சு. இராஜவேல், சென்னை

32 : 1

**இடம்** : திம்மிச்சூர் ஊரில் சிவன்கோவிலுக்கு அருகில் உள்ள உரல் மீது எழுதப்பட்டுள்ள கல்வெட்டு, திருக்கோவிலூர் வட்டம் விழுப்புரம் மாவட்டம்.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ளது.

**செய்தி** : உரல் செய்தமை.

1. ஸ்ரீ அவிரிவூர் நிலன்
2. மகன் கிழவன் இட்டது.

# 33. செவலப்பொறை சம்புவராயர் கல்வெட்டு

சு. இராஜவேல், சென்னை

**33 : 1**

**இடம்** : செவலப்பொறை, விழுப்புரம் வட்டம், சிவன்கோவில் தெற்குச் சுவர்.

**காலம்** : சம்புவராயர் திருமல்லிநாதன் ஆட்சியாண்டு 19.

**செய்தி** : திருமல்லிநாதன் சம்புவராயன் பெயரில் திருநாமத்துக்காணி ஆக சோணாடுகொண்டான் திருவீதியை அஞ்சினான் புகலிடமாக மாற்றிய செய்தி.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ யாண்டு
2. பத்தொன்பதாவது
3. சகலலோகச் சக்ரவ
4. த்தி இராஜநாராயண
5. ந் திருமல்லி நாதன்
6. சம்புவராயன் திரு
7. நாமத்துக் காணி
8. ஆக தந்த சோணா
9. டு கொண்டான் திருவீதி அஞ்சினான் பு
10. கலிடம்.

# 34. திருத்தியமலை பராந்தகன் கல்வெட்டு

சு. இராஜவேல், சென்னை

34 : 1

**இடம்** : திருத்தியமலை, திருச்சிராப்பள்ளி மாவட்டம், துறையூர் வட்டம், இவ்வூரின் மலைமீது அமைந்துள்ள ஏகபுஷ்பபிரியநாதர் ஆலயத்தின் இரண்டாம் திருச்சுற்று மாளிகையின் வடக்குப் பகுதியில் உள்ள பாறையின் தரையில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு.

**காலம்** : முதலாம் பராந்தகசோழன், யா:39, கி.பி. 946.

**செய்தி** : திருத்தலையூர் கோவிலுக்குத் தேவதான நிலத்தை 20 கழஞ்சு பொன் கொண்டு விலைக்குப்பெற்று திருத்தலையூர் சபையார் கொடுத்தது. இப்பொன் திருவெள்ளறைக்கல்லால் அளக்கப்பட்டது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கு யாண்டு முப்பத்தொன்பதாவது
2. தேவதானம் திருத்தலையூர் ஸபையோம் திருத்தேயத்துப் பெருமானிடை திருவெள்ளறைக் கல்லால்த் துளை
3. .....இருபதின் கழஞ்சு பொன் நிறுப்பித்துக் கைக்கொண்டு இப்பொன் இருபதின் கழஞ்சினிற்கும் திருத்தேயத்துப் பெரு
4. மானடிகளுக்கு தேவதானம் திருத்தலையூர் இவருடைய நில இறையாகக் கொண்டு இக்காணி நிலத்தில் ....இ
5. றையும் எச்சோறும் வெட்டியும் வேதினியும் மற்றும் மெப்பேறபட்ட .... றுத்துக் கொண்டு மாத்தால் நிலத்தால் .... தூட்டு
6. க்கடவோமாகவும் இப்பரிசு காத்து குடுப்போமாய் இறை காவலோலை எழுதிக் குடுத்தேந் திருத்தேயத்து பெருமான
7. டிகளுக்கு திருத்தலையூர் ஸபையோம் பணிக்கத் தொட்டு வாவினா ... க்க எழுதி ப்ரஹ்ம பெருந்திணையான குள ....
8. கிழாநான நிலன் நானூற்றுவனென் இவை என் எழுத்து இப்படி அறிவேன் காச்சுவன் குமரன் நிலகண்டன்னெ இப்படி அறிவேன் காம
9. க்காணி கிரன் நாராயணன்னெ இப்படி அறிவேன் கியன் ஆதவன் நிலகண்டனெ இப்படி அறிவேன் மாடிலன் தூவேதி கேசுவன் முருகனென்
10. இப்படி அறிவேன் மாடிலன் நக்கன் நாராயணனென்
11. இப்படி அறிவேன் கவிசியன் இரணிய கற்ப்பந் சுதனென்
12. இப்படி அறிவேன் காமக்காணி நீலகண்டன் கிரன ...லான்
13. இப்படி அறிவேன் மாடிலன் வற்கன்னெ....
14. சோலையென்

# 35. கோலம் மன்னன் இராமன் இரவிவர்ம்மன் செப்பேடு, கி.பி. 1145-48

கேசவன் வெளுதாட், மங்களூர்
எ. சுப்பராயலு, பாண்டிச்சேரி

இச்செப்பேடு இப்பொழுது லண்டன் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் உள்ளது. அந்நூலகத்தின் ஓர் அலுவலரான நளினி பெர்ஸாத் இதன் படங்களைத் தந்துதவினார். சில ஆண்டுகளுக்கு முன்பு வரை இது கோழிக்கோடு பல்கலைக்கழக வரலாற்றுத் துறையில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வந்தது என்று கேள்வி. 1976இல் கேசவன் வெளுத்தாட் இச்செப்பேட்டைப் படித்து அதன் கருத்தை தான் எழுதி வெளியிட்ட கேரளாவில் பிராமணக் குடியேற்றங்கள். Kesavan Veluthat, *Brahman Settlements in Kerala : Historical Studies,* Sandhya Publications, Calicut University 1978. என்ற ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் செப்பேட்டின் பாடம் முதன் முறையாக இப்பொழுதே வெளியிடப்படுகிறது.

ஒற்றைச் செப்பேட்டில் இரு பக்கமும் எழுதப்பட்டுள்ள இது 36 வரிகள் கொண்டுள்ளது. பன்னிரண்டாம் நூற்றாண்டு வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ளது. மொழி தொடக்கநிலை மலையாளமாகும். வரி 1-4இன் இடப்பக்கத்தில் ஒரு தொடரும், வரி 20இன் தொடக்கத்தில் ஒரு சொல்லும் கிரந்த எழுத்தில் வடமொழியில் உள்ளன. முதலில் குறிப்பிட்ட வடமொழித் தொடரான ப்ரபு$_4$ஹு᳚ பூஜ்ய ச$_0$சா$_0$ம்க என்பது கடபயாதி முறையில் காலத்தைக் குறிப்பிடுகிறது என்று கொண்டால் கலியாண்டு நாள் 1551142 என்று வரும். கூடவே வியாழவட்ட ஆண்டு மேடத்தில் வியாழன் நின்ற என்றுள்ளது. இரண்டையும் சேர்த்துப்பார்த்தால் செப்பேட்டின் காலம் கி.பி. 1145 செப்டம்பர் 22 என்று கிடைக்கும். வரி 29-36 கொண்ட இரண்டாம் பகுதி மூன்றாண்டுகள் கழித்து எழுதப்பட்டது; அது 1148 சூலை மாதத்தைச் சேர்ந்ததாகும்.

இச்செப்பேட்டின் முதல் பகுதி (வரி 1-29) புகழ்மலைச்சேரி என்ற ஊரைச் சேர்ந்த சுவரன்தேவன் என்பவன் கரும்பத்து இராமன் இரவிவர்ம்மன் ஆன கோலத்து திருவடி கோயிலதிகாரிகள் மற்றும், பெருஞ்செல்லூரின் இரு சபைகளிடமிருந்து ஆனயச்சு (ஆனையச்சு) 707ஐக் கடனாகப் பெற்றான் என்றும், அதற்குப் பணயம் (ஈடு) ஆக நூறு பொதி (வித்துப்பாடு) அளவுள்ள தன் நிலபுலங்கள் பலவற்றையும் தன் அடிமைகளையும் எழுதிக் கொடுத்தான் என்றும் இக்கடன் தொகைக்கு 53 ஆனையச்சு வட்டி (பண்டி) கொடுக்கவேண்டும் என்றும் சொல்கிறது. வட்டியை ஈராண்டுகள் தொடர்ந்து செலுத்தாது விட்டால் ஓர் அச்சுக்கு 15 நாழி(நெல்?) என்ற வீதத்தில் தண்டம் செலுத்தவேண்டும் என்று விதிக்கப்பட்டது. இந்தக் கடன் ஒப்பந்தத்துக்கு ஏழு சாதுக்கள் (பெரியவர்கள்) சாட்சிக் கையெழுத்திட்டார்கள்.

செப்பேட்டின் இரண்டாம் பகுதி(வரி 29-36) அதே அரசன் பெருஞ்செல்லூரின் இரு சபைகளுக்கு மேற்கொண்டு 300 ஆனையச்சுக்களைப் பிரமத்துவமாக (அதாவது பிராமண உடமையாக) கொடுத்தான் என்றும் ஆக மேற்சொன்ன 707 அச்சுக்களையும் சேர்த்து மொத்தம் 1007 ஆனையச்சு பிரமத்துவமாகும் என்றும் குறிப்பிடுகிறது. வட்டியும் முதலும் ஆகச் செலுத்தும் அச்சு நாளும் வட்டம் படாதவையாக இருக்கவேண்டும் என்று (வரி 17,21) சொல்லப்பட்டுள்ளது. இச்சொற்றொடர் தமிழ்க் கல்வெட்டுக்களில் வரும் *அன்றாடு நற்காசு* என்ற சொற்றொடரோடு ஒப்பிடத்தக்கது. அதாவது இங்கு வட்டம், வாசி அல்லது மதிப்புக்குறைவு என்ற பொருளில் வந்துள்ளது. வட்டி என்ற பொருளில் பயன்படுத்தப் பட்டுள்ள பண்டி என்ற சொல் ஒரு வட்டார வழக்காகும். வரி 20 தொடக்கத்தில் வரும் அத்யக்ஹு அத்$_4$யக்ஷர் என்ற வட சொல்லின் மாற்று வடிவம் ஆகலாம். வரி 35இல் உள்ள *அத்தக்கர்* இதன் மலையாள வடிவமாகக் கொள்ளலாம். இது கண்காணி என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

வடகேரளத்தில் கண்ணூர், வயநாடு மற்றும் காசர்கோடு மாவட்டப் பகுதிகளை உட்கொண்டு கோலம் என்ற நகரைத் தலைநகராகக் கொண்ட நாட்டை ஆண்ட ஓர் அரசின் பட்டப்பெயர் கோலத்துத் திருவடி ஆகும்.

இவ்வரச குலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் இப்பகுதியை முதலில் சேர அரசுக்கு உட்பட்டும், 12ஆம் நூற்றாண்டு தொடங்கி தனித்தும் ஆண்டது. கோலத்து *திருவடி பிற்காலத்தில்* மருவி கோலத்திரி என்று வழங்கியது. இவ்வரச குலம் வடமொழியில் மூஷிக வம்சம் என்றழைக்கப் பட்டது. பதினோராம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மூஷிக வம்ச காவியம் என்ற வடமொழி நூல் இக்குலத்தின் வரலாற்றைப் புராண நடையில் விவரிக்கிறது.

பெருஞ்செல்லூர் கண்ணூர் மாவட்டத்தில் இன்று தளிப்பரம்ப என்றழைக்கப்படும் ஊராகும். *சங்க காலத்திலிருந்தே இது ஒரு புகழ்பெற்ற* வைதிக பிராமண ஊராக விளங்கியது. அகநானூறு 220 இந்த ஊரை பரசுராமனோடு தொடர்புபடுத்திப் பேசுகிறது. இந்த ஊர்க் கோயிலில் கூடியாட்டம் என்று சொல்லப்படும் வடமொழி நாடகங்கள் யாவும் முதலில் அரங்கேற்றம் பெற்று வந்த மரபு குறிப்பிடத்தக்கது.

## செப்பேட்டுப் பாடம்

0 ஸ்வஸ்தி ஸ்ரீ ப்ரபு$_4$: பூஜ்ஜ்ய ச$_0$ச$_0$ரம்க

1 மேடத்தில் வியாழந் நின்ற கன்னி ஞாயற்றில்ச் செய்த காரியமாவிது கரும்பத்து இராமன் இர

2 வி வர்ம்மராய கோலத்து திருவடி கோயிலதிகாரிகள் திருக்கையாலும் பெருஞ்செல்லூர் இரண்டு த

3 வை திருக்கையாலும் *எழுநூற்று ஏழு ஆனயச்சு கொண்டு கடவர்* புகழ்மலைசேரிச் சுவரன்தேவன்

4 கொண்டு கடவன் இவ்வெழுநூற்றேழு ஆனயச்சினும் ஆண்டு திகஞ்நு கால் குறயப் பதினொன்று ப

5 ண்டி அய்ம்பத்து மூன்று செய்தச்சு பண்டி கொடுக்கவுங் கொள்ளவுங் கடவராக இப்பொன் எழுநூற்றேழு ஆன

6 யச்சினும் பணயம் வலியகீழலும் புதுவயலுஞ் செறிய கீழலும் பெருந்துமரும் இது நால்ப்பத்தஞ்சு

7 பொதி வித்துபாடும் பாதிரி காடு பதினஞ்சு பொதி வித்துபாடும் வளயோடி பதினாலு பொதி வித்துபாடும்

8 கிழியறையும் மேல்ப்பட்டியும் அஞ்சு பொதி வித்துபாடும் புதுக்கொள்ளி எட்டு பொதி வித்துபாடும் பூதனூர்

9 ச் செறிய கீழல் அஞ்சு பொதி வித்துபாடும் புதுக்கொள்ளி எட்டு பொதி வித்துபாடும் இடர்வாழ்க்க நாலு பொ

10 தி வித்துபாடும் சிரிதேவி வேலியகமும் குன்றமாகின்ற புரயடம் இரண்டெடமும் வான்புறை யாகின்ற புரயடமும்

11 புதுக்குடிப் புரயடமும் அகழகத்து புரயடமும் வளவன் காளி வேலியகமும் கூளிக்குன்றும் மாணிக்கஞ்சி

12 ரிகண்டார் வேலியகமும் துளுவரூர் ஆகின்ற புரயடமும் பட்டுகத்து புரயடமும் இப்பேர்ப்பட்ட பூமி

13 ஆறு பொதிவித்துபாடும் புரயடம் பதினொன்றுந் தங்ஙள்க்கொள்ள ஆளடியாரையும் பணயமாக வை

14 ப்பிச்சு கொண்டார் இராமன் இரவிவர்ம்மராய கோலத்து திருவடி கோயிலதிகாரிகளும் பெரு

15 ஞ் செல்லூர் இரண்டு தவையும் வச்சு கொடுத்தான் சுவரன்தேவன் குற்றிகாட்டூர்த் தேவர்க்கும் பு

16 கழ்மலைசேரியமைச்ச பிரமத்துவமும் அய்ம்பத்திரண்டு பொதி நெல்லு மொழிச்சு புறமிட்டு

17 ....பணயம் எழுதிச்சு கொண்டு பண்டி கொடுக்கும் அய்ம்பத்து மூன்றச்சும் அன்று வட்டம் படாதச்சு கொடு

18 [க்க க]டவர் கன்னி ஞாயற்றில் மகயிரத்தினாள் திருவடி கோயிலதிகாரிகள் இருந்நருளுமெடத்து கொண்டுவ

19 ந்நு கொடுக்கக் கடவர் இப்பிரமத்துவத்தினு இராமன் இரவிவர்ம்மராய கோலத்து திருவடி கோயிலதிகாரிகள்

20 (அத்யக்ஷ) இப்பண்டியச்சு அய்ம்பத்து மூன்றச்சும் புகழ்மலைசேரி மூத்தவர் கொடுக்க கடவர் இவச்சு முதல்

21 விட்டு நாளும் வட்டம் படாதவை எழுநூற்றேழு அச்சுங் கொடுக்க கடவர் இராண்டு பண்டி கொடாக்கால்ப் பதினஞ்ஞா

22 ழி பலம் பொருமாறு அச்சின்வாய்ப் பதினஞ்ஞாழி பலந் தோன்றுமாறு வைப்பிச்சு கொள்ளக் கடவர் திருவ

23 டி கோயிலதிகாரிகளும் இரண்டு தவையும் இப்பரிசறியுஞ் சாதுக்களாவோர் கோக்கானச்சேரி

24 த் தேவன் குமாரசர்ம்மனும் செறுபாலைகட்டு சுவரன் இயக்கனும் திட்டையில் நாராயணன் உழுத்

25 திரனும் குற்றிகாட்டூர் பொதுவாள் நாராயணன் திருவிக்கிரமனும் இளம்பாலபுற கேரளன் க

26 ண்டனாய வில்லு நெறியாரு குற்றிகாட்டூர் மாணி சந்தி ஏரனும் பூவத்தூர் இரவிகோதோரம்மனு மறி

27 வராக இக்காரியம் புகழ்மலைசேரிச் சுவரன்தேவன் தம்பிமார் உண்ணின்று செய்விச்சு கொடு

28 த்தார் இவர்கள் சொல்லக் கேட்டு கேள்ப்பிச்சு கைய்யெழுதி யறிவேன் பூதிச்சேரி இராயரங் கேர

29 ளன் எழுத்து [ ]* வகையும் இதல்க்கடுத்த கர்க்கடகவ் வியாழத்தில் மிதின ஞாயற்றில்ப் பெருஞ் செ

30 ல்லூர் இரண்டு தவைய்க்கும் முன்னூறு அச்சு பிரம்மத்துவங் கொடுத்தருளியார் கரும்பத்து இராமன் இரவி

31 வர்ம்மராய கோலத்து திருவடி கோயிலதிகாரிகள் இதினு கூட்டு இவை முன்னூறு அச்சினும் பெ

32 ருஞ் செல்லூர்ப் பூமி [ய]டிக் கொடுத்தருளிது இவை முன்னூறு அச்சின் பலமும் கன்னிவ்வியாழம் பு

33 க்க கன்னி ஞாயறு முதல் வக கூட்டிப் பகுப்பிது இவை இரண்டு வகையும் ஆயிரத்து ஏழு ஆனயச்சு

34 ம் இரண்டு [தவை]ய்க்கும் பிரம்மத்துவங் கொடுத்தருளியார் இராமன் இரவி வர்ம்மராய கோலத்து தி

35 ருவடி கோயிலதிகாரிகள் இரண்டு வகைய்க்கும் அத்தக்கர் திருவடி கோயிலதிகாரிகள் இவை

36 பாலைக்கல் இராயன் கோதோரம்மன் எழுத்து

---

* அடைப்புக் குறியுள்ள இடத்தில் இதயத்துக்குள் நட்சத்திரம் படம் வரையப்பட்டுள்ளது. இது அரச இலச்சினையாகலாம்.



கோலம் செப்பேடு - முன்பக்கம் வலப்பகுதி

# 36. "பட்டணத்தில் முசிறியின் தடயங்கள்" சோதனை அகழ்வாய்வுகள் 2004 - ஓர் அறிக்கை

வீ. செல்வகுமார்,
கே.பி. ஷாஜன்,
பி.கே. கோபி, திருப்புணித்துறை, கேரளா.

பழந்தமிழகத்தின் முன்வரலாற்றுக் காலகட்டத்தில் (Early Historic) இந்தியப் பெருங்கடல் வாணிகம் ஒரு முக்கிய பங்கு வகித்தது. இவ் வாணிகத்தின் ஒரு பகுதியாக ரோமானியப் பேரரசின் பகுதிகளிலிருந்து பொன் மற்றும் வெள்ளிக்காசுகளும், மதுவகைகளும் மற்றும் பல பொருட்களும் தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டன. பழந்தமிழகத்தில் இருந்து மிளகு, விலையுயர்ந்த கல் மணிகள் மற்றும் பல பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. இவ்வாணிகத்தைப் பற்றிய தகவல்கள், பெரிப்ளூஸ் மற்றும் பிளினி, டாலமி ஆகியோரின் குறிப்புகளிலும் சங்கத் தமிழ் இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. இவ்வாணிகத்தில் தொடர்புடைய பல துறைமுகங்கள், தமிழகத்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் கண்டறியப்பட்டு தொல்லியல் அகழ்வாய்வுகள் நடத்தப்பட்டு உள்ளன. எ.கா. அரிக்கமேடு, காவேரிப்பூம்பட்டினம், அழகன்குளம் மற்றும் கொற்கை (ஜெயகுமார் 2001). ஆனால், பண்டைய தமிழகத்தின் ஒரு பகுதியான கேரள இலக்கியங்களில் பல குறிப்புகள் இருந்த போதிலும், தொல்லியல் வழி இவை கண்டுபிடிக்கப்படவில்லை. ரோமானிய காசுகள் எய்யல், வள்ளுவள்ளி மற்றும் கோட்டயம் போன்ற இடங்களிலும், பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் எண்ணற்ற இடங்களிலும் கிடைக்கப்பெற்ற போதும், இக்கால கட்டத்தைச் சார்ந்த ஊரிருக்கை ஒன்று கூட இதுவரை கேரளத்தில் கண்டுபிடிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

முசிறி எனப்படும் புகழ்வாய்ந்த சங்ககாலத் துறைமுக நகரை கண்டுபிடிப்பதற்குப் பல ஆய்வாளர்கள் முயன்றும் கடந்த 2003 வரை எந்தத் தடயமும் கிடைக்கவில்லை. (Chedambath 1997, Gurukkal and whittaker 2001). கொடுங்களூர் பகுதிகளில் அனுஜன் அச்சன் (1946) கே.வி. இராமன் (1976) ஆகியோர் அகழ்வாய்வு செய்த போதிலும் முன் வரலாற்றுக்காலத் தடயங்கள் ஏதும் காணவில்லை. இருப்பினும் இடைக்கால சேரர்களின் தலைநகராக விளங்கிய கொடுங்களூரே முசிறி என்று முடிவாகக் கருதப்பட்டுவந்தது.

முனைவர். ஷாஜன் 1990-களில் தனது முனைவர் பட்டத்திற்கான ஆராய்ச்சியின் ஒரு பகுதியாக பட்டணத்தில் சேகரித்த பானை ஓடுகளில் ஆம்போரா (amphora) ஜாடிகளின் துண்டுகள் இருப்பதை இங்கிலாந்தில் உள்ள சவுத்தாம்ப்டன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஏநாபர்ட்டா டாம்பர் 2003இல் உறுதி செய்தார். மேலும் இந்த ஓடுகளிலிருந்து முன்வரலாற்றுக்

காலத்தைச் சேர்ந்த பானை ஓடுகள் செல்வகுமாரால் அடையாளம் காணப்பட்டன. மேற்குறிப்பிட்ட ஆய்வாளர்களுடன் முனைவர் பி.ஜே. செரியன் அடங்கிய குழு பட்டணத்தில் தொடர்ந்து மேற்கொண்ட ஆய்வு (Shajan et. al.2004) கேரள முன் வரலாற்றுக்கால ஆய்வில் ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியுள்ளது.

இம் முதற்கட்ட ஆய்வை அடுத்து, திருப்புணித்துறாவில் உள்ள பாரம்பரிய ஆய்வு மையம். 2004 ஏப்ரல்-மே மாதங்களில் இந்திய தொல்லியல் பரப்பாய்வுத் துறையின் அனுமதியுடன் சோதனை அகழ்வாய்வுகள் நடத்தியது. இவ்வகழ்வாய்வுகளின் முடிவுகள் கீழே தரப்படுகின்றன.

### பட்டணம்-அமைவிடம்

பட்டணம் எர்ணாகுளம் மாவட்டத்தில் பரவூர் வட்டத்தில், வடக்கு பரவூருக்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் உள்ள ஒரு சிற்றூராகும். இவ்வூருக்கு சுமார் ஒரு கி.மீ. தெற்கே பரவூர்தோடு எனப்படும். பெரியாற்றின் கிளையாறு பாய்கிறது. பெரியாறு பட்டணத்தின் வடமேற்கே சுமார் 5 கி.மீ தொலைவில் கடலில் கலக்கிறது. இவ்வூரில் சுமார் ஒரு சதுர கி.மீ பரப்பளவில் தொல்லியல் தடயங்கள் காணப்படுகின்றன. இங்கு கிராமவாசிகள் தோண்டிய குழிகளிலிருந்து பல உறை கிணறுகளும் கட்டிடங்களின் பகுதிகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இங்கு சுமார் 2 மீட்டர் உயரமுள்ள மண்மேடு சுமார் 600×400 சதுர மீட்டர் பரப்பளவில் காணப்படுகிறது.

### சோதனை அகழ்வாய்வுகள்

பட்டணத்தில் திரு இராஜகோபால் என்பவரின் வீட்டுக் கொல்லையில் இரண்டு 2மீ.×2மீ. அளவுள்ள சோதனைக் குழிகள் இவ்வூரிருக்கையின் பண்பாட்டு நிலைகளையும், முக்கியத்துவத்தையும் அறிவதற்காகத் தோண்டப்பட்டன.

### சோதனைக்குழி - 1

இக்குழியில் 2.6 மீ கனமுள்ள மண்ணடுக்குகள் காணப்பட்டன. ஒரு செங்கற்சுவரின் பகுதி, கூரை ஓடுகள் கல் மற்றும் கண்ணாடி மணிகள் இங்குக் கிடைத்தன. இக்குழியின் அடிப்பகுதியில் கிடைத்த மண்ணடுக்கு களில் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்பு பானை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன.

### சோதனைக்குழி - 2

சோதனைக்குழி-2ல் 2.4மீ. கனமுள்ள மண்ணடுக்குகள் காணப் பட்டன. ஒரு கட்டடத்தின் மூலைப்பகுதி, செப்பு நாணயங்கள், கூரை ஓட்டுத்துண்டுகள் இங்குக் கிடைத்தன. இங்கும் கீழே உள்ள மண்ணடுக்குகளிலிருந்து பெருங்கற்படைக்காலத் தடயங்கள் கிடைத்தன.

## பண்பாட்டு நிலைகள் (Cultural Periods)

இவ்வகழ்வாய்வின் மூலம் நான்கு பண்பாட்டு நிலைகள் அடையாளம் காணப்பட்டுள்ளன.

### I. பெருங்கற்படைக்காலம்

பெருங்கற்படைக்காலத் தடயங்கள் சுமார் 2.1 மீட்டரிலிருந்து 2.6 மீட்டர் வரை உள்ள மண்ணடுக்குகளில் காணப்பட்டன. இம் மண்ணடுக்குகளில் கருப்பு-சிவப்பு பானை ஓடுகளும் சிவப்பு பானை ஓடுகளும், இரும்பிலான அம்புமுனைகளும் காணப்படுகின்றன. ஆம்போரா ஜாடித் துண்டுகளோ, செங்கற்துண்டுகளோ இம் மண்ணடுக்குகளில் காணப்படவில்லை. பெருங்கற்காலத்தை அடுத்து வந்த முன்வரலாற்றுக் காலத்தில், கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த ஆம்போரா ஜாடித் துண்டுகள் கிடைப்பதால், இக்காலகட்டம் கி.பி. முதல் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகக் கருதலாம்.

### II. முன் வரலாற்றுக் காலம்

சுமார் 0.90 மீட்டரிலிருந்து 2.1 மீட்டர் வரை இக்காலத்தின் மண்ணடுக்குகள் காணப்படுகின்றன. இங்கு அதிக அளவில் செங்கற் துண்டுகளும், கூரை ஓட்டு துண்டுகளும் ஆம்போரா ஜாடித்துண்டுகளும், கல்மற்றும் கண்ணாடி மணிகளும், இரும்பு ஆணி துண்டுகளும் 40×18×6 செ.மீ. அளவுள்ள செங்கல் செங்கற்கட்டங்களின் பகுதிகளும் ஒரு சங்ககால சேரர் காசும் காணப்பட்டன. இக்காலகட்டம் கி.பி. முதலாம் நூற்றாண்டுமுதல் நான்காம் நூற்றாண்டு வரை இருந்ததாகக் கருதலாம்.

### III. இடைக்காலம்

இக்காலத்தின் மண்ணடுக்குகள் 0.6 மீட்டர் முதல் 0.9 மீட்டர் வரை காணப்பட்டன. பச்சை நிற கண்ணாடிக் கலவை பூசப்பட்ட (green glazed) பானை ஓடுகளும் அடையாளம் காண இயலாத வட்ட வடிவமுள்ள செப்புக் காசுகளும் கண்ணாடி மணிகளும் காணப்பட்டன. சீனாவைச் சார்ந்த செலடான் எனப்படும் பானை ஓடுகள் இங்கு காணப்படவில்லை. எனவே இந்தக்காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்கும், பத்தாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாகக் கருதலாம்.

### IV. நவீனகாலம்

இக்காலத்தின் மண்ணடுக்குகள் தரை மேற்பரப்பிலிருந்து 0.60 மீவரை காணப்பட்டன. இம் மண்ணடுக்குகளில் சில கண்ணாடி மணிகளும் இரும்பு ஆணிகளும் கிடைத்தன மேலும் ஒரு வெள்ளியிலான கொச்சிப்புத்தன் எனப்படும். 18-19ம் நூற்றாண்டுக் காசும் கிடைத்தது. இக்காலகட்டம் 18-20ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

### பண்பாட்டு சின்னங்கள்

### ஆம்போரா

நான்கு, ரோமானிய ஆம்போரா மதுஜாடிகளின் துண்டுகள் இவ்வகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றில் சில இத்தாலியில் உள்ள நேப்பில்ஸ் வளைகுடாபகுதியில் தயாரிக்கப்பட்டவை என இவற்றை ஆய்ந்த முனைவர் றொபர்ட்டா டாம்பர் கருதுகிறார். இதுபோன்ற பல ஆம்போரா ஜாடிகளின் துண்டுகள் மேற்பரப்பு ஆய்வின் போது கண்டுபிடிக்கப்பட்டன.

### ரூலடடுத் தட்டுகள் (Rouletted ware dish)

இவ்வகழ்வாய்வில் சுமார் 20 ரூலடடுத் தட்டுகளின் துண்டுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இந்தப் பானைவகைகள் மத்திய தரைக்கடல் பகுதியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையாக முன்பு கருதப்பட்டன. கோக்டே (Gogte 1997) XRD-சோதனை மூலமாக இந்தவகை தட்டுகள் வங்காளத்தில் சந்திரகேதுகர்-தாம்லுக் பகுதியில் தயாரிக்கப்பட்டிருக்கலாம் எனக் கருதுகிறார். ஆயினும் அழகன்குளம் அகழாய்வில் இந்தவகை ஓடுகள் ஏராளமாகக் காணப்படுகின்றன என்பது குறிப்பிடத்தது.

### மணிகள்

கல் மற்றும் கண்ணாடி மணிகள் இவ்வகழ்வாய்வில் அதிக அளவில் கண்டுபிடிக்கப்பட்டன. கண்ணாடி மணிகள் சிவப்பு, பச்சை மற்றும் நீல நிறங்களில் வட்டம், அறுகோணம் மற்றும் இருகூம்பு வடிவங்களில் காணப்படுகின்றன. இங்கு கிடைத்த கல் மணிகள் கார்னீலியன், வரியுள்ள அகேட் மற்றும் பளிங்கு (quartz) கற்களால் செய்யப்பட்டவை.

### சங்ககால சேரர் காசு

அகழ்வாய்வு குழி 2இல் 90-100 செமீ ஆழத்தில் ஒரு சதுர வடிவ செப்புக் காசு கண்டுபிடிக்கப்பட்டது. இக்காசின் ஒரு புறம் சேரருடைய சின்னமான நாண் ஏற்றப்பட்ட வில்லும் அதன் கீழே அங்குசமும் காணப்படுகின்றன. மறுபுறம் ஒரு யானை உருவம் உள்ளது. இவ்வுருவத்தின் மேற்புறம் காணப்படும் சில குறியீடுகள் தெளிவாக இல்லை. அவை மற்ற சேரர் காசுகளில் காணப்படும் மங்கலச் சின்னங்கள் போலத் தோன்றுகின்றன. கரூர் முதலிய இடங்களில் கிடைத்த சேரர்காலச் செப்புக்காசுகளின் அடிப்படையில், இது சங்ககாலச் சேரர்களின் காசு என்று கருதலாம்.

### முடிவுரை

பட்டணம் அகழ்வாய்வுகள் கேரளத்தில் முதன்முதலாக முன்வரலாற்றுக்கால தடயங்களான ஆம்போரா, ரூலடடுத் தட்டுகள், சங்க காலச் சேரர் காசு மற்றும் செங்கற்கட்டிடங்களை வெளிப்படுத்தியுள்ளன. இவ்வகழ்வாய்வும் களமேற்பரப்பு ஆய்வுகளும் பட்டணம் ஒரு முன்

வரலாற்றுக்கால நகரமாக இருந்ததைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. இப்பகுதியில் நடத்தப்பெற்ற துணைக்கோள் ஒளிப்பட (Geological) ஆய்வுகளிலிருந்தும் (Satellite imagery) (Shajan 1998, Narayana et al. 2001) பட்டணத்திற்குத் தெற்கே பாயும் பரவூர்தோடு என்னும் பெரியாரின் கிளையாறே பழைய பெரியாறாக இருந்தது என்று கருதப்படுகிறது. (Shajan et al. 2004). கொடுங்களூர் பகுதியை விட பட்டணத்தில் அதிக அளவில் தற்போதும் உப்பங்கழிகளும் (back waters) வாய்க்கால்களும் காணப்படுகின்றன. இதனடிப்படையிலும், கொடுங்களூர் பகுதியில் முன்வரலாற்றுக்காலத் தடயங்கள் இல்லாததாலும், பட்டணத்தின் பரப்பளவு பண்டைத் தமிழக நகரங்களை ஒத்து இருப்பதாலும் பட்டணம் சங்கஇலக்கியம் குறிப்பிடும் முசிறி என்ற துறைமுக நகரமாக இருக்கலாம் என்று கருதலாம். இதை உறுதி செய்ய கூடுதல் அகழ்வாய்வு மற்றும் கள மேற்பரப்பாய்வுகள் மேற்கொள்ளத் திட்டமிடப்பட்டுள்ளது.

## References


ஜெயகுமார், பா. (2001) தமிழகத் துறைமுகங்கள். தஞ்சாவூர் : அன்பு வெளியீட்டகம்.

Achan, A.P. 1946. Annual report of the Archaeological Department, Cochin State for the year 1121 M.E. (1945-46) (Ernakulam Cochin).

Chedambath, R. 1997. Investigations into the Megaltıhic and Early Historic Periods of the Periyar and the Ponnanı River Basıns of Kerala. PhD dissertation, Deccan College Post-Graduate and Research Institute.

Gogte, V.D. (1997). The Chandraketugarh-Tamluk regıon of Bengal: Source of the Early Historic Rouletted Ware from Indıa and Southeast Asia. Man and Environment 22(1): 69-85.

Gurukkal, R. and C.R. Whittaker. 2001. In search of Muziris. Journal of Roman Archaeology 14, 335-50.

Narayana, A.C, C.P. Priju and A. Chakabarti. 2001. Identification of a palaeodelta near the mouth of Periyar River in central Kerala. Journal of the Geological Society of Inida 57, 545-47.

Raman, K.V. 1976. Archaeologıcal Excavations ın Kerala. Souvenir of the 37th annual meeting of the Indian Historical Congress. Calicut Universıty, India, Dec.29 -31, 6-10.

Shajan, K.P. 1998. Studies on late Quaternary sedıments and sea level changes of the central Kerala coast, India. Unpublished Ph.D. thesis, Cochin Universıty of Science and Technology, Cochın, India.

Shajan, K, P., R. Tomber, V. Selvakumar and P.J. Cherian. (2004). Locating the Ancıent Port of Muzirıs: Fresh Fındıngs from Pattanam. Journal of Roman Archaeology 17: 312-320.

# 37. புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

மு. ராஜேஷ், தஞ்சாவூர்

தமிழ்ப் பல்கலைக்கழகம், கல்வெட்டியல் துறை முதுகலைப்பட்ட மாணவர்களால் களஆய்வின் வழி கண்டுபிடிக்கப்பட்ட சில முக்கிய தொல்லியல் இடங்களைப் பற்றிய தொகுப்பு இங்கு அளிக்கப்படுகிறது.

**அரியாணிப்பட்டி (கந்தர்வகோட்டை வட்டம், புதுக்கோட்டை மாவட்டம்)**

தஞ்சையிலிருந்து தென்திசையில் இருபது கிலோமீட்டர் தொலைவில் தஞ்சை-புதுக்கோட்டை நெடுஞ்சாலையில் இவ்வூர் உள்ளது. சாலையின் மேற்கு முகமாக அமைந்துள்ள கருப்புக்கோயில் திடல், சிவன்கோயில், காளிகோயில் திடல் ஆகிய இடங்களில் தொல்லியல் மற்றும் வரலாற்றுக்கால எச்சங்கள் கண்டறியப்பட்டுள்ளன. ஊரின் மேற்பகுதியில் கருப்புக் கோயில் திடலருகே வண்ணான் குளத்தின் கரைப் பகுதிகளில் சிதைவுற்ற ஈமத்தாழிகள், கருப்பு சிவப்பு மட்பாண்டத் துண்டுகள், இரும்புக் கசடுகள் சிதறுண்டு காணப்படுகின்றன. கருப்புக்கோயில் திடலின் தென்பகுதியிலுள்ள சிவன் கோயிலின் மேட்டு நிலத்திலும் இது போன்ற எச்சங்கள் உள்ளன. இங்கு சோழர்காலக் கோயிலொன்று இருந்தமைக்குச் சான்றாக பைரவர், துர்க்கை, சண்டேசுவரர், நந்தி ஆகிய கற்சிலைகளைச் சுட்டலாம். மேலும் பதினாறாம் நூற்றாண்டு எழுத்தமைதியைக் கொண்ட எல்லைக் கல்லொன்றும் உள்ளது.

ஊரின் தென்மேற்குப் பகுதியில் உள்ள காளிகோயில் எனப்படும் இடத்தைச் சுற்றிலும் சுமார் 35 ஏக்கர் பரப்பளவில் இரும்பு பொருட்கள் தயாரிக்க பயன்பட்ட உலைகள், கசடுகள் மற்றும் ஈமத்தாழிகள் காணப்படுகின்றன. இத்திடல் முழுவதும் இவ்வெச்சங்கள் காணப்படினும் ஐந்து ஏக்கர் பரப்பளவிலேதான் இவை நெருக்கமாக உள்ளன. காளி கோயிலின் தென்புறத்தில் மேய்குடிப்பட்டி செல்லும் சாலைக்கருகே மிகவும் சிதைவுற்ற நிலையில் ஈமத்தாழிகள் அறியப்பட்டன. இப்பகுதிக்கருகே குழுமங்களாக ஆங்காங்கு தரைமட்டத்திலிருந்து சற்று உயர்ந்த நிலையில் சுடுமண்ணிலான உலைகளும் காணப்படுகின்றன. இதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் உலையினுள் காற்று செலுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்ட சுடுமண் குழாய்களும் குவியலாய் கொட்டப்பட்டுள்ளன. இவ்வுலைகள் ஈமத்தாழிகளோடு காணப்பட்டாலும் அவற்றினோடு தொடர்புடையவை எனத் கருதத்தக்க சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. இது போன்ற உலைகளும் இரும்புக் கசடுகளும் புதுக்கோட்டை நெடுஞ்சாலைப் பகுதியில் தொடர்ச்சியாக பெருங்களூர், முள்ளூர், மலியப்பட்டி, கொத்தம்பட்டி, பிசனத்தார் போன்ற இடங்களில் அறியப்பட்டுள்ளன.

### அரவம்பட்டி (கந்தர்வகோட்டை வட்டம், புதுக்கோட்டை மாவட்டம்)

கந்தர்வகோட்டையிலிருந்து செங்கிப்பட்டி செல்லும் சாலையில் மேற்குத் திசையில் வாண்டையன்பட்டி பிரியும் சாலையிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் அரவம்பட்டி அமைந்துள்ளது. இவ்வூருக்குச் செல்லும் பாதையின் இரு மருங்கிலும் சுமார் 25 ஏக்கர் பரப்பளவில் கல்வட்டம், ஈமத்தாழிகளுடன் கூடிய பெருங்கற்கால இடுகாட்டுப் பகுதி காணப்படுகின்றன. சாலையின் வலப்புறத்தே சிதைவுற்ற நிலையில் சில கல்வட்டங்களும் ஈமத்தாழிகளும் இடப்புறத்தே தற்பொழுது மழைநீர் செல்லும் வாரியாக அமைந்துள்ள இடத்தில் ஈமத்தாழிகளும் பரவலாக உள்ளன. இங்கு காணப்படும் தாழிகள் தரைமட்டத்திற்குக் கீழே செங்குத்தாக நிறுத்தப்பட்டு அதன் வாய்ப்பகுதி மற்றொரு சுடுமண்ணாலான மூடியைக் கொண்டு மூடப்பட்டு இதன் மேல் சரளைக் கற்களைக் கொண்டு மேடு போன்று குவியலாகக் கொட்டப்பட்டுள்ளன. இவ்வூரின் அருகாமையிலுள்ள அரியாணிப்பட்டியில் காணப்படுவது போன்று தாழியினுள்ளும், வெளிப்பகுதியிலும் ஈமப்பொருட்கள் வைக்கப்பட்டு உள்ளன. சாலைப்பணிக்காக பல தாழிகள் சிதைக்கப்பட்டிருப்பினும் இத்தகைய அமைப்பில் ஐம்பதிற்கும் மேற்பட்டவை இன்னும் எஞ்சியுள்ளன.

### கொந்தகப்பட்டி (கந்தர்வகோட்டை வட்டம், புதுக்கோட்டை மாவட்டம்)

கந்தர்வகோட்டையிலிருந்து கிழக்கே பட்டுக்கோட்டை செல்லும் சாலையில் பத்து கிலோமீட்டர் தொலைவில் கொத்தகப்பட்டி உள்ளது. இவ்வூரை ஒட்டிப் பாய்கின்ற காட்டாற்றின் தென்கரையில் ஆண்டிக்குழி எனப்படும் தொல்லியல் வாழ்விடம் உள்ளது. தரைமட்டத்திலிருந்து இரண்டு மீட்டர் உயரத்தில் முப்பது ஏக்கர் பரப்பளவைக் கொண்ட இம்மேட்டில் பெருங்கற்காலம் முதற்கொண்டு வரலாற்று இடைக்காலம் வரையிலான பண்பாட்டுக் கூறுகள் பரவிக் கிடக்கின்றன. கருப்பு சிவப்பு பானையோடுகளைத் தவிர்த்து இங்கு சேகரிக்கப்பட்ட தொல்பொருட்களுள் கண்ணாடியிலான மணிகள், வளையல்கள், சுடுமண் விளக்குகள், சுடுமண் உருவங்கள் பல வுகை உடைந்த கெண்டியின் முனைகள் போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். தரையோடு பதிக்கப்பட்ட நீர் கொண்டு செல்லும் சுடுமண் குழாய்கள், உறைகிணறுகள், செங்கற்கள் காணப்படுவது சோழர் காலத்தில் இவ்விடம் முக்கியத்துவம் பெற்று விளங்கியுள்ளமையை உணரலாம். இதற்குச் சான்றளிக்கும் வகையில் இம்மேட்டின் மேற்பகுதியில் பழவேரியம்மன் என வழங்கப்படும் கோயிலில் சோழர் கலைப்பாணியுடன் கூடிய சப்தகன்னியர், ஸ்ரீதேவி, பூதேவியுடன் கூடிய விஷ்ணுவின் கற்சிலைகளும், மேட்டின் வடகரையில் உடைந்த சிவலிங்கத்தின் பீடமும் உள்ளன.

### குடுமியான்மலை (இலுப்பூர் வட்டம், புதுக்கோட்டை மாவட்டம்)

புதுக்கோட்டை மாவட்டத்தில் சித்தன்னவாசலுக்கு அடுத்த படியாக குடுமியான்மலை பழமையான சமண சமயம் சார்ந்த இடமாகும். தற்பொழுது

இவ்விடத்தின் காலத்தை மேலும் முன்னுக்கு எடுத்துச் செல்லும் வகையில் தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. மத்திய தொல்பொருள் பரப்பாய்வுத் துறையினரின் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கும் குடுமிநாதர் கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தினை சீரமைக்கும் பணி நடைபெற்று வருகிறது. அப்பகுதியிலிருந்து எடுக்கப்படும் மண்ணினை சமணப் படுக்கைகள் உள்ள பகுதிக்கருகே சாலையில் கொட்டப்பட்டுள்ளது. இதில் பெருங்கற்கால கருப்பு சிவப்பு பானையோடுகள் அதிகளவில் காணப்படுவது சமணப்படுக்கைகள் அமைக்கப்பட்ட காலத்திற்கு முன்பிருந்தே இம்மலையினை அடுத்து பெருங்கற்காலப் பண்பாட்டின் ஊரிருக்கைப் பகுதியொன்று இருந்துள்ளது உறுதியாகின்றது. இங்கு சேகரிக்கப்பட்ட கருப்பு சிவப்பு பானையோடொன்றில் வெளிப்பகுதியில் இரு அம்புமுனைகள் அருகருகே குறியீடாக காணப்படுவது குறிப்பிடத்தக்க-தாகும். ஆயினும் இதனுடன் தொடர்புடைய இடுகாட்டுப் பகுதி ஏதும் குடுமியான்மலையில் அறியப்படவில்லை. குடுமியான்மலைக்கு சற்று தள்ளி நெருஞ்சிகுடியில் பரவலாக ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன. தற்பொழுது அறியப்பட்டுள்ள ஊரிருக்கைப் பகுதி அதனோடு தொடர்புடையதா என்பது ஆராயத்தக்கதாகும்.

**கீழக்கொளத்தூர் (அரியலூர் வட்டம், பெரம்பலூர் மாவட்டம்)**

தஞ்சை-அரியலூர் நெடுஞ்சாலையில் திருமானூரிலிருந்து ஐந்து -கிலோமீட்டர் தொலைவில் வடபுறத்தில் கீழ்க்கொளத்தூர் அமைந்துள்ளது. இவ்வூரின் வடபுறத்தில் கல்லேரிமேடு, மண்தள்ளிமேடு ஆகிய பகுதிகளில் சுமார் பத்து ஏக்கர் பரப்பளவில் இடைக்கற்கால பண்பாட்டைச் சார்ந்த கற்கருவிகள் கிடைக்கப்பெறுகின்றன. கருவிகள் தயாரிக்க பயன்படும் மூலக்கற்கள் இப்பகுதி முழுவதும் பரவிக் கிடப்பது இங்கு கருவிகளை உற்பத்தி செய்த தொழிற்கூடமொன்று இருந்துள்ளதை சுட்டுகின்றன. கருவி வகைகளுள் கற்கோடரிகள், பிளப்பான்கள் போன்ற கற்கருவிகளைத் தவிர்த்து இடைக்கற்கால பண்பாட்டிற்கே உரித்தான பல வகைச் சுரண்டிகள், முனைகள், துளைப்பான்கள் சாப்பர் போன்றவை இடம்பெறுகின்றன. மேக்ரோடான் ஜாப்பெட்டிக்கம், ஹமியாஸ்டர் சிமிஸிஸ் போன்ற நீர்சார் உயிரினங்களின் புதைப்படிமங்கள் கிடைக்கப்பெறுவது ஒரு கால கட்டத்தில் இவ்விடம் நீர்நிலைகள் சூழ்ந்த பகுதியாக இருந்துள்ளமையைத் தெளிவாகின்றது.

**காட்டூர் (அரியலூர் வட்டம், பெரம்பலூர் மாவட்டம்)**

கீழக்கொளத்தூரிலிருந்து நேர் கிழக்காக இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள காட்டூர் மற்றுமொரு கற்கால கருவிகளுள்ள அமைவிடமாகும். இவ்வூரின் வடபுறத்தில் கல்லேரிமேடு என்ற பகுதியில்

பாயும் பல சிற்றோடைகளின் கரைப் பகுதிகளில் கற்கருவிகள் பெருமளவில் கிடைக்கப் பெறுகின்றன. கீழக்கொளத்தூரில் காணப்படும் ஏனைய கருவிகள் அனைத்தும் காட்டூரில் உள்ளன. தமிழகத்தில் மிக அரிதான வகையில் காணப்படும் கலப்பின பாறைக் குடும்பத்தைச் சேர்ந்த செர்ட் கல்லில் கருவிகள் தயாரிக்கப்பட்டுள்ளது சிறப்பானதாகும். இவ்விரு இடங்களைத் தவிர்த்து அரியலூர் வட்டத்தில் நின்னியூர், ஒட்டக்கோயில், துளார் போன்ற இடங்களில் கற்காலக் கருவிகள் கிடைக்கப் பெற்றுள்ளமை தென்தமிழகத்தில் தொல்பழங்காலப் பண்பாட்டு மீதான நிலைப்பாட்டினை விரிவான முறையில் ஆராயும் நிலை உருவாகியுள்ளது. செந்துறை, ஒட்டக்கோயில், ராயம்புரம், ஏலாக்குறிச்சி போன்ற இடங்களில் புதிய கற்காலக் கருவிகள் கிடைக்கப்பெறுவது இப்பகுதியின் பண்பாட்டுத் தொடர்ச்சியினை அறியலாம். இக்கருவிகளுள் சில நேரங்களில் ஈமத்தாழியுனுள் காணப்படுவது இவை புதிய கற்காலப் பண்பாட்டினோடு தொடர்புடையனவா அல்லது அப்பண்பாட்டு எச்சங்களா என்ற கேள்வியை எழுப்பும்.



# 38. கார்கூர் பாறை ஓவியங்கள்

கி. குமார், சென்னை

பண்டைக்கால மனிதனால் வரையப்பட்ட ஓவியங்கள் பண்டைய பண்பாட்டு வரலாற்றைக் கூறும் காலக் கண்ணாடியாகவும், கலை மற்றும் கற்பனைத் திறனைக் காட்டும் சான்றுகளாகவும் உள்ளன. தமிழகத்தில் விழுப்புரம், கோயம்புத்தூர், தருமபுரி, மதுரை, நீலகிரி, வேலூர் போன்ற மாவட்டங்களில் பல இடங்களில் வரலாற்றுக் காலத்திற்கு முந்தையகால ஓவியங்கள் பல ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. குடியாத்தம் வட்டம் கார்கூர் என்னும் ஊரில் கண்டுபிடிக்கப்பட்ட பாறை ஓவியங்கள் குறித்த விவரங்கள் இக்கட்டுரையில் அளிக்கப்பட்டுள்ளன. குடியாத்தம் வட்டத்தில் மேல்பட்டியிலிருந்து பேரணாம்பட்டு செல்லும் சாலையில் குடியாத்தத்திற்கு தென்மேற்கே சுமார் 15 கிலோ மீட்டர் தொலைவில் கார்கூர் என்னும் கிராமம் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே அமைந்துள்ள ஊர்கும்மி என்றழைக்கப்படும் மலையின் கிழக்கு அடிவாரத்தில் பல குகைகள் இயற்கையாக அமைந்துள்ளன. அவற்றுள், இருளர்குண்டு என்றழைக்கப்படும் ஒரு பெரியகுகை கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. இக்குகை கார்கூர் கிராமத்திலிருந்து தென்மேற்கே சுமார் 200 மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இது சுமார் 5 மீட்டர் நீளமும் 4 மீட்டர் அகலமும் கொண்டுள்ளது. இக்குகையானது பெருங்கற்படைக்காலம் என்றழைக்கப்படும் இரும்புக் காலத்தில் இரும்பை உருக்கக்கூடிய உலைக்களமாக பயன்படுத்தப் பட்டிருக்கிறது. இரும்பு உருக்கு உலையில் பயன்படுத்தப்பட்ட சுடுமண் குழாய்களும் இரும்பு கழிவுகளும் குகைக்கு அருகே மலைபோல் குவிந்து காணப்படுகின்றன. மேலும், குகையின் உட்பகுதியில் புகை மற்றும் கரி ஆகியவைகள் படிந்து காணப்படுகின்றன.

**பாறை ஓவியங்கள்**

இருளர்குண்டு குகையின் உட்பகுதியில், கூரையில் செங்காவி மற்றும் வெண்மை நிறங்களினாலான ஓவியங்கள் மிகவும் அழகாகத் தீட்டப்பட்டு உள்ளன. சில ஓவியங்கள் கோட்டுருவங்களாகவும், சில ஓவியங்கள் வண்ணப்பூச்சு முறையிலும் வரையப்பட்டுள்ளன. குகையின் கூரைப் பகுதியில் புகை படிந்துள்ளதால் செங்காவி நிறத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் அனைத்தும் மிகவும் மங்கலாக காட்சியளிக்கின்றன. இருப்பினும், வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ள பல ஓவியங்கள் மிகவும் அழகாக தெளிவாகக் காணப்படுகின்றன.

கூரையின் வடக்குப் பகுதியில், இரண்டு கைகளையும் மேலே உயர்த்தியவாறு, சுழன்று நடனமாடும் ஒரு சிறுமியின் ஓவியம் மிகவும் அழகாக வரையப்பட்டுள்ளது. சிறுமி அணிந்துள்ள பாவாடையும் சுழல்வது போல் தீட்டப்பட்டுள்ளது. மேலும், சிறுமியின் கைகளுக்கு கீழே இரண்டு பக்கங்களிலும் மூன்று மூன்று புள்ளிகளும், கால்களுக்கிடையில் மூன்று புள்ளிகளும் தலையைச் சுற்றிலும் மூன்று புள்ளிகளும் வைக்கப்பட்டுள்ளன.

சிறுமியின் ஓவியத்திற்கு அருகில் ஒரு ஆண்மகன் தனது இரண்டு கால்களையும் அகலமாக விரித்துக் கொண்டு இரண்டு கைகளையும் பக்கவாட்டில் வீசியவாறு நடனமாடுவதைப் போல தீட்டப்பட்டுள்ளது. இவன் இடுப்பில் சிறிய துணியைக் கட்டிக் கொண்டிருப்பது போலவும், தலையில் தட்டையான தொப்பியை அணிந்திருப்பது போலவும் காணப்படுகிறது. இரண்டு பக்கங்களிலும் நான்கு புள்ளிகள் வைக்கப்பட்டுள்ளன.

கூரையின் மையப் பகுதியில் ஒரு பெரிய மனிதன் தனது இரண்டு கைகளிலும் ஒரு பெரிய பாத்திரத்தை தூக்கிக்கொண்டு செல்வதைப்போல தீட்டப்பட்டுள்ளது. மேற்காணும் உருவத்திற்கு அருகே ஒரு மனிதன் ஆடை ஏதுமணியாமல் நிர்வாணமாக நின்று கொண்டிருப்பது போலவும் தீட்டப்பட்டுள்ளது. மேலும், இரண்டு மனிதர்கள் தங்களது கைகளைத் தொங்கவிட்டவாறு நடந்து செல்வதைப் போல தீட்டப்பட்டுள்ளது. கூரையின் வடக்கு மூலைப் பகுதியிலும் ஒரு மனிதன் நடந்து செல்வதைப் போல வரையப்பட்டுள்ளது. மேற்காணும் ஓவியங்கள் அனைத்தும் கோட்டுருவங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

கூரையின் மேற்குப் புறத்தில் ஒரு விலங்கு நடந்து செல்வதைப் போல தீட்டப்பட்டுள்ளது. அதன் நீண்ட காதுகள் இரண்டும் மேலே தூக்கியவாறும், குட்டையான வாலையும் தூக்கிக் கொண்டிருப்பது போலவும் தீட்டப்பட்டுள்ளது. இவ்விலங்கின் உடல் பருத்து தலை கூராக காட்டப்பட்டுள்ளதால் இது காட்டுப் பன்றியாக இருக்கலாம் என கருதலாம். மேலும் இரண்டு பறவைகள் உணவைத் தேடிக் கொண்டிருப்பது போலவும் தீட்டப்பட்டுள்ளன.

இரண்டு பக்கங்களிலும் திரிசூலங்களைக் கொண்ட வளைவான ஆயுதம், ஒரு பக்கம் மட்டும் திரிசூலம் உள்ள நீண்ட ஆயுதம், இரண்டு பக்கங்களிலும் இரண்டு அலகுகளை மட்டும் கொண்ட நீளமான ஆயுதம், கொக்கியைப் போன்ற ஆயுதம் ஆகியவைகள் இக்குகையில் ஆங்காங்கே தீட்டப்பட்டுள்ளன. மேலும், கம்பத்தில் கொடி பறப்பது போன்ற ஓவியமும் தீட்டப்பட்டுள்ளது. வேறு பல குறியீடுகளும், ஓவியங்களும் தெளிவாக இல்லாமல் அடையாளம் காண முடியாதவைகளாக உள்ளன.

மேலே குறிப்பிட்ட இரும்பு உலைக்கள எச்சங்களோடு அக்கால மக்களால் பயன்படுத்தப்பட்ட கருப்பு-சிவப்பு மற்றும் கருப்பு நிற மட்பாண்ட பானை ஓடுகள் இக்குகைக்கு அருகில் காணப்படுகின்றன. குகைக்கு எதிரே சுமார் 20 ஏக்கர் நிலப்பகுதியில் பெருங்கற்படைக்கால வாழ்விடம் காணப்படுகிறது. மேலும், கார்கூரை சுற்றிலுமுள்ள மலைப்பகுதிகளில் நூற்றுக்கணக்கான பெருங்கற்படைச் சின்னங்கள் (Dolmens) காணப் படுகின்றன. ஆகவே, இக்குகையில் தீட்டப்பட்ட ஓவியங்கள் அனைத்தும் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னர் நிலவிய பெருங்கற்படைக்காலம் எனப்படும் இரும்புக் காலத்தைச் சேர்ந்ததாகக் கருதலாம்.



நடனமாடும் சிறுமி மற்றும் ஆண்மகன்ஓவியங்கள் இருளர் குண்டு, கார்கூர்



கையில் பாத்திரம் ஏந்திய மனிதன் மற்றும் நிர்வாண தோற்றத்திலுள்ள மனிதன் ஓவியங்கள் இருளர்குண்டு, கார்கூர்



காட்டுப்பன்றி

# 39. நெட்டேறிமலை தொல்லியல் சின்னங்கள்

கி. குமார், சென்னை

வேலூர் மாவட்டத்தில் குடியாத்தம் இரயில் நிலையத்திற்குக் கிழக்கே சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவில், இரயில்பாதைக்கு வடக்கே, நெட்டேறிமலை என்றழைக்கப்படும் சிறிய மலை அமைந்துள்ளது. இது காட்பாடி வட்டம், வேப்பூர் ஊராட்சியைச் சேர்ந்ததாகும். இம்மலையில் பல தொல்லியல் சின்னங்கள் இருப்பது இக்கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

நெட்டேறி மலையில் பல குகைகளும், நீர்ச்சுனைகளும் இயற்கையாகவே அமைந்துள்ளன. இங்கு புதிய கற்காலத்தைச் சேர்ந்த கற்கோடரி செல்ட் (celt) எனப்படும் சிறு கற்கருவி போன்ற பல கருவிகள் முழுமையானதாகவும், உடைந்த நிலையிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேலும், புதியகற்காலத்தைச் சேர்ந்த சாம்பல் நிற பானை ஒடுகளும், கையினால் செய்யப்பட்ட சிவப்பு நிற பானை ஓடுகளும் ஏராளமாக காணப்படுகின்றன.

### பெருங்கற்படைக்காலப்பண்பாடு

புதிய கற்காலத்தைத் தொடர்ந்து, பெருங்கற்படைக்காலம் எனப்படும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்ததற்கான சின்னங்களும் இம்மலையில் ஏராளமாகக் காணப்படுகின்றன. கருப்பு-சிவப்பு, கருப்பு மற்றும் வண்ணம் தீட்டப்பட்ட சிவப்பு நிற பானை ஒடுகளும், இரும்புக் கழிவுகளும் இம்மலையிலும், இம்மலையைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் அதிக அளவில் சிதறிக் கிடக்கின்றன. இம்மலைக்குத் தெற்கே சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள வேப்பூரில் பெருங்கற்படைக்காலத்தைச் சேர்ந்த கற்பதுக்கைகள் மண்ணில் புதைந்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

### பாறை ஓவியங்கள்

நெட்டேறிமலையின் வடகிழக்கு பகுதியில் அமைந்துள்ள சிறிய குகையில் செங்காவி மற்றும் வெண்மை நிறங்களில் தீட்டப்பட்ட ஓவியங்கள் காணப்படுகின்றன. செங்காவி நிறத்தில் கோட்டுருவமாக தீட்டப்பட்டுள்ள மனிதன் தனது கால்களை அகலமாக விரித்துவைத்துக் கொண்டு, வலது கையில் நீளமான கயிற்றினைப் பிடித்துக் கொண்டிருப்பது போலவும், இடது கையில் சிறிய ஆயுதத்தை மேலே உயர்த்திப் பிடித்துக் கொண்டிருப்பது போலவும் சித்தரிக்கப்பட்டுள்ளது. வெண்மை நிறத்திலுள்ள மனிதனின் உருவம் தலையில் குடுமி வைத்துக் கொண்டு நின்ற கோலத்தில் தனது இரு கைகளையும் மேலே உயர்த்தியவாறு காணப்படுகிறது. இவ்விரு ஓவியங்களும் பெருங்கற்படைக்காலத்தைச் சார்ந்ததாகும்.

மேலும், பஞ்சபாண்டவர் பாறை என்றழைக்கப்படும் (சமணர் பாறை படுக்கைகள் உள்ள) குகையின் கூரைப் பகுதியிலும் சில குறியீடுகள் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன. இவை அனைத்தும் மிகவும் மங்கலாகக் காட்சியளிக்கின்றன. இரண்டு பக்கங்களிலும் திரிசூல அமைப்பு கொண்ட குறியீடும், பெருக்கல் குறி போன்ற குறியீடும் வரையப்பட்டுள்ளன. மேலும், இரண்டு முக்கோணங்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்து உடுக்கையைப் போன்ற குறியீடும் மிக அழகாக வரையப்பட்டுள்ளன. மேலும், மற்றும் சில குறியீடுகளும் இக்குகையில் வரையப்பட்டுள்ளன.

**சமணர் குகைப்பள்ளி**

நெட்டேறி மலையின் தென்மேற்கு பகுதியில் சுமார் 150 அடி உயரத்தில் இயற்கையாக அமைந்த பெரிய குகை ஒன்று தெற்கு நோக்கியவாறு உள்ளது. இக்குகையின் உட்பகுதியில், கிழக்கு பாகம் உயர்ந்தும், மேற்குபாகம் தாழ்ந்தும் காணப்படுகிறது. இது சுமார் 15 மீட்டர் நீளமும் 10 மீட்டர் அகலமும் கொண்டுள்ளது. இக்குகைக்குச் செல்வதற்கு சரியான பாதை வசதி இல்லை. உள்ளூர் மக்கள் இக்குகையினை "பஞ்சபாண்டவர் பாறை" என அழைக்கின்றனர். இக்குகையில் மொத்தம் எட்டு பாறைப் படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. குகையின் உட்பகுதியில் ஐந்து படுக்கைகள் வரிசையாகக் காணப்படுகின்றன. இவற்றில் நான்கு படுக்கைகளுக்கு மட்டும் தலையணைப் பகுதி வெட்டப்பட்டுள்ளது. அவற்றுள் மூன்று படுக்கைகளுக்கு இரண்டு பக்கங்களிலும் தலையணைப் பகுதி உள்ளது. இப்படுக்கைகளுக்குத் தென்பகுதியில் குகையின் நுழைவாயிலில் மூன்று படுக்கைகள் வடகிழக்கு-தென்மேற்காக அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு படுக்கை மிக ஆழமாக (9 செ.மீ.) வெட்டப்பட்டுள்ளது. இப்படுக்கைகள் அனைத்தும் மிகவும் வழவழப்பாக உள்ளன. இக்குகையிலுள்ள பெரிய படுக்கை 188 செ.மீ. நீளமும் 67 செ.மீ கொண்டுள்ளது. சிறிய படுக்கை 140 செ.மீ. அகலமும் கொண்டுள்ளது.

குகையின் முன்பகுதியில் திண்ணை போன்ற மேடை அமைக்கப்பட்டு உள்ளது. இதன் மீது சுமார் ஐந்துபேர் அமர்ந்து கொள்ளலாம். குகையின் உட்பகுதியில், படுக்கைகளுக்கு அருகே மழைநீர் வழிந்து செல்வதற்கு, கிழக்கு-மேற்காக ஒரு சிறிய கால்வாய் வெட்டப்பட்டுள்ளது. மேலும், குகைக்கு வெளியே, கிழக்குப் புறத்தில் மேடாக உள்ள பாறையின் மீதும் குகையினுள் மழைநீர் வராமலிருப்பதற்காக ஒரு சிறிய கால்வாய் வடக்கு-தெற்காக நீளமாக வெட்டப்பட்டுள்ளது.

குகையினுள்ளும், படுக்கைகளுக்கு அருகிலேயும், ஆங்காங்கே சிறிய துண்டுக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஆனால், அக்குகைக்கு வந்து செல்வோர் அக்கல்வெட்டுக்களின்மீது தமது பெயர்களைச் செதுக்கிவைத்து பழைய கல்வெட்டுக்களைச் சேதப்படுத்தி அவைகளைப்படிக்க இயலாமல் செய்துள்ளனர். பழங்காலத்தில் தமிழகத்தின் நுழைவுப் பகுதியாகக் கருதப்பட்ட பாலாற்றுப் படுகையில், இக்குகைப்பள்ளி அமைந்துள்ளதால் சமண சமயம் பரவிய தொடக்கக் கட்டத்திலேயே அதாவது கி.மு.3 அல்லது 2-ஆம் நூற்றாண்டிலேயே இது அமைக்கப்பட்டிருக்கலாம் எனக் கருதலாம்.

குகைப்பள்ளி அமைந்துள்ள நெட்டேறி மலையின் உச்சியில் முருகன்குண்டு என்றழைக்கப்படும் பெரியபாறை உள்ளது. இப்பாறையின் மீது இரண்டு கால் பாதங்கள் சிறிய அளவில் செதுக்கப்பட்டுள்ளன. மேலும், பாதம் அமைந்துள்ள குண்டிற்கு அருகே சூரிய ஒளி படாத ஒரு சிறிய நீர்ச்சுனை உள்ளது.

## குகைப்பள்ளிக்கு ஆபத்து

சமணர் குகைப்பள்ளி அமைந்துள்ள நெட்டேறி மலையில் கடந்த பத்து ஆண்டுகளாக தொடர்ந்து பாறைகள் உடைக்கப்பட்டு வருகின்றன. தற்போது பஞ்சபாண்டவர் பாறையும் அதற்கருகிலுள்ள சில பாறைகளும் மட்டுமே எஞ்சியுள்ளன. மேலும், மலையின் மேற்குப் பகுதியில் கல்குவாரி மிக ஆழமாக வெட்டப்பட்டு வருகிறது. எனவே, இம்மலையில் பாறை உடைக்கும் பணி தொடர்ந்தால் இன்னும் சில காலத்தில் நெட்டேறி மலை முற்றிலுமாக அழியக்கூடிய ஆபத்து ஏற்படும்.





சுடுமண் ஈமப்பேழை, வேப்பூர் (அரசு அருங்காட்சியகம், வேலூர்)



வண்ணம் தீட்டப்பட்ட மட்பாண்ட ஓடுகள் நெட்டேறிமலை, வேப்பூர்



சமணர் பாறை படுக்கைகள், நெட்டேறிமலை

# 40. பாணன் பறம்பு பாறை ஓவியம்

மு.வள்ளியம்மாள், மதுரை

பாணன் பறம்பு, திருநெல்வேலி - செங்கோட்டைச் சாலையில் மதுரையிலிருந்து 110 கி.மீ. தெற்கேயுள்ள புளியங்குடி என்னும் ஊருக்கு அருகில் (சுமார் 7 கி.மீ. மேற்கில்) மேற்குமலை தொடர்ச்சியின் அடிவாரத்தில் அமைந்துள்ளது. பாணன் பறம்பில் எண்ணிறந்த சிறுசிறு குன்றுகள் காணப்படுகின்றன. அக்குன்றுகளில் ஒன்றில் உள்ள சிறிய குகையில் பாறையின் விதானத்தில் ஓவியம் காணப்படுகிறது. இக்குகை வாழைமலையாறு என்னும் சிறிய நீரோடையின் அருகில் அமைந்துள்ளது. இவ்வோவியம் கருப்பு வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளது. தமிழகத்தில் கருப்பு வண்ண ஓவியங்கள் ஒரு சில இடங்களில் மட்டுமே காணப்படுகின்றன.

பாணன்பறம்பு பாறை ஓவியம் அடர்த்தியான வண்ணப்பூச்சு முறையினைக் கொண்ட ஓவியமாகும். இது ஒரு வட்ட வடிவமான ஓவியம். இவ்ஓவியத்தின் மையப்பகுதியில் ஒரு காளையின் உருவம் நேர்த்தியாக வடிக்கப்பட்டுள்ளது. காளையைச் சுற்றிலும் இரண்டு அடுக்கு வட்டங்களில் சிறுசிறு வளையங்கள் காணப்படுகின்றன. வளையங்களின் நடுவில் அவற்றிலுள்ள இடைவெளியின் அளவைப் பொறுத்து இரண்டு முதல் நான்கு புள்ளிகள் வரை உள்ளன. வட்டத்தின் வெளிப்பகுதியில் அதைச் சுற்றி மனிதர்கள் கையில் சிறிதும் பெரிதுமான ஆயுதங்களுடன், குழுவாக நின்று நடனமாடுகின்றனர். மனித உருவங்கள் கையை உயர்த்திய நிலையில், கால்களைத் தூக்கி நடனமாடும் நிலையில் காட்டப்பட்டுள்ளன. எட்டு மனித உருவங்கள் உள்ளன. ஒவ்வொருவர் கையிலும் ஒவ்வொரு விதமான ஆயுதம் காணப்படுகிறது.

கற்கால மக்களின் சடங்குகள் நம்பிக்கையின் அடிப்படையில் மந்திரத் தொடர்பு உடையனவாகவும், வேட்டைத் தொழில் அடிப்படையில் விலங்கினங்களை வேட்டையாடக் கூடிய ஆற்றலைப் பெறவேண்டி செய்த சடங்காகவே அமைகின்றன. பாணன் பறம்பு பாறை ஓவியமும் ஒரு விலங்கை வேட்டையாடும் ஆற்றலைப் பெற வேண்டி மந்திரச் சடங்கு நடத்தும் காட்சியைச் சித்தரிப்பதாக இருக்கலாம்.

இவ்வோவியத்திற்கு வெகு அருகில் யானை மீது ஒரு மனிதன் நின்றுள்ளவாறு வரையப்பட்டுள்ளது. குகை ஓவியங்களில் யானை இடம் பெறுவது மிகுதியாகக் காணப்படுவதில்லை. இருப்பினும் மலை சார்ந்த பகுதிகளில் யானை அதிக அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பாணன்பறம்பு மேற்குத் தொடர்ச்சி மலையை ஒட்டி இருப்பதாலும் இன்றும் அங்கு யானைகள் அதிகம் வாழ்வதாலும், யானையின் வடிவம் ஓவியத்தில் இடம் பெறுவது இயல்பே. யானை துதிக்கையுடன் வரையப்பட்டுள்ளது. ஆனால் தந்தம் இல்லை. யானை நடந்து செல்வது போல் உள்ளது. காட்டில் நடந்து செல்வதைக் குறிக்கும் வகையில் அதன் கால்களின் அடியில் கோடு போன்று வரையப்பட்டுள்ளது.

இந்த ஓவியங்களின் முன்பகுதியில் பத்து சிறிய வளையங்கள் ஓர் அம்பால் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளன. பக்கவாட்டிலும் ஓர் ஓவியம் காணப்படுகிறது. ஆனால் அது தெளிவாக இல்லை.

பாணம்பறம்பு குகை ஓவியம் பெருங்கற்படைக்கால ஓவியமாக இருக்கலாம். இக்குகையின் அருகிலுள்ள ஒரு திட்டையில் முதுமக்கள் தாழிகள் உள்ளன.





# 41. கேரளாவில் தமிழ் கல்வெட்டுகள்*

**தியாக சத்தியமூர்த்தி**, சென்னை.

'வட வேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்பது தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரம். தமிழகத்தை அடுத்து மிகுதியாகத் தமிழ் கல்வெட்டுக்கள் கிடைக்கின்ற மாநிலம் கேரள மாநிலமாகும். சங்ககாலம் தொடங்கி கி.பி. 16ஆம் நூற்றாண்டு முடிய தமிழ்க் கல்வெட்டுகள் இம்மாநிலத்தின் அனைத்துப் பகுதிகளிலும் வெகுவாகக் கிடைக்கின்றன. இம்மாநிலத்தில் கி.பி 9-10ஆம் நூற்றாண்டுகளில் மலையாளம் என்ற தனி மொழிநடை வளரத் தலைப்பட்டாலும் இம்மொழி வளர வளம் சேர்த்தவை தமிழ் மொழியும் அதனை எழுதப் பயன்படுத்தப்பட்ட வட்டெழுத்தும் ஆகும், என்று கூறினால் அது மிகையல்ல.

**கல்வெட்டு ஆய்வு**

கேரளாவில் கல்வெட்டு குறித்த ஆய்வுகள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் தான் தொடங்கப்பட்டது. இருப்பினும் இம் மாநிலத்தில் கிடைத்த சில கல்வெட்டுக்கள் குறித்து ஆய்வுக் கட்டுரை ஒன்று 19-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் 'ஜர்னல் ஆப் ரிபப்ளிக்' என்ற ஆய்வு நூலில் பதிப்பிக்கப்பட்டது. இம்மாநிலத்தில் கல்வெட்டு ஆய்வு தொடங்கப்பட்ட காலத்தில் அரசியல் ரீதியாக இம் மாநிலம் மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மாநிலத்தின் தென் பகுதியை திருவாங்கூர் அரச மரபினர் ஆட்சிபுரிந்தனர். மையப் பகுதியை கொச்சியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்த அரச மரபினரும் எஞ்சிய மலபார் பகுதியை சென்னை மாகாணத்திற்கு உட்பட்ட பிரிட்டிசாரும் ஆட்சி புரிந்தனர்.

மேற்குறித்த ஆட்சியினருள் திருவிதாங்கூர் அரச மரபினரே கல்வெட்டு ஆய்விற்குப் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்தனர். குறிப்பாக இம் மரபைச் சார்ந்த மன்னர் ஸ்ரீ விசாகம் திருநாள், கல்வெட்டு ஆய்வுகளில் பெரிதும் நாட்டம் செலுத்தினார். இம் மன்னரே திருக்குறுங்குடி கோயில் மணியில் காணப்படும் இருமொழி எழுத்துப் பொறிப்பை ஆய்வு செய்து அதனை 1886 ஆம் ஆண்டு வங்காளத்தில் இருந்து வெளிவந்த ஆசியக்கழக ஆய்விதழில் வெளியிட்டார். திருவிதாங்கூர் அரசு கல்வெட்டு ஆய்விற்காக ஒரு மானியத்தை ஏற்படுத்தியது. இதன் மூலம் தமிழறிஞர் மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை அவர்கள் கேரளத்தின் தென்பகுதியின் கல்வெட்டுகளை ஆய்வு செய்வதற்காக நியமிக்கப்பட்டார். அது முதற்கொண்டு தொடர்ச்சியாகப் பல புதிய கல்வெட்டுகள் இப்பகுதியில் கள ஆய்வுகளின் மூலம் கண்டுபிடிக்கப்பட்டன.

---

திரு.ஐராவதம் மகாதேவன் நிறுவியுள்ள தி.நா.சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவு. 24.7.2004 அன்று சிதம்பரத்தில் ஆவணம் இதழ் 15 வெளியிட்டு விழாவில் நிகழ்த்தப்பட்டது.

திருவிதாங்கூர் சமஸ்தானம் வெளியிட்ட முதல் கல்வெட்டுத் தொகுதி "திருவாங்கூர் ஆர்கியலாஜிகல் சீரிஸ்" என்ற தலைப்பில் தனது முதல் தொகுதியை 1910ஆம் ஆண்டு வெளியிட்டது. இதனை டி.ஏ. கோபிநாதராவ் பதிப்பித்து வெளியிட்டார். பல்கலை அறிஞரான டி.ஏ. கோபிநாதராவ் தமிழ் மொழியுடன் மலையாளம், வடமொழி, ஆங்கிலம், மராத்தி ஆகிய மொழிகளிலும் மிக்க தேர்ச்சி பெற்றவராக விளங்கினார். இவரது ஆழ்ந்த புலமை இவர் பதிப்பித்த ஒவ்வொரு கல்வெட்டிலும் மிளிர்ந்தது. இவரால் 'திருவாங்கூர் ஆர்கியலாஜிகல் சீரிஸ் 3 தொகுதிகள் வெளியிடப்பட்டன. இவரைத் தொடர்ந்து இத்தொகுதிகளைத் தொடர்ச்சியாக வெளியிடும் பணியை கே.வி.சுப்ரமண்ய அய்யர், எ.எஸ். இராமநாத அய்யர், ஆர்.வாசுதேவ பொதுவாள் மற்றும் பல அறிஞர்கள் மேற்கொண்டனர். இதன் மூலம் 1910 முதல் 1940 ஆண்டுகளுக்குள் 'திருவாங்கூர் ஆர்கியலாஜிகல் சீரிஸ்' 8 தொகுதிகள் வெளிவந்தன. 9-ஆவது தொகுதி ஏறக்குறைய 40 ஆண்டுகள் கழித்து 1980ஆம் ஆண்டு முனைவர் மகேஸ்வர நாயரால் வெளியிடப்பட்டது. இதன் பின்னர் படியெடுக்கப்பட்ட 100க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் இன்னும் வெளியிடப்படவில்லை.

கேரளாவில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் பெரும்பாலும் தனிக் கற்களிலும் தூண்களிலும் பொறிக்கப்பட்டன. பல்வேறு ஊர்களில் சிதறிக் கிடந்த 50க்கும் மேற்பட்ட தமிழ் கல்வெட்டுகள் சேகரிக்கப்பட்டு கேரள தொல்லியல்துறை பராமரிப்பில் உள்ள பத்மநாபபுரம் அருங்காட்சியகத்தில் பொதுமக்களின் பார்வைக்காக கடந்த 15 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கட்டுரை ஆசிரியரால் வைக்கப்பட்டது.

கேரளாவில் கிடைத்த கல்வெட்டுகளைக் கொண்டு இம்மாநிலத்தின் தொன்மை அரசியல் வரலாற்றை எழுதுவதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. குறிப்பாக இப்பகுதியை ஆட்சிபுரிந்த மூன்று அரசுகளுள் திருவாங்கூர் அரசு போன்று மற்ற இரு அரசுகள் கல்வெட்டு ஆய்வில் முழுவதும் அக்கறை செலுத்தவில்லை. இதனால் கேரளாவின் முழுமையான அரசியல் வரலாற்றை அறிவதில் பின்னடைவு ஏற்பட்டது.

கொச்சி அரசு கல்வெட்டு ஆய்வை விட தொல்லியல் ஆய்வுகளில், குறிப்பாக அகழாய்வுகளில் பெரிதும் ஈடுபட்டது. இதேபோன்று சென்னை மாகாணத்திற்கு உட்பட்ட மலபார் பகுதிகளில் பிரிட்டிசார் நிலப்பொதியியல் ஆய்வுகளில் பெரிதும் ஈடுபட்டனர். குறிப்பாக வரலாற்றுக்கு முற்பட்ட தடயங்கள் பல மலபார் பகுதியில் இவர்களால் கண்டுபிடிக்கப்பட்டன. எடக்கல் மலைப்பகுதியில் கேரளாவின் தொன்மையான கல்வெட்டுகளை இராமவர்மன் ஆய்வு நிறுவனம் கண்டுபிடித்து பதிப்பிக்கும் பணியை மேற்கொண்டது. பிஷரோடி, கோவிந்த வாரியார், வி.கே. ஆர். மேனன் போன்றோர் பல ஆய்வுக்கட்டுரைகளைப் பதிப்பித்து வெளியிட்டனர். எடக்கல் மலைப்பகுதியைக் கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பு மீண்டும் கள ஆய்வு செய்த ஐராவதம் மஹாதேவன் புதியதாக சில கல்வெட்டுகளைக் கண்டுபிடித்தார். ஆங்கிலேயர்கள் கோட்டயத்தில் ரோமானிய நாணயங்களை மிகுந்த அளவில் கண்டுபிடித்து கேரள நாணயவியல் வரலாற்றுக்கு வித்திட்டனர்.

இப்பகுதியில் கிடைத்த முதலாவதும் மற்றும் மிகப் பழமையானதுமான செப்புப் பட்டயம் யூதர்களின் குடியிருப்பை பற்றிக் குறிப்பிடுகின்றது. இச்செப்புப்பட்டயம் கி.பி.8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இரவிவர்மன் என்ற மன்னனால் வெளியிடப்பட்டது. இம்மன்னன் யூதர்களுக்கு குடியிருப்புகளைக் கொடுங்களூர் பகுதியில் ஏற்படுத்தி அவர்களுக்கு பல சலுகைகள் வழங்குகின்றான். இதன்படி குடியேறிய யூதர்கள் விஷேச காலங்களில் நீண்ட அங்கி அணியவும் குழல், மேளம் வாசிக்கவும் மாலை அணிந்து கொள்ளவும் உரிமைகளைப் பெறுகின்றனர். பின்னர் போர்த்துகீசியர் தொல்லையால் கொச்சின் பகுதியில் உள்ள மட்டஞ்சேரி பகுதியில் தங்களது குடியிருப்பை யூதர்கள் அமைத்துக் கொண்டனர். இச்செப்பேடு வட்டெழுத்து வளர்ச்சியை அறிவதற்குப் பெரிதும் உதவி புரிகின்றது.

திருவாங்கூர் மன்னரான விசாகம் திருநாளால் தொடங்கப்பட்ட கல்வெட்டுப் பணி தொடர்ந்து கேரளாவின் தென் பகுதியில் செம்மையாக நடைபெற்று வந்தது. இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறையின் கல்வெட்டுப் பிரிவினர் கேரளாவில் ஏறக்குறைய 1300 கல்வெட்டுகளை திருவாங்கூர் பகுதியில் படியெடுத்து வெளியிட்டுள்ளனர். இவற்றுள் 636 கல்வெட்டுகள் தமிழ் எழுத்துப் பொறிப்புடையவை. 545 வட்டெழுத்துக் கல்வெட்டுகள். 163 மலையாளம்; 10 தேவநாகரி; 74 கிரந்த கல்வெட்டுகளாகும். மற்றவை இலத்தின் மொழிக் கல்வெட்டுகளாகும். திருவாங்கூர் பகுதியில் தமிழ் எழுத்தில் கல்வெட்டுகள் பொறிக்கும் வழக்கம் சமீபகாலம் வரை நிலவி வந்தது.

**கல்வெட்டில் அரசர்கள்**

திருவாங்கூர் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகளும் செப்புப் பட்டயங்களும் இப்பகுதியின் அரசியல், சமூக, பொருளாதார, சமய வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் உதவிபுரிகின்றன. மற்ற பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் பதிப்பிக்கப்பட்டால் கேரளாவின் முழுமையான வரலாற்றை எழுதுவோருக்கு ஏதுவாக அமையும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. மேலும் இக்கல்வெட்டுகளின் துணைகொண்டு கேரள அரச மரபுகளின் காலத்தை வரிசைப்படுத்த முடியும். கேரளத் தமிழ் கல்வெட்டுகளில் இராஜசேகரன் முதல் இரவிவர்மன் குலசேகரன் மற்றும் வீர இராஜேந்திரன் ஆகிய மன்னர்களின் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. ஜடாவர்மன் பராந்தக சோழனைக் குறிக்கும் கல்வெட்டுகளின் மூலம் அம் மன்னனின் ஆட்சியைப் பற்றி அறியமுடிகிறது.

இப்பகுதியில் ஆட்சிபுரிந்த அரச மரபினரின் மொத்த கல்வெட்டுகள் பின்வருமாறு :

திருவாங்கூர் அரசர்கள்-192; சேர அரசர்கள்-35; ஆய் மன்னர்கள்-9; பாண்டிய மன்னர்கள்-87; சோழ அரசர்கள்-102; சோழ பாண்டியர்-76; கொச்சி அரசர்-4; விஜயநகரப் பேரரசு-8; நாயக்கர்-6.

திருவிதாங்கூர் தொகுதிகளில் கீழ்க்கண்ட அரசர்களின் கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன.

**சோழர்கள்**

பரகேசரி பராந்தகசோழன்; முதலாம் இராஜராஜன்; முதலாம் இராஜேந்திர சோழன்; இராஜாதிராஜன்; இரண்டாம் இராஜேந்திரன்; வீர இராஜேந்திரன்; குலோத்துங்க சோழன்

**பாண்டியர்கள்**

மாறஞ்சடையன்; சடையன்மாறன்; வீரநாராயணன்(எ) வீரபாண்டியன்; சடையவர்மன் பராந்தக பாண்டியன்; ஸ்ரீவல்லபன்; மாறவர்மன் சுந்தரபாண்டியன்; அரிகேசரி பாண்டியன்; பொன்னின்பெருமாள் பராக்கிரம பாண்டியன்; அழகன்பெருமாள் ஸ்ரீவல்லபன்; குலசேகரதேவன்; ஸ்ரீவல்லமாறன் வரகுணமாறன்

**சோழ-பாண்டியர்கள்**

ஜடாவர்மன் சுந்தரசோழ பாண்டியன், மாறவர்மன் விக்கிரம சோழபாண்டியன்.

**சேரர்கள்**

இராஜசேகரன், குலசேகரவர்மன், திருபுரதுறை இராம, ஸ்தாணுரவி, விஜய ராகவதேவன், குலசேகரவர்மன், இந்துக்கோதைவர்மன் பாஸ்கர இரவி, இரவிவர்மன் குலசேகரன்.

**திருவிதாங்கூர் அரசர்கள்**

அய்யனடிகள் திருவடி, இராம திருவடி, வல்லபன்கோதை, கோவர்த்தன மார்த்தாண்டவர்மன், விக்கிரமன், வீரகேரளவர்மன் கோதைகேரளவர்மன், வீரரவிவர்மன், வீர உதயமார்த்தாண்டவர்மன், கோதை மார்த்தாண்டவர்மன், வீர ராமவர்மந் திருவடி, வீர கேரளவர்மன் திருவடி, வீரரவி உதயமார்த்தண்டவர்மன், வீரபத்மநாப மார்த்தாண்டவர்மன் திருவடி, உமாதேவி கணவர் ஜெயசிம்ம வீரகேரளன், வீர உதய மார்த்தண்டவர்மன், இரவி ரவிவர்மன்.

இவற்றுள் பெரும்பாலான கல்வெட்டுகள் (1300) இந்து மதத் தொடர்புடையவை. 175 கல்வெட்டுகள் கிறித்துவ மதத் தொடர்புடையவை. மூன்று கல்வெட்டுகள் இசுலாமிய சமயத்தைச் சார்ந்த தமிழ் கல்வெட்டுகளாகும். மேலும் திருவாங்கூர் தொகுதிகளில் பல செப்பேடுகள் வெளிவந்துள்ளன. அவை யாவும் வரலாற்று ஆய்விற்குப் பெரிதும் உதவி புரிபவை.

**காந்தளூர்ச் சாலையும் கேரளக் கல்வெட்டுகளும்**

குறிப்பாக இத்தொகுதியின் முதலில் வெளியிடப்பட்ட செப்புப் பட்டயமான ஹுசுர் செப்புப் பட்டயம் குறிப்பிடுகின்ற மன்னனான கோகருநந்தடக்கன் பற்றி அதற்கு முன்பு வரலாற்று ஆசிரியர்கள் அறிந்திலர். இம் மன்னன் திருமாலுக்குப் பார்த்திபசேகரபுரத்தில் கோயில் ஒன்றைக் கட்டினான். இவ்வரசனைக் குறித்து இலக்கியச் சான்றுகளும் இல்லை.

தென்னிந்திய வரலாற்றில் இச்செப்புப்பட்டயம் மிகச் சிறந்த இடத்தைப் பெற்று விளங்குகிறது. ஆய்குல (யாதவர்) மன்னர்களுள் ஒருவரான இம் மன்னனைப் பற்றியும் இம் மரபைப் பற்றியும் மேலும் அறிய கழுகுமலை கல்வெட்டும் பாளையம் செப்பேடுகளும் பெரிதும் வரலாற்று ஆசிரியர்களுக்கு உதவிபுரிகின்றன. இவ்வரசன் கோயிற் கட்டடக்கலைக்குப் பெரிதும் வித்திட்டவன் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் சமீபத்தில் பெரும்பழந்தூர் என்ற இடத்தில் சிவாலயத்தின் பலிபீடத்தில் கிடைத்த கல்வெட்டின் மூலம் அறிய முடிகிறது. மேலும் ஆய்குல அரசர்களின் தலைநகரமாக விழிஞம் விளங்கி வந்தமையையும் அதன்மூலம் அறியமுடிகிறது.

முதலாம் இராஜராஜ சோழனின் மெய்க்கீர்த்தி காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளிய என்று அவன் புகழ் பாடுகிறது. காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளிய என்பது காந்தளூரில் உள்ள கப்பற்படையை அழித்தான் என்பதே இதுவரையில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் காந்தளூர் சாலை என்பது வைதிக மதத்தைச் சார்ந்த மாணவர்களுக்கு (சட்டர்கள்) உணவளித்த இடமென்று ஆய் மன்னன் கருநந்தடக்கனின் கி.பி.864ஆம் ஆண்டைச் சேர்ந்த ஹுசூர் செப்புப் பட்டயம் கூறுகிறது.

மற்றொரு செப்புப் பட்டயம் இதே மரபில் வந்த விக்கிரமாதித்ய வரகுண அரசனைப் பற்றிக் குறிப்பிடுவதுடன் இம்மன்னன் முருகன் செந்தி அல்லது ஆய்குல மஹாதேவிக்குக் கொடுத்த கொடையைப் பற்றி குறிப்பிடுகிறது. இச்செப்பேட்டில் பார்த்திபசேகரபுரம் குறித்தும் கூறப்பட்டுள்ளது. இம்மன்னனின் இருமொழியில் பொறிக்கப்பட்ட பாளையம் செப்பேடுகள் திருமூலவாசம் கோவிலுக்கு நிலக்கொடை அளித்த செய்தியைக் கூறுகின்றது. இச்செப்புப்பட்டயம் வடமொழியை நாகரி எழுத்திலும் தமிழ்மொழியைத் தமிழிலும் கொண்டுள்ளது. கேரளாவில் கிடைத்த செப்பேடுகளில் வட்டெழுத்துச் செப்பேடான கொல்லூர்மடம் செப்பேடு (கி.பி.1189) மிக முக்கியமான செப்பேடு ஆகும். இச்செப்பேட்டின் மூலம் வேணாட்டை ஆண்ட ஸ்ரீ வல்லபன் கோதையின் தாயார் கட்டிய தேவி தீதிஸ்வரம் கோயிலைப் பற்றி அறிய முடிகிறது. மேலும் இம் மன்னனின் வழிவந்த வீரமார்த்தாண்டவர்மன் `இக்கோயிலுக்கு அளித்த பல்வேறு தானங்களைப் பற்றியும் இச்செப்பேடு குறிப்பிடுகின்றது.

திருவிதாங்கூர் மன்னர் கீழ்பேரூர் வீரரவிஉதய மார்த்தாண்ட வர்மன் சிறைவாய் மூத்தவர் பற்றிக் குறிப்பிடும் செப்புப்பட்டயம் ஒன்று கி.பி. 1251 (கொல்லம்-426) ஆம் ஆண்டைச் சார்ந்தது. இம்மன்னரின் பூர்வீகம் கண்ணனூர் என்பதும் இவர் வீரகேரளம் என்கின்ற முத்தாலக்குறிச்சிக் கோயிலில் கோயிமா, ஓரணம், ஸ்தானம் ஆகிய உரிமைகளைப் பெற்றார் என்பதையும் அறிய முடிகிறது. இதேபோன்று மாம்பள்ளி செப்பேடுகள் வேணாட்டு அரசர் வீரதேவதரன் கேரளவர்மன் திருவடியைக் குறிப்பிடுகின்றது. இச்செப்பேடு வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. வீரகேரளத்துப் பட்டாரகர் கோயில் நிவந்தங்களுக்கு இம் மன்னனின் அலுவலர்கள் அளித்த கொடையைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. பிறிதொரு மாம்பள்ளி செப்பேடு ஸ்ரீ வல்லபன் கோதையால் வெளியிடப்பட்டது.

இப்பட்டயத்தில் தான் முதன்முதலாக கொல்லம் ஆண்டு பயின்று வருகின்றது. (கொல்லம் 149-கி.பி.973)

மேற்குறித்த செப்புப் பட்டயங்களைத் தவிர கேரளாவில் செப்புப் பட்டயங்கள் பல கிடைத்துள்ளன. இவை வட்டெழுத்திலும் தமிழிலும் பொறிக்கப்பட்டுள்ளன.

பிற்கால சேர அரசர்களைக் குறித்த கல்வெட்டுக்களும் இம் மாநிலத்தில் கிடைத்துள்ளன. திருமூழிக்களம், திரிக்ககரம், திருக்கடித்தானம், திருக்கால்கரை, பெருநெய்யல் ஆகிய ஊர்களில் இவர்களின் கல்வெட்டுகள் மிகுந்த அளவில் கிடைத்துள்ளன. தமிழகத்தை ஆட்சிபுரிந்த சோழர், பாண்டியர், சோழ-பாண்டியர் மற்றும் விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுகள் இம் மாநிலத்தில் மிகுந்த அளவில் கிடைத்துள்ளன. சோழர்களின் கல்வெட்டுகள் மூலம் அம் மன்னர்கள் கேரளாவில் பல்வேறு கோயில்களுக்கு நிலங்களும் பிற நிவந்தங்களும் அளித்த செய்திகளை அறிய முடிகிறது. முதலாம் இராஜராஜனின் முட்டம் கல்வெட்டு அவ்வூர் மும்முடிசோழ நல்லூர் எனப் பெயர் மாற்றம் பெற்றதைக் குறிப்பிடுகின்றது. மேலும் இவ்வூரின் கோயிலில் ஐப்பசித் திருநாள் கொண்டாடுவதற்காகவும் பிற செலவினங்களுக்கும் தானம் அளித்த செய்தி கூறப்பட்டுள்ளது. சாலை என்ற ஊரில் கிடைத்த கல்வெட்டு முதலாம் இராஜேந்திர சோழனின் மெய்க்கீர்த்தியை முழுவதுமாக தெரிவிக்கின்றது. குலோத்துங்க சோழனின் வாரியூர் கல்வெட்டு அம் மன்னரின் நலனுக்காக கோயிலுக்கு உப்பளங்கள் தானமாக அளிக்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது. இதே போன்று திருவிதாங்கூர் மன்னர்களின் கல்வெட்டுகள் சுசீந்திரம், கன்னியாகுமரி ஆகிய பகுதிகளில் கிடைக்கின்றன. மேலும் வடசேரி, கோட்டார், திருப்படிச்சுரம், திருவட்டார், கேரளபுரம், மேனலைக்கார, திருநந்திக்கரை, திருப்பரப்பு போன்ற இடங்களிலும் கிடைத்துள்ளன.

திருவிதாங்கூர் அரசர்கள் இந்துகோதை வர்மன், பாஸ்கர இரவி வர்மன் மற்றும் பல்வேறு அரசர்களைப் பற்றி கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. விர இரவிவர்மன் என்ற அரசனின் 1196-ஆம் ஆண்டு (கொல்லம் 377) கல்வெட்டு ஒன்று வெள்ளயாணி திருக்காலேஸ்வரர் கோயிலில் கிடைத்துள்ளது. திருக்குணங்கரை கோயிலுக்கு இம் மன்னனும் அவனது அலுவலர்களும் பல தானங்களை அளித்தனர். இக்கல்வெட்டு புலியூர் கோவிலைப் பற்றியும் வணிகக் குழுக்கள் பதினெண்பூமி வளஞ்சியர் குறித்தும் மற்றும் அறுநூறு உறுப்பினர் குறித்தும் குறிப்பிடுகின்றது.

ஸ்ரீவிரஇரவி கேரளவர்மனின் கி.பி.1235-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று மணல்கரையில் கண்டுபிடிக்கப்பட்டது. வட்டெழுத்தில் எழுதப்பட்ட இக்கல்வெட்டின் மூலம் ஊர் மற்றும் சபை போன்ற ஊராட்சி குழுக்களைப் பற்றி அறியமுடிகிறது. ஊரை ஆள்கின்றவன் ஊராளன் எனப்பட்டான். இவர்கள் உள்ளூரில் நிலவரி வசூலித்து அரசுக்கு அளித்தனர். திருவிதாங்கோட்டில் கண்டுபிடிக்கப்பட்ட வீரகேரளவர்மனின் 1696-ஆம் ஆண்டுக் கல்வெட்டில் (கொல்லம் 825) அதுவரை பழக்கத்தில் இருந்த புலப்பேடி மற்றும் மன்னப்பேடி ஆகியவற்றுக்குத் தடைவிதித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

கேரளாவில் கிடைத்துள்ள சில தமிழ்க் கல்வெட்டுகளின் மூலம் கேரளாவை ஆட்சிபுரிந்த சில குறுநில மரபுகளைப் பற்றியும் அறிய முடிகிறது. எரநாட்டை ஆண்ட மானவிக்ரம என்னும் பூந்துறைச்கோன் இரண்டாம் சேர அரசு அழிவுறக் காரணமாக இருந்தான். அத்துடன் இது போன்ற சிற்றரசுகளின் உதவியுடன் கள்ளிக்கோட்டை சாமூதிரிகள் தங்களது ஆட்சியை நிறுவினர்.

**கல்வெட்டு காட்டும் சமூக பொருளாதார சமய நிலைமைகள்**

கேரளாவில் கிடைக்கின்ற தமிழ்க் கல்வெட்டுக்களின் மூலம் நாட்டுப்பிரிவுகளை அறியமுடிகிறது. அக்காலத்தில் இருந்த ஊர்களின் பெயர்களையும் சபை மற்றும் ஊர்களின் நடவடிக்கைகள் குறித்தும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. சில கல்வெட்டுகளில் குழுக்கள் பல, எண்களின் விகுதி பெற்று விளங்குகிறது. 500, 600, 3000, 5000 என இக்குழுக்கள் குறிப்பிடப்படுகின்றன. இவை அக்குழுக்களின் எண்ணிக்கையாக இருக்கலாம். கேரளாவில் நிலவி இருந்த சமூக பொருளாதார நிலை சமயநிலை ஆகியவை குறித்தும் இக்கல்வெட்டுகளின் மூலம் அறியமுடிகிறது. திருவிதாங்கூர் பகுதியில் முற்காலத்தில் கோயில்களே முக்கியப் பங்கை வகுத்தன. அந்தணர்கள் பல்வகையில் உயர்நிலையில் இருந்தனர். கலைகளின் வளர்ச்சிக்கும் கோயில்கள் வழிவகுத்தன. வைதீகப் பாடசாலைகள் பல இருந்தன; கூத்துக்கள் பல கோயில் மண்டபங்களில் நடந்தேறின. பல கல்வெட்டுக்களில் இச்செய்திகள் விரவிக் கிடக்கின்றன.

கிறித்துவம் இப்பகுதியில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டளவில் பரவத்தொடங்கியது. கிறித்துவ ஆலயங்களுக்குக் கொடைகள் அளிக்கப்பட்ட செய்திகள் செப்புப்பட்டயங்களில் குறிக்கப்பட்டுள்ளன. அரிகேசரி பராந்தக பாண்டியனின் கல்வெட்டின் மூலம் தமிழகம் மற்றும் கேரளப் பகுதிகளில் காசி விஸ்வநாதருக்கு என்று தனிக் கோயில்கள் அமைக்கப்பட்டன. இம் மன்னனின் கி.பி.1446-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்றில் சுவையான வரலாற்றுச் செய்தி காணப்படுகிறது. இம் மன்னனின் கனவில் காசி விஸ்வநாதர் தோன்றி காசியில் உள்ள தமது ஆலயத்தை அந்நியர்கள் அழித்துவருவதாகவும் தமக்கென கோயில் ஒன்றை சித்ரா நதிக்கரையில் கட்டும் படியும் கட்டளையிட்டமை குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் மூலம் வடஇந்தியாவில் இசுலாமியர்கள் படையெடுப்-பையும் தென்னகத்தில் பல சிவாலயங்கள் காசி விஸ்வநாதர் என்ற பெயரில் வழங்கும் வழக்கம் நடைமுறையில் வந்தமையையும் அறியமுடிகிறது.

கேரளாவில் அரச உரிமைக்கு வாரிசுரிமை பெற்ற ஆண்களே பட்டம் சூட்டிக்கொண்டனர். வாரிசு இல்லா மன்னர்கள் தங்களின் உறவினர்களின் பிள்ளைகளை வாரிசாக நியமித்துக் கொள்ளும் வழக்கம் கேரள அரச பரம்பரையில் நிலவி வந்தது. ஆனால் காலப்போக்கில் பெண்வழி அரசு ஏற்பட்டது. அதேபோன்று அரச குடும்பத்தினர் அரசின் பல்வேறு உயர் பதவிகளில் அமர்த்தப்பட்டனர். சில கல்வெட்டுகள் சமயப் பூசல்கள் நடந்த

செய்திகளைக் கூறுகின்றன. குறிப்பாக வேளாளர்களுக்கும் வெள்ளைநாடார்களுக்கும் நடந்த சச்சரவில் வெள்ளை நாடாருக்கு எவ்விதப் பணிகளும் அளிப்பதில்லை என்றும் அதற்கு முன் அவர்கள் அனுபவித்து-வந்த பல உரிமைகள் ரத்து செய்யப்பட்டும் தீர்மானம் நிறைவேற்றிய செய்தி கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கேரளத் தமிழ் கல்வெட்டுகளின் மூலம் இடைக்கால கேரள வரலாற்றை மட்டுமல்லாது இம்மாநிலத்தின் வழக்கில் உள்ள மலையாள மொழியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அறிய முடிகிறது. அறிஞர் கே.வி. சுப்பிரமண்ய அய்யர் முதன் முதலாகக் கல்வெட்டுகளின் துணை கொண்டு மலையாள மொழியின் பரிணாம வளர்ச்சியை ஆய்வு செய்தார். இப்பகுதியில் நிலவிய மொழி வழக்கு மேற்கத்திய தமிழ் பேச்சுமொழி வழக்கு என அவர் எடுத்துரைத்தார். அவரைத் தொடர்ந்து ஆய்வு செய்த எல்.வி. இராமசாமி அய்யர் இவற்றுள் சில மாறுபாடுகள் இருப்பதாகக் கூறினார். மேலும் மலையாள மொழியின் தாக்கம் கிறித்துவ சகாப்தத்தின் முதல் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது என்றும் மெல்லொலியான மூக்கின் வழி ஒலிக்கப்படும் நூ ஒலி அமைப்புச் சொற்கள் 10-ஆம் நூற்றாண்டு அளவில் பரவலாகக் காணப்பட்டன என்றும் அவர் கூறினார். எடுத்துக்காட்டாகப் பின்வரும் சொற்களை இங்கு சுட்டலாம். செங்கழுநீர்-செங்ஙெழுநிர்; மங்கலம்-மங்ஙலம்; பங்குனி-பங்ஙனி; பெருங்காவல்-பெருங்ஙாவல்; அமைந்த-அமைஞ்ஞு; சங்கரன்-சங்ஙரன்; பனைங்காடு-பனைங்ஙாடு; சிங்கம்-சிங்ஙம்; இச்சொற்கள் யாவும் கேரளத் தமிழ் கல்வெட்டுகளில் பயின்று வருகின்றன. இவ்வறிஞரைத் தொடர்ந்து திரு.குஞ்சன் பிள்ளை அவர்கள் கல்வெட்டுகளின் துணை கொண்டு இம் மொழியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் ஆய்வு செய்தார். கல்வெட்டு அறிஞர் திரு. கே.ஜி. கிருஷ்ணன் அவர்கள், மாம்பள்ளி செப்புப்பட்டயத்தின் அடிப்படையில் ஆய்வுசெய்து மேற்குக் கடற்கரை பேச்சு வழக்கு கி.பி.12ஆம் நூற்றாண்டளவில் மலையாளமாக உருமாற்றம் பெற்றது எனக் கூறியுள்ளார். சமீப காலத்தில் திரு. ஐராவதம் மஹாதேவன் அவர்கள் எழுத்துக்கல் கல்வெட்டு அடிப்படையில் மலையாள மொழியின் தாக்கம் கி.பி. முதல் நூற்றாண்டளவிலேயே இருந்துள்ளது எனக் கூறியுள்ளார்.

மேற்குக் கடற்கரைப் பகுதியில் நிலவி இருந்த பேச்சு வழக்கு மொழி குறித்து சைவ சமயக் குரவரான ஞானசம்பந்தரும் தமது பாடல்களில் சுட்டிக் காட்டியுள்ளார். இவ்வழக்குமொழியை இவர் 'மென்மொழி' எனக் குறிப்பிடுகின்றார். இதன் அடிப்படையில் மலையாள மொழியை, கல்வெட்டுக்களைக் கொண்டு ஆய்வு செய்வோமானால் அம் மொழியின் தோற்றம் பற்றி முழுமையாக அறியமுடியும். மலையாளம் நன்கு அறியப்பட்ட பின்பும் இம் மாநிலத்தில் 19ஆம் நூற்றாண்டு வரை தமிழ் ஆட்சிமொழியாக இருந்துள்ளமை இங்கு நோக்கத்தக்கது.

கேரளாவில் கிடைக்கின்ற தமிழ் கல்வெட்டுகளின் துணை கொண்டு பல அரசர்களின் காலத்தைக் கணிக்க இயலும். இம் முயற்சியில் ஈடுபட்ட திரு. என். சேதுராமன் அவர்களும் கேரளக் கல்வெட்டுகளின் அடிப்படையில்

பல அரசர்களின் காலத்தைக் கணித்தார். இக்கல்வெட்டுகளில் கொல்லம் ஆண்டு மிகுதியாகக் காணப்படுவ்துடன் பஞ்சாங்கக் குறிப்புகளும் காணப்படுவதால் காலத்தைக் கணிப்பது மிக எளிதாக உள்ளது. இக்கல்வெட்டுகளில் நாள், நட்சத்திரம், திதி போன்ற குறிப்புகள் உள்ளன. சில கல்வெட்டுகளில் சக ஆண்டும் கலி ஆண்டும் இவற்றுடன் இணைந்த எதிராமாண்டும் குறிக்கப்பட்டுள்ளன.

## கல்வெட்டில் கோயில் கட்டடக் கலைச் சொற்கள்

கேரளத் தமிழ் கல்வெட்டுகளில் பல தூய தமிழ் சொற்கள் விரவிக் கிடக்கின்றன. அவை இன்றளவும் அங்குள்ள மக்களின் பேச்சு வழக்கில் உள்ளமை மேலும் சிறப்பு உடையதாகும். கோயில்களில் பூஜையின் போது பயன்படுத்தப்படும் பல சொற்கள் தமிழ்ச் சொற்களாக இன்றளவும் உள்ளன. குறிப்பாக 'பந்தீரடி' இச்சொல் பன்னிரண்டு அடி என்ற தமிழ் சொல்லின் திரிபாகும். இன்றளவும் காலை வேளையில் கேரளக் கோயில்களில் இப்பூஜை சூரியன் உதயம் ஆகும் பொழுது அதாவது விழுகின்ற நிழல் 12 அடி ஆகும் போது நடத்தப்படுவதாகும். இதேபோன்று இரவில் நடக்கின்ற கடைசிப் பூஜை 'திருப்புகா' எனப்படும். கோயில்களில் இரவில் கடைசியாக நடையை மூடுவதற்கு முன்பு நறுமணப் புகை இட்டு மூடுவர். 'திருப்புகை' என்பதின் திரிபே 'திருப்புகா' எனக் கூறப்படுகிறது. இவற்றுக்காக நிவந்தங்கள் அளித்த செய்தி கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. கேரளக் கல்வெட்டுகளில் 'கும்பாபிஷேகம்' என்ற சொல் 'கலசமாடுதல்' என்றே தூய தமிழில் குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டுகளில் பல கோயிற் கட்டடக் கலைச் சொற்கள் அழகுத் தமிழில் குறிக்கப்பட்டுள்ளன. அந்தராளம் என்பது இடைநாழி என்றும் கர்ப்பகிருகம் என்பது முக்கால்வட்டம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. கேரளாவில் கோயில்களில் கருவறை முற்றிலுமாக திருச்சுற்றுப்பாதையைப் பெற்றிருப்பதில்லை. எனவே இது முக்கால் வட்டம் எனப்படும். நடை என்பது பொதுவாகக் கோயிலைக் குறிக்கும், இன்றளவும் இச்சொல் கோயில்களில் பயின்று வருகின்றது. பொதுவாள் என்ற சொல் பல கல்வெட்டுகளில் பயின்று வருகின்றது. தமிழ் நாட்டில் கிடைக்கும் மத்யஸ்தன் என்ற வடசொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல் இது. இதேபோன்று அகப் பொதுவாள், புறப்பொதுவாள், ஊர்ப்பொதுவாள், கொட்டில், வரிப்புள்ளி, மனைமேய்ப்பான் போன்ற தமிழ்ச் சொற்களைக் குறிப்பிடலாம்.

கேரளப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த மு.இராகவையங்கார் கேரளக் கல்வெட்டுகளில் காணப்படும் சில தமிழ்ச் சொற்களை ஆய்வு செய்தால் தமிழ் இலக்கியத்திற்குப் பேருதவியாக அமையும் எனக் கூறினார். எடுத்துக்காட்டாக சாவேறு, அக்கன், உள்பாடு, முலைவரி, புலரி முதலிய சொற்களைச் சுட்டிக்காட்டினார். ஆகவே கேரளத்தில் காணப்படுகின்ற கல்வெட்டுகளை முழுமையாக ஆய்வு செய்வோமானால் கேரளாவின் வரலாறு மற்றுமன்றி தமிழ்மொழியின் வரலாற்றையும் வட்டார வழக்குச் சொற்களையும் நம்மால் எளிதாக அறியமுடியும்.

# 42. தமிழக-தக்காணக் கலைப்பரிமாற்றங்கள்*

கு. சேதுராமன், மதுரை.

இந்திய வரலாற்றில் ஒவ்வொரு காலகட்டத்திலும் கலை மற்றும் பண்பாட்டுப் பரிமாற்றங்களும் எழுச்சியூட்டும் நிகழ்வுகளும் நடந்து வந்துள்ளன. பல்வேறு அரச மரபினர்க்கிடையே நட்பு தொடர்ந்திடாத போதும் சிறந்த கருத்துக்களை அனைத்துத் தரப்பினரும் ஏற்றுக் கொள்ளும்படியாக அமைந்திருக்கும் சிறந்த ஊடகமாக கலை வளர்ந்து வந்துள்ளது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். பண்பாட்டு வரலாறு ஓசையற்ற மொழியைக் கொண்டுள்ளது. அது கல்வெட்டுக்கள், சிற்பங்கள், ஓவியம், கட்டடம் என்று பல்வேறு ஊடகங்கள் மூலம் தன்னை வெளிப்படுத்துகின்றது. தமிழகத்தில் சமகாலத்தில் ஆட்சிசெய்த பல்லவரும் முற்காலப் பாண்டியரும் தொடர்ந்து பகைகொண்டு போரிட்டுக் கொண்டனர். ஆனால், அவர்கள் கலையழகை வெளிப்படுத்துவதில் ஒன்றுபட்டனர். அவர்களுக்குள் திருமண உறவுகூட ஏற்பட்டது. பல்லவர்களது கலை பாண்டியர்களிடம் மட்டும் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. அது தக்காணத்தில் சாளுக்கியர், இராட்டிரகூடர் பகுதிகளுக்கும் சென்றடைந்தது. அதேநேரத்தில் சாளுக்கியர், இராட்டிரகூடர், நுளம்பர், கலைக்கூறுகள் தமிழகத்திலும் பரவின. இக்கலைப் பரிமாற்றங்கள் மேற்கு இந்தியாவில் உள்ள எல்லோராவிலிருந்து தமிழகத்தின் தென்கோடியிலுள்ள பாண்டியரின் கலைக்கூடமான கழுகுமலையையும் தாண்டி மிகப்பரந்த பகுதிகளில் நிகழ்ந்துள்ளன. இம்மாதிரியான பரிமாற்றங்கள் நிகழ்வுற்ற காரணத்தினால்தான் சிறந்த கலைச் சின்னங்களைக் கலைஞர்களால் உருவாக்கித் தரமுடிந்துள்ளது.

தமிழக-தக்காணக் கலைத்தொடர்புகள் பல்வேறு கால கட்டங்களில் ஏற்பட்டுள்ளன. முதலாவதாக, முதலாம் மகேந்திரவர்ம பல்லவன் காலத்தில் நடைபெற்ற பல்லவச் சாளுக்கியப்போரின் விளைவாகவும், இரண்டாவதாக முதலாம் நரசிம்மவர்மனின் வாதாபி வெற்றியின் விளைவாகவும், மூன்றாவதாக சாளுக்கிய மன்னன் இரண்டாம் விக்கிரமாதித்தனின் காஞ்சிப் படையெடுப்பின்போதும், நான்காவதாக கீர்த்திவர்மனின் படையெடுப்பின் போதும், ஐந்தாவதாக கி.பி. எட்டாம் நூற்றாண்டின் மத்தியில் இராட்டிரகூடமன்னன் தந்திதுர்க்கனின் படையெடுப்பின்போதும், சோழர், மேலைச்சாளுக்கியர், கீழைச்சாளுக்கியர் கால அரசியல் நடவடிக்கைகளின் போதும் பெரும்பாணப்பாடி வாணர், தெலுங்குச் சோழர், நுளம்பர்,

---

* தவத்திரு நாச்சியப்ப ஞானதேசீக சுவாமிகள் கோவிலூர் சுவாமிகள் ஆண்டவர் பெயரில் ஏற்படுத்திய அறக்கட்டளைச் சொற்பொழிவு. 24.7.2004 அன்று சிதம்பரத்தில் ஆவணம் இதழ் 15 வெளியீட்டு விழாவில் நிகழ்த்தப்பட்டது.

வைதும்பர், கங்கர் போன்ற சிற்றரசுகளின் ஊடுருவல்களாலும் விஜயநகரப் பேரரசின் விரிவாக்கத்தினாலும் பரந்த அளவில் கலைப் பரிமாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பாண்டியமன்னன் கோச்சடையன் ரணதீரன் மதுரகருநாடகன் என்ற பட்டம் பெற்றிருப்பது அவன் கன்னடப் பகுதிவரை வெற்றிகொண்டுள்ளதைக் காட்டுகிறது. அவன் மகன் மாறவர்மன் ராஜசிம்மன் மாளவத்தை வென்று மைசூர்வரை சென்றுள்ளான். இராஜசிம்மனின் மகன் பராந்தக நெடுஞ்சடையன் (கி.பி. 765-815) சிறந்த கலை ஆர்வலனாய் இருந்தான். இவனுக்குப் பின்வந்த ஸ்ரீமாறஸ்ரீவல்லபன் கங்கநாட்டையும், கலிங்கம் மற்றும் மகதத்தையும் வென்றான். பாண்டியர்களின் இவ்வரசியல் நிகழ்வுகள் தக்காணத் தொடர்பை ஏற்படுத்தியுள்ளன. இவர்கள் பல்லவருக்கு எதிராகத் தக்காணத்துடன் நட்புக்கொண்டிருந்தனர். இது கலைப் பரிமாற்றத்திற்கும் வழிவகுத்துள்ளது.

கலைஞர்களின் போக்குவரத்து பல்வேறு வழித்தடங்களின் வழியாக ஏற்பட்டுள்ளது. ஆந்திரா மற்றும் கிழக்குக் கடற்கரை வழியாகவும், நுளம்பபாடி, தர்மபுரி, சேலம், நாமக்கல் வழியாகவும், மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி வழியாகவும் தக்காண, தமிழக, கேரளப் பகுதிகளிடையே கலைப்பரிமாற்றங்கள் நிகழ்ந்திருக்கக்கூடும். ஏனெனில் மேற்குறிப்பிட்ட பகுதிகளில் இத்தொடர்பின் எச்சங்கள் பெருமளவில் காணப்படுகின்றன. சாளுக்கிய விக்கிரமாதித்தன் சோழநாட்டின் பகுதிகள் வரை வந்ததாக கி.பி. 674இல் கொடுக்கப்பட்ட கத்வால் செப்பேடுகள் கூறுகின்றன.[1] வைணவப் பெரியார் திருமங்கையாழ்வாரின் கூற்றுப்படி பாண்டியர்கள் பல்லவர்களுக்கு எதிராக வடவர்களுக்கு (சாளுக்கியர்) ஆதரவளித்துள்ளனர்.[2] எனவே இவ்வரசியல் தொடர்புகளினால் தமிழகத்தில் உட்பகுதிகளுக்கிடையேயும், வெளியிலிருந்து வந்தும் கலைப்பண்பாடு வளர்ச்சியடையத் தொடங்கியது. இது ஒரு முக்கோண வடிவில் ஏற்பட்ட வளர்ச்சி எனலாம். தக்காணப் பகுதிகளிலிருந்து தமிழகத்தில் பரவி விரிந்து பரிணமித்து மீண்டும் இராட்டிரகூடர் காலத்திலும் அதன்பின்னும் கலைப்பண்பாடு தக்காணப்பகுதியைச் சென்றடைந்துள்ளது. இத்தொடர்பின்மூலம் ஒரு பகுதியிலிருந்த ஒரு குறிப்பிட்ட கலைப்பாணி அப்படியே மற்றொரு பகுதிக்கு எடுத்துச் செல்லப்பட்டது என்று சொல்லமுடியாது. கலையை உருவாக்குவோர் பிற இடங்களில் தாம் கண்டு ரசித்த சில கலைக்கூறுகளை மட்டுமே தங்களது கலைச்சின்னங்களில் புகுத்தியுள்ளனர். பிற கலைக்கூறுகளைத் தங்களுக்கே உரிய பாணியில் அமைத்துள்ளனர். ஆனால் ஒரிரு பகுதிகளில் அச்சுப்போல அப்படியே எடுத்துச்சென்று வைத்ததுபோலும் அமைத்துள்ளனர். இவையெல்லாம் கலைச்செல்வங்களை உருவாக்கும் கலைஞனின் மனநிலையையும், அவனைப் பணித்தோரின் உள்ளநிலையையும் பொறுத்தே அமைந்தன.

தக்காண-தமிழகக் கலைத்தொர்டர்புகள் பற்றி அறிஞர் பெருமக்கள் முன்னமே எழுதியுள்ளனர். ஆனால் அவர்களில் பெரும்பாலோர் இது சாளுக்கியத் தாக்கம், இது பல்லவர் தாக்கம், இது இராட்டிரகூடர் பாணி, பாண்டியர் பாணி என்று கோடிட்டுக் காட்டியுள்ளனரேயன்றி அதை இந்த இடத்தில் உள்ள இந்தக் காலத்தைச் சேர்ந்த கலையுடன் தொடர்புடையது

என்று ஒப்பிட்டுக் காட்டவில்லை. சி.சிவராமமூர்த்தி, கே.ஆர். சீனிவாசன் போன்ற அறிஞர் பெருமக்களின் கருத்துக்களைத் தழுவியும் அவர்கள் விட்டுச்சென்ற இடத்திலிருந்து தொடர்ந்து விரிவாக்கம் செய்வதும்தான் இக்கட்டுரையின் நோக்கம்.

## கட்டடக் கலைத் தொடர்பு

### தமிழகத்தின் மீது தக்காணத் தாக்கம்

தமிழக, தக்காணக் கலைக்கூறுகள் திடீரென்று தமிழகத்திலோ அல்லது தக்காணத்திலோ தொடங்கப்பட்டு பின் இவ்விரு பகுதிகளுக்குள் பரிமாற்றம் செய்துகொள்ளப்பட்டவை என்று கூறவியலாது. பௌத்தர் கலையிலிருந்தும், பின்பு குப்தர் காலத்தில் தோன்றி வளர்ந்த இந்துக் கலையிலிருந்தும் பெறப்பட்டவையும் பின்பு விரிவுபடுத்தப்பட்டவையுமே தென்னகத்துக் கலைச்சின்னங்களாகும். எடுத்துக்காட்டாக கோயில் கட்டடக் கலையில் முக்கியப்பங்கு வகிப்பது தூண் என்னும் உறுப்பாகும். இத்தூணின் உச்சியிலுள்ள போதிகை கால நிர்ணயத்திற்குப் பெரிதும் பயன்படுகிறது. சாளுக்கியர் பகுதியில் வாதாபியில், கி.பி. 578இல் வெட்டப்பட்ட குடைவரைக் கோயில்களில் தரங்கப்போதிகை அமைப்பு உள்ளது. பல்லவரது சமகால மன்னர்களான பாண்டியர்களது குடைவரைகளிலும் இவ்வமைப்பைக் காணலாம்.[3] நரசிம்மவர்மனது குடைவரைகள் சிலவற்றிலும் இது இடம்பெற்றுள்ளது. இக்கலைக்கூறு வாதாபிக்கு முன்பே சில வடஇந்தியக் கோயில்களிலும் காணப்படுகிறது.[4] இது, எவ்வகையில் வடக்கிலிருந்து தெற்குநோக்கிச் சில கலைக்கூறுகள் விரிவாக்கம் பெற்றன என்பதற்கு நற்சான்றாக அமைகிறது.

வாதாபி குடைவரையின் அதிட்டானப் பகுதியில் உள்ள சிற்பத் தொகுதிகளில் பூதகணங்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இதேவிடத்தில், இரண்டாம் புலிகேசி (கி.பி. 608-642) காலத்தில் அமைக்கப்பட்ட மேல்சிவாலயக் கோயிலில் இராமாயணச் சிற்பங்களும் கிருஷ்ணாவதாரச் சிற்பங்களும் அதிட்டானத்தில் இடம்பெற்றுள்ளன. மகாகூடம் மகாகூடேசுவரர் கோயில் (கி.பி. 670-680) அதிட்டானத்திலும் சிற்பத் தொகுதிகள் உள்ளன. காஞ்சியில் இராஜசிம்மனால் கட்டப்பட்ட கைலாசநாதர் கோயில் அதிட்டானத்திலும் சிற்பத் தொகுதிகளும் பூதகணங்களும் இடம்பெற்றுள்ளன. முற்காலச்சோழர்களது கோயில்கள் பலவற்றில் அதிட்டானக் கண்டப் பகுதியில் இராமாயணச் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. அதிட்டானத்தில் சிற்றுருவச் சிற்பங்கள் அமைக்கும் பாணி குப்தர்களின் தியோகார் தசாவதாரக் கோயிலிலேயே தொடங்கிவிட்டது.

அதிட்டானத்தில் யானையின் உருவம் வைக்கும் வழக்கம் வாதாபி மேல் சிவாலயத்திலும், ஐஹொளேயில் உள்ள மேகுடி சமணக் கோயிலிலும் (கி.பி. 634) காணப்படுகிறது. இதனைப் பல்லவரது திரௌபதி ரதம், அர்ச்சுன ரதம் மற்றும் காஞ்சிக் கைலாசநாதர் கோயில் (கி.பி. 725) ஆகியவற்றில் காணலாம். சாளுக்கியர்களுக்கும் பல்லவர்களுக்கும் முன்பே கி.பி. மூன்றாம்

நூற்றாண்டிலேயே இலங்கையிலுள்ள ஒரு தக்கோபாவினை யானைகள் தாங்கியிருப்பதுபோல் கட்டப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தகுந்தது.[5] கட்டடத்தின் அனைத்துத் திக்குகளிலும் பூமியைத் தாங்கும் யானைகளை வைப்பது வழக்கம் என்று சிவராமமூர்த்தி கூறுகிறார்.[6] இப்பாங்கு சிறிது காலத்திற்குப் பின்பு எல்லோராவிலும் இராட்டிரகூடர் கலையம்சத்தில் இடம்பெற்றது. இங்கு பெரும் பெரும் யானைகள் முழு உருவத்தில் நிறுத்தப்பட்டுள்ளன. பட்டதக்கல்லில் (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு) சமணக்கோயிலில் கிழக்குச்சுவரில் யானைகள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. இதைப் பின்பற்றியே பதினாறாம் நூற்றாண்டளவில் மதுரை மீனாட்சி-சுந்தரேசுவரர் கோயில் வளாகத்திலுள்ள சுந்தரேசுவரர் விமானத்தினைச் சுவர்ப் பகுதியிலிருந்து எட்டு யானைகள் தாங்கி நிற்பதுபோல் காட்டப்பட்டுள்ளது.

சாளுக்கியரின் வாதாபி மேகுடி சமணக்கோயிலில் பிரஸ்தரத்துக் கபோதக் கூடுகளில் மனித உருவம் காணப்படுகிறது. பல்லவரது ரதங்களிலும், கட்டுமானக் கோயில்களிலும் இத்தகைய அமைப்பைக் காணலாம். பல்லவர் குடைவரைகளில் தளவானூர் சத்துருமல்லன் குடைவரை முகப்பிலும், திருச்சிராப்பள்ளி லலிதாங்குர பல்லவேசுவர குடைவரைக் கருவறை முகப்பிலுள்ள கூடுகளிலும் மட்டுமே மனித உருவங்கள் உள்ளன. மற்ற குடைவரைகளில் கூடுகள் இல்லாததும், இந்த இரு குடைவரைகளில் மட்டுமே கூடுகளில் மனித உருவங்கள் இருப்பதும் இக்குடைவரைகள் மற்றவற்றைவிடச் சற்றுப் பிந்திய காலத்தைச் சேர்ந்தவை என்பதைக் காட்டுகிறது. மேலும் இக்கூடு அமைப்பு தக்காணத்திலிருந்து வந்தது என்பதும் தெளிவாகிறது.

தக்காணத்துக் கோயில்களில் பெரும்பாலும் நேர்க்கோணக் கபோதம் அமைந்துள்ளது. இதைப்போன்றே அனைத்துப் பல்லவர் கோயில்களும் இக்கலைக் கூறினைக் கொண்டுள்ளன. கஜபிரிஷ்ட விமான அமைப்பு கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில் உருவாகியுள்ளது. இதற்கு உதாரணமாக ஐஹொளேயில் உள்ள துர்க்கைக்கோயிலைக் கூறலாம். இக்கோயில் கட்டுமான வகையைச் சேர்ந்ததாகும். மாமல்லபுரத்து நகுல-சகாதேவ ரதமும் கஜபிரிஷ்ட விமானமாகும். கலை வளர்ச்சியில் ஒரே காலகட்டத்தில் வெவ்வேறு இடங்களில் ஒரே மாதிரியான கலைக்கூறுகள் அமைவதும் உண்டு.[7] அவ்வகையில் மாமல்லபுரத்து ரதங்கள் அனைத்தும் முதலாம் நரசிம்மவர்மன் காலத்தவை என்று கொண்டால் இந்த கஜபிரிஷ்ட விமான அமைப்பு சமகாலக் கலைநுட்பமாகும்.[8] பல்லவர்க்கு முந்திய தக்காணக் கோயில்கள் பல சாந்தார வகையைச் சேர்ந்தவையாகும்.[9] இதற்கு உதாரணமாக, வாதாபி மேல்சிவாலயம் வாதாபி கீழ்ச்சிவாலயம் (608-642) ஐஹொளே மேகுடி சமணக்கோயில் (645) மகாகூடேசுவரர் கோயில் (680-720) போன்றவற்றைக் குறிப்பிடலாம். தமிழகத்தில் சாந்தாரவகைக் கோயில்கள் சிலவேயாகும். இவற்றில் முன்னோடியானது காஞ்சிக் கைலாசநாதர் கோயிலாகும். காஞ்சியிலுள்ள வைகுந்தப்பெருமாள் கோயிலைத் தொடர்ந்து விஜயநகர-நாயக்கர் காலம்வரை கட்டப்பட்ட

வைணவ அஷ்டாங்கவிமானக் கோயில்கள் (ஆறு) அனைத்தும் சாந்தார வகையைச் சேர்ந்தவையாகும். பல்லவருக்குப் பிந்தியகாலத்தில் தஞ்சைப் பெரியகோயிலும், இராமேசுவரத்தில் உள்ள சோழர்காலத்துக் கோயில்களும், நாயக்கர் காலத்திலும் அதன் பின்பும் கட்டிமுடிக்கப்பட்ட, இன்று பிரதானமாக உள்ள, இராமநாதசுவாமி கோயிலும் சாந்தார வகையைச் சேர்ந்தவையே.

இராட்டிரகூடரின் எல்லோராவில் உள்ள (எட்டாம் நூற்றாண்டு) கைலாசநாதர் கோயிலில் உள்ள மண்வெட்டி தலைப்புடைய கூடுகளின் அமைப்பு பாண்டிய நாட்டில் கழுகுமலையில் இடம்பெற்றுள்ளது. கழுகுமலை (எட்டாம் நூற்றாண்டு) ஒற்றைக்கல் கோயிலை மாமல்லபுரத்தைப்போல் தனித்திருக்கும் சிறுபாறையில் வெட்டாமல் மலையை மேலிருந்து கீழ்நோக்கி நான்கு பக்கமும் வெட்டி (trenching) எல்லோரா போன்றே அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.[10] வாதாபியிலுள்ள மேல்சிவாலயத்தில் பத்திரப் பகுதியிலுள்ள கோட்டத்தில் மகரதோரணங்கள் அமைந்துள்ளன. முத்துப்பதித்த மாலைகள் அவற்றிலிருந்து வெளிவருவதுபோல் அமைக்கப்பட்டுள்ளன.[11] இவ்வமைப்பு பின்னாளில் பல்லவ, பாண்டிய, சோழர் கோயில்களில் சித்திர, மகர, பத்ர தோரணங்களாகப் பரிணமித்துள்ளன. கோயிலின் விட்ட அமைப்பில் தோரணம் அமைக்கும் பாங்கு ஐஹொளேயிலுள்ள பௌத்த விகாரத்திலும்[12] (கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி) பல்லவரது தளவானூர் குடைவரையிலும், சீயமங்கலம் குடைவரையிலும் காணப்படுகிறது. இக்கோயில்கள் மகேந்திரவர்மன் காலத்திற்குச் சற்றுப் பிந்தியவை என்ற கருத்து நிலவுகின்றது.[13] வாதாபி கோயில்களிலும் ஐஹொளேயிலும் அபிஷேகநீர் வெளியே செல்வதற்கான பிரநாளங்கள் அமைக்கப்பட்டுள்ளன.[14] இதனைச் சமகாலப் பல்லவர் கோயில்களில் காணமுடியவில்லை. ஆனால் பாண்டியர் குடைவரைகளிலும் கட்டுமானக் கோயில்களிலும் இவ்வமைப்பு காணப்படுகிறது. இதுபோன்று, கருவறைகளில் சிவலிங்கம் வைக்கும் மரபு தக்காணப் பகுதியிலிருந்து பாண்டியர், முத்தரையர் பகுதிகளில் பரவியுள்ளது. இது, தக்காணப் பகுதியோடு, பாண்டியர், முத்தரையர் பகுதிகள் நேரடிக் கலைத் தொடர்புகள் கொண்டிருந்ததைக் காட்டுகிறது. சாளுக்கிய முதலாம்விக்கிரமாதித்தன் 674இல் பல்லவமன்னன் முதலாம் பரமேசுவரவர்மனுக்கு எதிராகப் பாண்டியமன்னன் அரிகேசரி பராங்குச மாறவர்மனுடன் நட்புக் கொண்டிருந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இத்தொடர்பு பல்லவரையும் தாண்டி நேரடியாகச் சில கலைக்கூறுகள் பாண்டிய நாட்டை வந்தடைவதற்கு ஏதுவாக இருந்திருக்க வேண்டும். வாதாபி கீழ்ச்சிவாலயத்தில் (608-642) அந்தராளத்தின் கபோதப்பகுதியில் உடைந்த நிலையிலான பூதவரி உள்ளது. இவ்வமைப்பு பிற்காலத்தில் தமிழகக் கோயில்களிலும் இடம்பெறலாயிற்று. பூதவரியில் பூதகணங்களின் வயிற்றில் 'உதரமுகம்' அமைக்கும் மரபு (பூதகணத்தின் வயிற்றில் ஒரு முகம்) வாகாடகர் காலத்திய அமராவதி சிற்பங்களில் காணப்படுகிறது. இதுவே வாதாபியிலும் இடம்பெற்றுள்ளது. இது சாளுக்கியர்கள் வாகாடகர்களின்

அரசியல் வாரிசுகள் என்பதனைத் தெளிவுபடுத்துகிறது.[15] இதே அமைப்பு மாமல்லபுரத்து அர்ச்சுனன் தவம் (கிராதார்ஜுனியம்) சிற்பத் தொகுதியிலும், காவேரிப்பாக்கம் சோழர் சிற்பத்திலும், முற்காலப்பாண்டியர்களது கோயில்கள் சிலவற்றிலும் காணப்படுகிறது.[16]

கோயில்களில் சுவர் அமைப்பில் நடுவில் அமைந்துள்ள பத்ரப் பகுதி மட்டும் சற்று வெளிப்புறமாகப் பிதுங்கி இருப்பதும், அதேபகுதி மற்ற ஓரப்பகுதிகளைவிட சற்று உள்ளடங்கியவாறு அமைவதும் இந்தியக்கட்டடக் கலையில் காணப்படும் கலைக்கூறுகளில் குறிப்பிடத்தக்கனவாகும். தக்காணத்தில் மகாகூடத்தில் உள்ள மல்லிகார்ச்சுனர் கோயிலிலும் (681-696), சீர்வாலிலும் பத்ரப்பகுதி பிதுங்கியவாறு அமைக்கப்படுள்ளது.[17] இதன் தாக்கத்தைச் சோழநாட்டில் திருச்சோற்றுத்துறை, திருநாமநல்லூர், பாளூர், எறும்பூர், கீழையூர், திருக்கட்டளை, ஆனாங்கூர் ஆகிய இடங்களிலுள்ள கோயில்களிலும், இராமேசுவரத்தில் முதலாம் பராந்தகன் காலத்தில் கட்டப்பட்ட இரட்டைக் கோயில்களிலும் காணலாம்.[18] கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் ஐஹொளே, குண்டிகுடியில் உள்ள இரண்டு கோயில்களில் ஆப்புவடிவப் போதிகை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தில் பட்டதக்கல்லில் இராட்டிரகூடர்களால் கட்டப்பட்ட சமணக்கோயிலிலும் ஆப்புவடிவப் போதிகை காணப்படுகிறது.[19] இப்போதிகை அமைப்பு முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் ஏற்பட்ட தக்காணத் தொடர்பால் தமிழகத்திற்கு வந்திருக்க வேண்டும். இதனை இராஜராஜன் தனது கோயில்களில், தாதாபுரத்திலும் (1006), மதகடிப்பட்டு கூடங்குழிகோயிலிலும், தஞ்சைப் பெரியகோயிலிலும் அறிமுகப்படுத்தினார். இதன்பின் இப்போதிகை அமைப்பு பெரும்பாலான பிற்காலப்பாண்டியர் கோயில்களில் இடம்பெறலாயிற்று.

இறந்துபோன அரசன் அல்லது அரச குடும்பத்தவர்களின் நினைவாக எழுப்பப்படும் கோயில்கள், பள்ளிப்படைக் கோயில்களாகும். தமிழகத்தில் தொன்மைக்காலத்திலேயே நினைவுத்தூண்கள் அல்லது வீரக்கற்கள் எழுப்பப்பட்டதற்கானச் செய்திகள் கிடைத்திருக்கின்றபோதும் பள்ளிப்படைக் கோயில் இருந்ததற்கான ஆதாரம் ஏதுமில்லை. கருநாடகத்தில் முற்காலச் சாளுக்கிய மன்னன் இரண்டாம் விக்கிரமாதித்தனின் நினைவாக, கி.பி. எட்டாம் நூற்றாண்டின் மத்தியில் பத்ரநயகனஜலிகால் என்ற இடத்தில் கோயில் ஒன்று எழுப்பப்பட்டுள்ளது.[21] தமிழகத்தில் இதற்குப் பின்பு 9-11 நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் பள்ளிப்படைக் கோயில்கள் எழுப்பப்பட்ட செய்திகள் கிடைக்கின்றன. பாண்டிய நாட்டில் பத்தாம் நூற்றாண்டில் சோழன்தலைகொண்ட வீரபாண்டியன் தன் மூத்த சகோதரனின் சமாதிமீது, பள்ளிமடம் என்ற இடத்தில், பள்ளிப்படை சுந்தரபாண்டிய ஈசுவரமுடையார் கோயில் என்ற பெயரில் கோயில் ஒன்றினை எழுப்பியுள்ளான். பவனாசிசங்கமம் என்னும் ஊரில் உள்ள கோயிலில் பிரம்மகண்ட தூணில் நாகபந்தம் காணப்படுகிறது (ஒன்பதாம் நூற்றாண்டு). இதுவே பிற்காலத்தில் பிற்காலச்சோழர், பிற்காலப்பாண்டியர் மற்றும் விஜயநகர-நாயக்கர் காலத்தில் விரிவடைந்தது.[21அ]

**தக்காணத்தின் மீது தமிழகத் தாக்கம்**

இதுபோன்றே தமிழகத்திலிருந்து தக்காணப் பகுதிக்குப் பல கலைக்கூறுகள் கலைஞர்களோடும், கலை ரசிகர்களோடும் சென்றுள்ளன. பல்லவமன்னன் முதலாம் நரசிம்மவர்மனால் அமைக்கப்பட்ட தூணின் அடிப்பாகத்தில் சிங்கம் அமர்ந்திருக்கும். இதனை நகுல-சகாதேவ இரதத்தின் முகப்பில் தெளிவாகக் காணலாம். தருமராஜ ரதத்திலும், கணேச ரதத்திலும் முகப்புத்தூண்கள் இக்கலைக் கூறுகளையே காட்டுகின்றன. இதனை, இராட்டிரகூடர்கள் எடுத்தாண்டுள்ளனர். கி.பி. பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பட்ட சீர்வால்கோயில் எண் பதினைந்தில் அந்தராளப்பகுதித் தூண்கள் நரசிம்மவர்மனின் தூண்களை அச்சு எடுத்துச் சென்றதுபோல் அமைந்துள்ளன.[22]

காஞ்சிக் கைலாசநாதர் கோயிலில் தேவகோட்டத் தோரணங்கள் கோட்டத்தின் இருபுறங்களிலும் வளைந்து தொங்குவதுபோல் அமைந்து உள்ளன.[23] இவ்வமைப்பு தக்காணத்தில் பவனாசிசங்கம் புஜங்கேசுவரர் கோயிலிலும் (850, இராட்டிரகூடர்)[24], பிச்சவோலு கோளிங்கேசுவரர் கோயிலிலும் (கி.பி. 850, வெங்கி சாளுக்கியர்), அங்குள்ள சந்திர சேகரர் (850) கோயிலிலும்[25] காணப்படுகிறது. பவனாசி சங்கமத்திலுள்ள புஜங்கேசுவரர் கோயிலில் கபோதத்திற்கு மேலுள்ள ஹம்சமாலையும், மேல்தளத்திலுள்ள யாளிவரியும் பல்லவர் பாணியில் அமைந்துள்ளன.[26]

காஞ்சிக் கைலாசநாதர் கோயிலில் தோரணத்தின் மத்தியில் குஞ்சம் ஒன்று கோட்டத்தின் நடுவே தொங்குவதுபோல் அமைந்துள்ளது.[27] எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்த இவ்வமைப்பு ஒரு நூற்றாண்டு கழித்து வேங்கிச் சாளுக்கியரால் பிச்சவோலுவில் கட்டப்பட்ட வீரபத்திரசாமி கோயிலில் காணப்படுகிறது. அக்கோயில் தோரணம் முழுவதுமே காஞ்சியை நினைவூட்டுகிறது.[28] கோயில்களில் கபோதத்தின் முனைப்பகுதியில் மரத்தை விட்டமாகச் சொருகியிருப்பதுபோன்ற வட்டவடிமான வரிசை (circular bosses) அமைவது தென்னிந்தியக் கட்டடக்கலை நுணுக்கங்களில் ஒன்றாகும். இவ்வமைப்பு முதன்முதலில் பனைமலை தாளகிரீசுவரர் கோயிலில் இடம்பெறுகிறது.[29] இது பாண்டியநாட்டில் கழுகுமலை வெட்டுவான்கோயிலிலும், கட்டுமானக் கோயில்களிலும் பிரதிபலித்தது.[30] முற்காலச்சோழர் கோயில்களிலும் இவ்வமைப்பின் தாக்கம் காணப்படுகிறது.[31] தக்காணத்தில் சிரவணபெளகோளாவில் சாமுண்டராயர் கோயிலிலும் (995), சீர்வால்கோயில் (இராட்டிரகூடர்) எண் நான்கிலும் (939), கம்பதஹள்ளியிலும் (பத்தாம் நூற்றாண்டு) இவ்வகை வட்டவடிவ அமைப்பு புகுந்தது.[32] சிரவணபெளகோளாவும். கம்பதஹள்ளி கோயிலும் தலைக்காட்டு கங்கர்களைச் சேர்ந்ததாகும்.

கூடுகளின் உட்பகுதிகளில் கூட்டின் பள்ளத்தைச் சுற்றியுள்ள பகுதியில் ஆபரணமாக பூக்கள், முத்துக்கள், இலைகள் போன்ற பலவகை வேலைப்பாடுகள் செய்விப்பது வழக்கமாகும். இக்கூடுகளில் ரோஜாப்பூ வடிவ அலங்காரம் அமைக்கப்பட்டது. இதனைக் கொண்டுள்ள தொன்மையான தமிழக-தக்காணக் கோயில்கள் பல்லவர்களது தர்மராஜ

ரதம், பீம ரதம் ஆகியனவாகும். இதனைப் பின்பற்றி இராட்டிரகூடர்கள் எல்லோராவில் (800) இவ்வலங்காரத்தைப் புகுத்தினர். இவ்வமைப்பு மீண்டும் தமிழகத்திற்குக் கழுகுமலை வெட்டுவான் கோயிலுக்கு வந்தது. மீண்டும் தக்காணத்தில் பவனாசிசங்கம் ரூபாளசங்கமேசுவரர் கோயிலில் இடம்பெற்றது.[33]

சிகரங்களில் மூன்றுவகையானவை இன்றியமையாத சிறப்புடையதாகக் கருதப்படுகின்றன. அவை, கூடசிகரம், சாலைசிகரம், கஜப்பிரிஷ்டசிகரம் ஆகியனவாகும். சாலைசிகரம் தென்னிந்தியாவில் முதன்முதலில் அறிமுகமானது மாமல்லபுரத்து பீமரதத்தில்தான். பின்னாளில் தேவிகோயில்களும், விஷ்ணுவின் அனந்தசயனக் கருவறைகளும் சாலைசிகரம்கொண்டு அமைக்கப்பட்டன. இராட்டிரகூடரின் தமிழகப் படையெடுப்பிற்குப்பின் எல்லோராவின் கைலாசநாதர் கோயிலின் குடமண்டபமும், பரிவாராலயமும் சாலைசிகரம் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளன.[34]

இராட்டிரகூடர்களால் கட்டப்பட்டுள்ள குக்கனூர் கோயில் தூண்களில் உள்ள அலங்காரங்கள் சோழர் கோயில்களில் உள்ள தூண்களை நினைவுபடுத்துகின்றன.[35] சோழநாட்டில் இதற்கு முன்னோடியாக இருப்பது திருவையாறு கோயில் தூண்களாகும்.[36] தருமபுரி மல்லிகார்ச்சுனர் கோயில் (850) பெரும்பாணப்பாடியைச் சேர்ந்ததாகும். இங்குள்ள தூணில் அலங்கார வேலைப்பாடு மிக நேர்த்தியாக அமைந்துள்ளது.[37] இதனையொத்த மற்றொரு உதாரணம் தெலுங்குச் சோழர்களின் சிலம்கூறு அகஸ்தீசுவரர் கோயிலில் (950-1000) காணப்படுகிறது.[38] இப்பகுதியைப் பெரும்பாணப்பாடி வாணர்களிடமிருந்து தெலுங்குச்சோழர்கள் பெற்றதன் விளைவே இக்கலைத் தொடர்பின் பின்னணியாகும்.

சீர்வால்கோயில் எண் நான்கில் சதுரமான (பிரம்மகண்டம்) அரைத்தூண்கள் அலங்காரம் மிகுந்த மாலஸ்தான ஆபரணத்தைக் கொண்டுள்ளன. கபோதத்திற்குக் கீழே ஹம்சவரி காட்டப்பட்டுள்ளது. ஹம்சங்கள் முழு உருவங்களாக இல்லாமல் மார்பு வரை பல்லவர் மற்றும் கங்கர் கோயில்களில் உள்ளதுபோன்று தோற்றமளிக்கின்றன. இக்கோயில் விமானம் பராந்தகசோழனின் கோயில்களில் இருப்பதுபோன்று நீண்ட அர்த்தமண்டபத்தையும், வடக்கிலும், தெற்கிலும் நுழைவாயிலில் படிகளையும் கொண்டு விளங்குகிறது. இவ்வமைப்பு கருநாடகப் பகுதியில் காண்பதற்கரியதாகும்.[39] விமானத்தின் சுவரின் பத்ரப்பகுதி உள்ளிழுக்கப்பட்டும் அதன் இருபக்கங்களிலுமுள்ள கர்ணமும், பிரதிபத்ரமும் பிதுக்கமடைந்தும் காணப்படுவது மிகச்சில கோயில்களில்தான். இவற்றைப் பிந்திய பல்லவர் கோயில்களில் காணலாம். தக்காணத்தில் பிச்சவோலு இராஜராஜேசுவரர் கோயிலில் (ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி) இவ்வமைப்பு புகுத்தப்பட்டுள்ளது.[40] இவ்வூரிலுள்ள கோளிங்கேசுவரர் கோயிலில் கோட்டங்களில் வைக்கப்பட்டுள்ள இறையுருவங்கள் சோழர் கோயில்களை நினைவுபடுத்துகின்றன. அர்த்தமண்டப வடக்குச்சுவரின் தேவகோட்டத்தில்

தேவியின் உருவம் வைக்கப்பட்டுள்ளது. பல்லவ ரதங்களில் விமானத்தின் கிரீவத்தைச் சுற்றிக் கர்ணக்கூடுகள் வைக்கப்பட்டுள்ளன. பின்னாளில் இவ்வமைப்பு மகாகூடம் மல்லிகார்ச்சுனர் கோயிலில் (681-696) இடம் பெற்றது.

**சிற்பக்கலைத் தொடர்புகள்**

பல்லவமன்னன் மகேந்திரவர்மன் ஆட்சிக்கு வந்திருந்த தருணத்திலேயே தக்காணத்தில் இறையுருவம் மென்மையான பாறைகளில் செய்விக்கப்பட்டன. தமிழகத்தில் மகேந்திரவர்மனின் இறுதிக் காலத்திலோ அல்லது முதலாம் நரம்சிம்மவர்மனின் காலத் தொடக்கத்திலோ தான் கல்லினால் இறையுருவங்கள் குடைந்தெடுக்கப்பட்டன. ஆனால் துவாரபாலகர் உருவங்கள் மகேந்திரவர்மன் காலத்திலேயே செதுக்கப் பட்டன. இக்காலகட்டத்தில் வாதாபி மலேகெட்டி சிவாலயத்தில் (கி.பி. 642) உமாசகித சிவபெருமான், கணேசர், பிரம்மா, வைகுண்டநாதர், திருவிக்கிரமர், நரசிம்மர், நடராசர், கார்த்திகேயன், காலாரி, துர்க்கை, வீணாதரசிவன், கருடாரூடர், கங்காதேவி. யக்கன், சூரியன், வித்தியாதரர்கள் போன்றோரின் சிற்பங்கள் வடிக்கப்பட்டன.[41] இதற்குமுன்பே கி.பி.550-களில் குடைந்தெடுக்கப்பட்ட ஐஹொளே இராவணபாடி குடைவரையில் நடராசர் சந்நதியும், சப்தமாதர்கள் சிற்பங்களும் வடிக்கப்பட்டுள்ளன.[42] வாதாபி குடைவரைகளில் (578) வைகுண்டநாதர், பதினாறு கரங்களுடன் சிவநடராசர், பூவராகர், கணபதி ஆகியோரின் சிற்பங்கள் வடிக்கப்பட்டன.[43] இதனைத் தொடர்ந்து பல்லவர், பாண்டியர், சோழர் கோயில்களில் சிற்பங்கள் அமைக்கப்பட்டன. இச்சிற்பங்கள் பற்றிய செய்திகள் தக்காண-தமிழகக் கலைஞர்களுக்குச் சமகாலத்தில் தெரிந்துள்ளனவாக இருக்கவேண்டும். ஏனெனில் தமிழகத்தில் கற்சிற்பங்களாக வடிக்கப்பட்டது காலந்தாழ்த்திய நிலையில் இருந்தாலும் பண்டைய இலக்கியங்களில் பல இறையுருவங்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. உதாரணமாக விஷ்ணு பற்றிய செய்திகளைப் புறநானூறு, நற்றிணை, பரிபாடல் ஆகியவற்றில் காணமுடிகிறது. சூரியன் பற்றிய செய்திகள் நற்றிணை, அகநானூறு போன்ற இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. குறுந்தொகையிலும், மணிமேகலையிலும் தேவி பற்றிய விளக்கங்கள் உள்ளன. சப்தமாதர்களைப் பற்றி சிலப்பதிகாரம் கூறுகிறது. கார்த்திகேயன் அல்லது முருகனைப்பற்றி பதிற்றுப்பத்து, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி போன்றவை தெரிவிக்கின்றன. பிரம்மாவைப் பற்றி நற்றிணையும், சிவபெருமானைப் பற்றிய செய்திகளை அகநானூறு, புறநானூறு, கலித்தொகை போன்றவையும் கூறுகின்றன.[44]

எனவே, தமிழகத்திலும் தக்காணத்திலும் இறையுருவங்கள் பற்றிச் சமகாலத்திலேயே தெரிந்துள்ளன. ஆனால் இறையுருவ அமைதிகளை (icons) உருவாக்குவதில் காலத்திற்கேற்பவும், அவை அமைகின்ற இடங்களுக்கேற்பவும், அவ்விடங்களில் அவ்வப்போது நிலவிவந்த சமயக்கருத்துக்களின் அடிப்படையிலும் வேறுபாடுகள் விளங்கிவந்துள்ளன. அந்த வேறுபாடுகளே ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப்

பரவியிருக்கின்றது. அதுவே இங்கு சிற்பக்கலையில் ஏற்பட்ட பரிமாற்றமாகக் கொள்ளப்படுகிறது.

தக்காணத்திலும் தமிழகத்திலும் ஏறக்குறைய சமகாலத்தில் துவாரபாலகர்கள் (வாயிற்காப்போர்) சிற்பங்கள் வடிக்கப்பட்டன. மகேந்திரவர்மனது குடைவரைகளில் சீயமங்கலத்தில் கொம்புகளுடன்கூடிய துவாரபாலகர் உருவம் உள்ளது. இதனை ஆயுதபுருஷர் (அஸ்திரதேவர்) உருவமென்பர். இவ்வமைப்புமுறை பல்லவர்க்கு மட்டும் உரியதல்ல. இது இவர்களது சமகாலச் சாளுக்கியர் மற்றும் விஜயவாடா பைரவகொண்டா கோயில்களிலும், பாண்டியர் குடைவரைகளிலும் காணப்படுகின்றது.[45] பாண்டியர் குடைவரைகளில் குன்றக்குடியில் இதனைக் காணலாம். இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனது படையெடுப்புக்குப்பின் கட்டப்பட்ட காவேரிப்பாக்கம் கோயிலில் தலையில் கொம்புடன்கூடிய துவாரபாலகர் உருவம் உள்ளது.[46] விஜயவாடா துவாரபாலகர் சிற்பத்தில் இடுப்பில் அணிந்துள்ள கச்சையில் மட்டுமல்லாது கையிலணிந்துள்ள ஆபரணத்திலும் சிம்மமுகம் காட்டப்பட்டுள்ளது. இதனை முற்காலச் சோழர் சிற்பங்களில் காணலாம். சோழர் சிற்பங்களில் சாளுக்கியரைவிட அதிகளவில் இக்கலைக்கூறு பயன்படுத்தப்பட்டுள்ளது.[47] சோழர்-சாளுக்கியரிடையே அத்தருணத்தில் நிலவிவந்த நெருங்கிய தொடர்பினையே இது வெளிப்படுத்துகிறது.

கொடும்பாளூர் மூவர்கோயிலில் உள்ள நந்தி கழுத்தில் மணிகளாலான சங்கிலி அணிந்துள்ளது (கி.பி. 880). இது சாளுக்கியத் தொடர்பின் தாக்கமாகும். தக்காணத்தில் மகாகூடம் சங்கமேசுவரர் கோயிலில் (சாளுக்கியர், 660-675) இயற்கையாக அமர்ந்துள்ள நந்திசிற்பத்தின் கழுத்தில் மணிமாலை உள்ளது.[48] பல்லவர் குடைவரைகளில் இராஜசிம்மன் ஆட்சிக்கு வரும்வரை கணபதி உருவங்கள் காணப்படவில்லை. சிலவற்றில் பிற்காலத்தில் வைக்கப்பட்டுள்ளது. ஆனால் பாண்டியர் சைவக் குடைவரைகளில் பெரும்பாலானவற்றில் கணபதியின் உருவம் வைக்கப்பட்டுள்ளது. நரசிம்மவர்மனின் படைத்தலைவர் வாதாபியிலிருந்து கணபதிசிற்பம் எடுத்து வந்ததாகக் கூறப்படுகிறது. வாதாபி குடைவரை எண் ஒன்றில் (578) நடராசர் சிற்பத்தொகுதியில் நின்ற நிலையிலான கணபதி உருவம் உள்ளது.[49] தேவகோட்டத்தில் கணபதியின் உருவம் பந்ததந்திரபாது சிவன்கோயிலில் (சாளுக்கியர், 635-642) உள்ளது. நான்கு கரங்களுடன் வலம்புரியாக இச்சிற்பம் காணப்படுகிறது.[50]

திருப்பரங்குன்றம் பாண்டியரது குடைவரைச் சுவரில் நந்திதேவர் முழவு வாசிக்க சிவபெருமான் சதுரதாண்டவமாடும் காட்சி சித்தரிக்கப்பட்டு உள்ளது. பார்வதி இதைப் பார்த்து ரசிக்கின்றார். சிவபெருமானின் கையில் நந்திக்கொடி உள்ளது. தமிழகத்தில் உள்ள இவ்வகைச் சிற்பம் இது ஒன்றுதான். பளிச்சென்று பார்த்தவுடன் இதனை ஒத்திருப்பது. இதற்குச் சற்றுக் காலத்தால் முந்திய, பட்டதக்கல் விருபாக்சர் கோயில் (745) தாண்டவமூர்த்தி சிற்பமாகும்.[51] இதே விருபாக்சர் கோயிலில் இலிங்கோத்பவர் சிற்பமும், இங்குள்ள காசிவிசுவநாதர் கோயிலில்

சோமாசுகந்தர் சிற்பமும் உள்ளன. பல்லவர்களது இலிங்கோத்பவரும், சோமாசுகந்தரும் பட்டடக்கல் சென்றுள்ளனர். பட்டதக்கல் சிவநடராசர் திருப்பரங்குன்றம் வந்துள்ளார் (773).[52] அரசியல் தொடர்பின் விளைவாக கலைக்கூறுகளில் கொடுக்கல், வாங்கல் ஏற்பட்டுள்ளது. எல்லோரா குடைவரையில் எண் 11இலும் சோமாசுகந்தர் உள்ளார். நாமக்கல் நரசிம்மர் குடைவரையில் (எட்டாம் நூற்றாண்டு) வைகுண்டநாதர் இராஜலீலாசனத்தில் அமர்ந்துள்ளார்.[53] அவரைச்சுற்றி இறையுருவங்கள் உள்ளன. இதற்கு முன்னோடியாக உள்ளது வாதாபி மூன்றாவது குடைவரையில் இராஜலீலாசனத்தில் அமர்ந்துள்ள வைகுண்டநாதர் ஆவார்.[54] இவ்விருவரையும் பார்க்கும்போது, தலைக்கிரீட அமைப்பில் மட்டும் மாறுபாடு தெரிகிறது. இது அந்தந்தப் பகுதிக்கு ஏற்ப அமையும் கலைக்கூறாகும். ஆனால் கருத்து ஒன்றாக அமைந்துள்ளது.

மாமல்லபுரத்தில் மகிஷமர்த்தினி மண்டபத்தில் ஒரு சுவரில் மகிஷமர்த்தினி சிற்பத்தொகுதி அமைந்துள்ளது. நரசிம்மவர்மனின் காலத்தது எனக் கருதப்படும் இச்சிற்பத் தொகுதியில் இயக்கநிலை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. இச்சிற்பம் அப்படியே அச்சுப் போன்று பட்டதக்கல் மல்லிகார்ச்சுனர் கோயிலுக்குச் (745) சென்றுள்ளது.[55] இதிலும் சம அளவு இயக்கநிலையைக் காணமுடிகிறது. இன்னும் சொல்லப்போனால், மாமல்லபுரத்துச் சிற்பத்தொகுதியின் தொடர்ச்சியாகவே பட்டதக்கல் சிற்பத்தொகுதியைக் கூறலாம். ஏனெனில், இரண்டாவதில் அதிகமான எதிரிகள் கீழே வீழ்ந்துள்ளனர். தேவியின் சிம்மவாகனம் மகிஷனின் தொடைமீது தாக்குகிறது. எனவே, இக்காட்சி போரின் இறுதிக்கட்டமாகக் காட்டப்பட்டிருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்.

வாதாபியிலும், மாமல்லபுரத்திலும் பூவராகச் சிற்பங்கள் ஏறத்தாழ ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. இவற்றில் வாதாபிச் சிற்பம் முந்தியது. அதற்கு முந்தியது உதயகிரி போன்ற இடங்களிலுள்ள பூவராகச் சிற்பங்களாகும். இராமேசுவரத்தில் சோழர்காலக் கோயில் ஒன்றின் தெற்குத் தேவகோட்டத்தில் நின்ற நிலையிலுள்ள வராகர் சிற்பம் உள்ளது. இதுபோன்ற அமைப்புடைய சிற்பம் தமிழகத்தில் வேறு எங்கும் காணப்படவில்லை. இது வராக அம்சத்தைப் பெரிதும் போற்றிவந்த சாளுக்கியரின் தாக்கமாக இருக்கவேண்டும்.[56] சாளுக்கியப் பகுதியில் துவாரபாலகிகள் உருவங்கள் தொடக்ககாலத்தில் அமைக்கப்படவில்லை. பல்லவர் காலத்தில் மாமல்லபுரத்தில் திரௌபதி இரதத்திலும் கொடிக்கால் மண்டபத்திலும் துவாரபாலகிகளின் உருவங்கள் அமைக்கப்பட்டது. இதன்பின்பு எட்டாம் நுற்றாண்டின் மத்தியில் பச்சினகுடாவில் கட்டப்பட்ட சாளுக்கியரின் துர்க்கைக் கோயிலின் வாயிலின் இருபக்கங்களிலும் துவாரபாலகிகளின் சிற்பங்கள் வைக்கப்பட்டன.[57]

ஐஹொளெ லட்கான் கோயில் (681-696) முகமண்டபத் தூணில் சாளுக்கியரின் அரசசின்னம் செதுக்கப்பட்டுள்ளது. அதில் வராகம், சங்கு, சூரியன் மற்றும் கண்ணாடி காட்டப்பட்டுள்ளன.[58] இதுவே பிற்காலத்தில் விஜயநகர மன்னர்களின் சின்னமாகச் சில மாற்றங்களுடன்

எடுத்தாளப்பட்டுள்ளது. விஜயநகர அரசசின்னத்தைக் காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலிலும், அழகர்கோயிலில் முற்றுப்பெறாத நிலையில் உள்ள கோபுரச்சுவரிலும் காணலாம். மகாகூடம் மல்லிகார்ச்சுனர் கோயிலிலும். வாதாபி ஜம்புலிங்கேவரர் கோயிலிலும், விதானத்தில் வித்தியாதரர்கள், நாகராசர் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. பிற்கால நாயக்கர் மண்டபங்களிலும், கேரளத்துக் கோயில்களிலும் இவ்வமைப்பு நவக்கிரக மண்டலங்களாகப் பரிணமித்துள்ளது. நுளம்பர் பகுதியில் நந்திக்கோயில் என்ற இடத்தில் அமைந்துள்ள கோயிலின் சாளரத்தில் செடிகொடி-களினூடே இசைக்கலைஞர்களது சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன.[59] இதேபோன்றே மதுரை கூடலழகர்பெருமாள் கோயிலின் (விஜயநகர-நாயக்கர்) சாளரத்தில் அச்சுப் போன்று இவ்வமைப்பு காணப்படுகிறது.

## முடிவுரை

இவ்வாறு தமிழக-தக்காணப் பகுதிகளில் அவ்வப்போது ஏற்பட்ட அரசியல் மோதல்களுக்கிடையே தெளிந்த நீரூற்றுப்போலக் கலைப்பரிமாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சென்ற கலைக்கூறுகள் அங்குள்ள புவியியல், சமுதாயப் பழக்கவழக்கங்களுக்கு ஏற்ப சில மாற்றங்களுடன் வடிவமைக்கப்பட்டுள்ளன. கலைக்கூறுகளைப் பரிமாற்றம் செய்வதில் சிக்கல் இருந்ததாகத் தெரியவில்லை. எதிரியின் கலைச் சின்னங்களைப் பாதுகாப்பதில் வெற்றிவாகை சூடியவர்கள் கவனமாக இருந்துள்ளனர். தக்காணத்தில் சில இடங்களில் முதலாம் நரசிம்மவர்மனின் படையெடுப்பின்போது இடிபாடுகள் நிகழ்ந்துள்ளன என்று கூறுவதுண்டு. இருப்பினும் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஏற்பட்டுள்ள கலைக்கூறுகளின் வளர்ச்சி எவ்வகையிலும் தடைப்படவில்லை. தமிழக-தக்காணக் கலைப்பரிமாற்றங்கள் பொதுமக்களிடமும், கலைஞர்களிடமும் நிலவிவந்த வேற்றுமையற்ற ஒருமைப்பாட்டுத் தன்மையை வெளிப்படுத்துவதாகவே அமைந்துள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. K.V. Soundararajan, Early Pandya Art, in *'South Indian Studies'*, Mysore, 1990, p.629.

2. மேலது, பக்.628-629

3. பாண்டியர்களது குடைவரைகளில் ஒன்றான பிள்ளையார்பட்டி குடைவரையில் தரங்கப்போதிகை வளர்ச்சியுற்றநிலையில் காணப்படுகிறது. இக்குடைவரையின் காலத்தை இரா.நாகசாமி கூறுவதுபோல் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு (*Some Contribution of the Pandya to South Indian Art, Artibus Asiae*, XXVII, 3, 1965, p.268) என்று கொண்டால் தக்காணத்திற்கு மட்டுமல்லாது அதற்கும் முந்திய சில வடஇந்தியக் கோயில்களுக்கும் பிள்ளையார்பட்டியைத்தான் முன்மாதிரியாக ஏற்கவேண்டிவரும் எனினும் ஐ.மகாதேவன்

போன்றவர்கள் இங்குள்ள கல்வெட்டினுடைய காலத்தை கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியெனக் கூறியிருப்பதும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

4. தரங்கப்போதிகையை கன்ஹெரி 34வது குடைவரையிலும் (கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு) லோனாடு குடைவரையிலும் (கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு). ஜோஹேசுவரி குடைவரையிலும் (மும்பை) காணலாம். (Michael W. Meister, M.A. Dhaky and Krishnadeva, ed., *Encyclopaedia of Indian Temple Architecture*, North India, Delhi, 1988, pls. 164, 166, 170 and 173.

5. இலங்கைக்கும் இந்தியாவிற்கும் இடையே ஏற்படுகின்ற இந்தப் பரிமாற்றங்கள் இயல்பானவை என்றும் பொலனருவாவில் உள்ள சில சிற்பங்கள் கிருஷ்ணா பள்ளத்தாக்கில் உள்ள சில இராட்டிரகூடர் சிற்பங்களை ஒத்துள்ளன என்றும் சி.சிவராமமூர்த்தி கூறுகிறார். (*Royal Conquests and Cultural Migrations in South India and Deccan*, Calcutta, 1995, p.4).

6. மேலது, ப.4

7. உதாரணமாக, மதுரை அழகர்கோயில் கல்யாணமண்டபத்தில் ஒரு தூணில் பீமனை சிங்கம் ஒன்று பிடித்திருப்பதுபோல் சிற்பம் உள்ளது. இதே காலத்தில் பிரான்சில் இது போன்றதொரு சிற்பம் செய்யப்பட்டுள்ளது. அது மைலோ ஆப் குரோட்டோனா என்று அழைக்கப்படுகிறது. இதில் ஒரு வீரன் பயங்கர மிருகங்களால் பிடிக்கப்பட்டுள்ளான். முன்னது மகாபாரதக்கதை, பின்னது கிரேக்கத் தொன்மக்கதை. ஆனால் இவை இரண்டும் ஒரே காலத்தில் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன.

8. இவ்வகைக் கோயில்கள் சிக்கிகுடி, மகாகூடம், ஆந்திராவிலுள்ள சத்யவோலு ஆகியனவாகும்.

9. சாந்தாரவகை என்பது கருவறையைச்சுற்றி பிரதட்சணம்செய்ய அமைக்கப்படும் சுவர்க் கட்டுமானமாகும்.

10. Michael W. Meister, et.al. *Upper Dravida Desa*, pl.341.

11. மேலது. Text, p, 26

12. மேலது, *Upper Dravida Desa*, pl, 9.

13. K.R. Srinivasan, *Cave Temples of the Pallavas*, New Delhi, 1964, pp. 76-79 and 94 and pl. 14.

14. Basil Gray, ed. *The Arts of India*, Oxford, 1981, p.60.

15. C. Sivaramamurti, *op.cit.*, p.3.

16. பாண்டியநாட்டில் இதற்கு உதாரணமாக அம்பாசமுத்திரம் பகுதியில் உள்ள கல்லிடைக்குறிச்சி நாகேசுவரமுடையார் கோயில், தென்திருப்புவனம் புஷ்பவனேசுவரர் கோயில் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். (see S. Kannan, Temples of Ambasamudram Taluk-A Study of Architecture and Sculpture, Ph.D.Thesis, M.K.University, Madurai,1988, pp.113 & 132.)

17. Michael W.Meister, et.al. op cit., *Upper Dravida Desa*, pls. 464-466.

18. மேலது, *Lower Dravida Desa*, pls. 147, 187, 189, 192, 249, 253 (see also the author's book-*Ramesvaram Temple-History, Art and Architecture*, pp. 112-113).

19. மேலது, *Upper Dravida Desa*, pls. 411-413, 417 and 461.

20. M.S. Nagaraja Rao and K.V. Ramesh, A Royal Memorial to Chalukya Vikramaditya II, in *MADHU: Recent Researches in Indian Archaeology and Art History*, Delhi. 1981, pp.175-177.

21. மேலது, ப, 177.

21அ. *Upper Dravida Desa*, pl. 408.

22. மேலது, pl.463.

23. மேலது, *Lower Dravida Desa*, pl. 22.

24. மேலது, *Upper Dravida Desa*, pl. 406-407.

25. மேலது, pls.524, 533 and 534

26. மேலது, pls, 403-409 and text p.134.

27. மேலது, *Lower Dravida Desa*, pl. 32

28. மேலது, pls. 538-541.

29. மேலது, pl.39

30. பாண்டியர் கட்டுமானக் கோயில்களில் விஜயநாராயணம், கொற்கை, கண்ணனூர் போன்ற கோயில்களில் வட்ட அமைப்பு காணப்படுகிறது.

31. சோழர் கோயில்களில் எசாலம், மதகடிப்பட்டு, கீழையூர், திருக்கட்டளை, கொடும்பாளூர், புள்ளமங்கை போன்ற இடங்கள் குறிப்பிடத்தக்கவை.

32. *Upper Dravida Desa*, pls. 476, 583 and 592.

33. மேலது, 397

34. மேலது, 322 மற்றும் 331

35. மேலது, 431

36. *Lower Dravida Desa*, pl. 158

37. மேலது, 96,97

38. *Upper Dravida Desa*, pls. 576-581.

39. மேலது, 473, 475 மற்றும் Text p. 154.

40. மேலது, 524.

41. மேலது,இக்கோயிலின் காலம் சர்ச்சைக்குரியதாக உள்ளது. ஆனந்தகுமாரசாமி, இது கி.பி. 625இல் கட்டப்பட்டதென்றும், தார்த்தக்கோவ் என்பார் கி.பி. 720இல் கட்டப்பட்டதென்றும் கூறுகின்றனர். (*Upper Dravida Desa*, Text p.40, 41)

42. Susan L. Huntington, *The Art of Ancient India*, New York 1993, pl.13.12.p.284.

43. மேலது, பக், 286-289

44. மேலும் விளக்கங்களுக்குக் காண்க: K.R. Srinivasan, *Some Aspects of Religion as revealed by early Monuments and Literature of the South*, Chennai, 1960.

45. K.R. Srinivasan, in *Ancient India*, No.14, p.121.

46. C. Sivaramamurti, முன்னர் குறிப்பிட்ட நூல் ப.14, pl. IXA.

47. மேலது, ப, 14 fig. 2

48. *Encyclopaedia of Indian Temple Architecture*, North India, pl. 597.

49. Susan L. Huntington, முன்னர் குறிப்பிட்ட நூல் ப. 289.

50. *Encyclopaedia of Indian Temple Architecture*, North India, pl.678.

51. *Upper Dravida Desa*, pl.226.

52. K.V. Soundararajan, *Rock Cut Temple Styles*, Mumbai, 1998, pl. XXVII.

53. K.V. Soundararajan, *Art of South India, Tamilnadu and Kerala*, Delhi, 1978, pl.35.

54. Susan L.Huntington, முன்னர் குறிப்பிட்ட நூல், ப. 288.

55. *Upper Dravida Desa*, pl.273.

56. G. Sethuraman, *Ramesvaram Temple-History Art and Architecture*, Madurai 1997, p.174.

57. B.V. Shetti. An Early Western Chalukyan Durga Temple at Bachinagudda, in *MADHU*, Delhi, 1981. p. 186.

58. *Upper Dravida Desa*, pl. 112.

59. மேலது, 621, 624.

# 43. செய்தித்திரட்டு

## 43 : 1 பெருங்கற்படைக்காலக் கருவிகள் - கூடுவாஞ்சேரி

சென்னைக்குத் தெற்கே 40 கி.மீ. தூரத்தில் உள்ள கூடுவாஞ்சேரி என்னும் கிராமத்தில் அமைந்துள்ள மலையடிவாரத்தில் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பெருங்கற்படைக்கால நாகரிகச் சின்னங்கள் உள்ளன. அங்கு ஏற்கனவே தொல்லியல் துறையினர் அகழ்வாராய்ச்சிகள் நடத்தியுள்ளனர். நானும் பல முறை எம்பள்ளி வரலாற்றுத் துறை மாணவர்களுடன் அவ்விடத்திற்குச் சென்று முதுமக்கள் தாழி ஓடுகளை சேகரித்து வந்துள்ளேன். அண்மையில் அவ்விடத்திற்குச் சென்ற போது 4 அங்குல உயரமும், 19 அங்குல சுற்றளவும் உடைய கல்லால் ஆன சிறிய மாவரைக்கும் எந்திரம் போன்ற ஒரு கருவியைக் கண்டெடுத்தேன். இது மிகவும் நுண்ணிய வேலைப்பாடமைந்ததாக உள்ளது. இதில் தானியம் போன்ற பொருட்களையோ அல்லது மூலிகைகளையோ அங்கு வாழ்ந்த மக்கள் அரைத்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள தொல்லியல் கண்டுபிடிப்புகளில் இதுபோன்ற ஒரு கருவியை காணக் கிடைக்கவில்லை.





**D. ஜான்ஸன் வெஸ்லி**, சென்னை.

## 43 : 2 சண்டிகேசுவர் சிற்பம் - தளவானூர்

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் தளவானூரில் வடக்குபுரம் அமைந்துள்ள குளக்கரையின் தென்பகுதியில் சோழர் காலத்தைச் சார்ந்த (11ம் நூ) 2½ அடி உயரம் 1½ அடி அகலமும் கொண்ட சண்டிகேஸ்வரர் கற்சிலை காணப்படுகிறது. இடது கால் மடித்து பீடத்தில் வைத்து வலதுகால் தொங்கும் நிலையில் உள்ளது. வலது பாதத்திற்கு ஒரு சிறிய பீடம் காண்பிக்கப்பட்டுள்ளது. ஜடா மகுடத்துடன் சதுரமான முக அமைப்பைக் கொண்டு செவ்வகப் பீடத்தில் அமர்ந்துள்ளது. இரு காதுகளிலும் பத்திர குண்டலங்களும் கழுத்தில் ஆரங்களும் அழகு செய்கின்றன. வலது கை மழுவைப் பிடித்திருக்கிறது. இடது கை இடது தொடை மீது இருக்கிறது. இடதுகையின் முன்பகுதி உடைந்துள்ளது.



ஆர்.மணி, செஞ்சி.

## 43 : 3 அரிய ஐயனார் சிற்பம்

புதுக்கோட்டைப்பகுதியில் கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டளவில் ஐயனார் வழிபாடு சிறப்புற்றிருந்ததைப் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள சத்தியமங்களம் சித்துப்பட்டி, பூவாலைக்குடி, சித்தன்னவாசல், பனங்குடி சேரனூர் முதலான இடங்களில் காணப்படும் ஐயனார் சிற்பங்கள் காட்டுகின்றன. இந்த வகையில் புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டம் சேரனூர் சிவன் கோவிலுள்ள ஐயனார் சிற்பம் குறிப்பிடத்தக்க ஒன்று அதன் அடிப்பீடத்தில் முன்பகுதியில் நாயும் பக்க வாட்டில் குதிரையும் புடைப்பு உருவங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.





கரு. இராஜேந்திரன்

## அனுமன்தண்டலம் - பல்லவர்கால சிற்பங்கள்

### 43 : 4 சப்தமாதர்

அனுமன் தண்டலம், காஞ்சி மாவட்டம் உத்திரமேரூர் வட்டத்தில் உள்ளது. இப்பலகைக்கல் இவ்வூர் களத்து மேட்டுப்பகுதியில் அம்மன் கோயிலாகக் கருதி வழிபடும் கோயிலில் உள்ளது. பலகைக் கல்லின் நீளம் 54 செ.மீ. அகலம் 17 செ.மீ. கிழக்கு நோக்கிய படி உள்ளது.



புலவர் முத்து எத்திராசன், இளநகர் வீரப்பன்.

## 43 : 5 துர்க்கை

துர்க்கை சிலை இவ்வூரின் துரைசாமி கவுண்டரின் வீட்டின் பின்புறத்தில் சிறிய பாறையில் செதுக்கப்பட்டு உள்ளது. துர்க்கையின் உயரம் 43 செ.மீ, அகலம் 30 செ.மீ. எருமைத்தலை சிதைந்துள்ளது எட்டு கைகள், கைகளில் வாள், சக்கரம் சங்கு, கேடயம், நீண்ட கம்பு கொண்டுள்ளன.

வலக்கால்புறம் வீரன் ஒருவன் தன் தலையை அறுத்து நரபலிகொடுப்பதைக் காட்டுகிறது. இடக்கால் புறம் பூசை பெட்டியுடன் ஒரு பக்தன் மண்டியிட்டபடி உள்ளான். இச்சிற்பம் பல்லவர் காலத்தை நினைவூட்டுகிறது.



புலவர் முத்துளத்திராசன்
ப. வெங்கடேசன், வாலாசாப்பேட்டை
உதவி புரிந்தவர் **இளநகர் வீரப்பன்**

## 43 : 6 மூதேவி

செய்யாறு ஆற்றுக்குக் கிழக்கு நோக்கிய சாலையில் கிழக்கு நோக்கியபடி பல்லவர்கால மூதேவி சிற்பம் காணப்படுகிறது. இதன் உயரம் 34 செ.மீ, அகலம் 22 செ.மீ. ஆகும் மாந்தன், மாந்தி, காக்கைக்கொடி, துடைப்பம் எதுவுமின்றித் தனியொரு வடிவமாக உள்ளது இதன் சிறப்பு.



## 43 : 7 மூதேவி

அனுமன் தண்டலத்திலிருந்து இளநகர் செல்லும் சாலை ஓரத்தில் கிழக்கு நோக்கியபடி மற்றொரு பல்லவர் கால மூதேவி சிற்பம் உள்ளது. வலப்புறம் மாந்தன் இடப்புறம் மாந்தி உள்ளனர். காக்கைக்கொடி சிதைந்துள்ளது. தேவியின் இடப்பக்கக்கையின் கீழ் பெண் ஒருத்தி காணப்படுகிறாள். இதன் உயரம் 37 செ.மீ, அகலம் 22 செ.மீ. ஆகும் இச்சிற்பம் முன்னர் கண்ட சிற்பத்தை விட காலத்தால் பிற்பட்டது எனலாம்.



புலவர் முத்துளத்திராசன், உதவி திருவீரப்பன் (இளநகர்)

## 43 : 8 வெள்ளாள குண்டம் வீரக்கல்

சேலம் மாவட்டம், வெள்ளாள குண்டம் ஊர் மத்தியில் உள்ளது. இதன் காலம் 17, 18 ஆம் நூற்றாண்டு. கல்வெட்டில் முதலில் தமிழ் ஆண்டு வைகாசி என்பது போல் ஆரம்பமாக உள்ளது. பின்வரும் எழுத்துக்கள் சிதைந்து உள்ளது. கடைசி இரண்டு வரியில் சிவன் மூப்பன் புலியும் குதிரையும் குத்தினது என்று தெளிவாக உள்ளது.



வெ. இராஜு, ஓவியர், கரூர்.

## தீர்த்தங்கரர் சிற்பங்கள்

### 43 : 9 நாகவேடு

வேலூர் மாவட்டம், அரக்கோணத்திற்குக் தென்மேற்கே சுமார் 10 கிலோமீட்டர் தொலைவில் (அரக்கோணம் - ஒச்சேரி சாலையில்) நாகவேடு என்னும் ஊரில் உள்ள அகஸ்தீஸ்வரர் ஆலயத்தின் உள்பிரகாரத்தில் சுவர் ஓரமாக ஒரு சமண தீர்த்தங்கரரின் சிற்பம் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. தீர்த்தங்கரர் முக்குடையின்கீழ் அமர்ந்தவண்ணம் தியானநிலையில் காணப்படுகிறார். முகம், கழுத்து, மார்பு, கை ஆகியவை அழகாக வடிக்கப்பட்டுள்ளன. காதுகள் நீண்டும், தலைமுடி சுருள்சுருளாகவும் உள்ளன. தோள்பட்டைக்கு மேல் அரைநீள்வட்டத்தில் பிரபாவளி காட்டப்பட்டுள்ளது. தீர்த்தங்கரரைச் சுற்றிலும் கொடி மற்றும் மலர்த் தோரணங்களும், வலதுபக்க கொடியில் சிறிய குரங்கு ஒன்று தொங்கிக்கொண்டிருப்பது போன்றும் காணப்படுகின்றன. சாமரம் வீசுவோர் இருபக்கங்களிலும் திரிபங்க நிலையில் நின்று கொண்டுள்ளனர். தீர்த்தங்கரருக்கு அருகே சிறிய குரங்கு சிற்பம் காட்டப்பட்டுள்ளதால் இச்சிற்பமானது நான்காவது தீர்த்தங்கரரான அபிநந்தநாத சிற்பமாக இருக்கலாம் எனக் கருதலாம். கலையம்சத்தை வைத்து பார்க்கும்போது இச்சிற்பமானது கி.பி 9-ஆம் நூற்றாண்டைச் சேர்த்ததாகலாம்.



**கி. குமார்,** சென்னை.

## 43 : 10 மாகாணிப்பட்டு

வேலூர் மாவட்டம் அரக்கோணம் வட்டத்தில், காவேரிப்பாக்கத்திற்கு வடக்கே சுமார் ஆறு கிலோ மீட்டர் தொலைவில் மாகாணிப்பட்டு என்னும் ஊரிலுள்ள கரியமாணிக்கப்பெருமாள் கோயிலுக்குத் தெற்கே வயல்வெளியில் மகாவீரர் சிற்பம் சிறிது மண்ணில் புதைந்த நிலையில் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் உயரம் 85 செ.மீ அகலம் 65 செ.மீ ஆகும். பீடம் முழுவதும் மண்ணில் புதைந்துள்ளது. மகாவீரர் பரந்த முகத்தினையும் அகன்ற மார்பினையும் பெற்று யோகநிலையில் அமர்ந்த வண்ணம் காட்சியளிக்கிறார். தலைக்குப் பின்னால் பிரபையும் அதற்குமேல் முக்குடையின் உச்சியில் ஞானத்தைக் குறிக்கும் தீச்சுவாலையும் காணப்படுகின்றன. தலைமுடி சுருள்சுருளாகவும், காதுகள் நீண்டும் தோற்றமளிக்கிறது. கழுத்தில் தசை மடிப்புகள் காணப்படுகின்றன. மார்பின் வலது புறத்தில் சிறிய ஸ்ரீவத்சம் (திருமறு) பொறிக்கப்பட்டுள்ளது. கண், வாய், மற்றும் மூக்கு பகுதிகள் சிதைந்து காணப்படுகின்றன. இவருடைய இரு பக்கங்களிலும் இரண்டு இயக்கர்கள் சாமரம் வீசிக்கொண்டுள்ளனர். இவர்களின் தலையில் கிரீட மகுடம் காணப்படுகிறது. இம்மகாவீரரின் சிற்பம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.



**கி.** குமார், சென்னை.

## 43 : 11 கிருஷ்ணகவுண்டனூர்

இவ்வூரின் தெற்குப் பகுதியில் கொல்லை நிலப்பகுதியில் உடைந்த நிலையில் சமண தீர்த்தங்கரரின் சிற்பம் ஒன்று மண்ணில் புதைந்து காணப்படுகிறது. இச்சிற்பத்திற்கு அருகே கட்டிட இடிபாடுகளும், பெரிய பெரிய பாறைகளும் உடைந்து காணப்படுவதால் இங்கு சமணர்கோயில் இருந்திருக்கலாம் எனக் கருதலாம்.

இத்தீர்த்தங்கரர் சிற்பத்தின் தலைக்கு மேலுள்ள பகுதியும், கை மற்றும் கால் பாகங்களும் உடைக்கப்பட்டுள்ளன. முகம் முற்றிலும் சிதைக்கப்பட்டுள்ளது. தலையில் முத்துக்கள் கோர்க்கப்பட்டது போன்ற சுருள் சுருளான முடியமைப்பு காணப்படுகிறது. இவர் பரந்து விரிந்த மார்பினையும் பருத்துத் திரண்ட தோள்களையும் பெற்று தவக்கோலத்தில் காட்சியளிக்கிறார். தலைக்குப் பின்னால் வேலைப்பாடற்ற சிறிய பிரபை காணப்படுகிறது. இச்சிற்பமானது கி.பி.10-ஆம் நூற்றாண்டு கலையமைப்பை பெற்றுள்ளது. இது ஆதிநாதரின் சிற்பமாக இருக்கலாம் எனக் கருதலாம்.



**கி. குமார், சென்னை.**

## 43 : 12 சுந்தரம்பள்ளி

வேலூர் மாவட்டம், திருப்பத்தூர் வட்டத்தில், திருப்பத்தூருக்கு தென்மேற்கே சுமார் இருபது கிலோ மீட்டர் தொலைவில் தருமபுரி மாவட்ட எல்லையில் சுந்தரம்பள்ளி என்ற ஊரில் சுந்தரசோழனது நினைவைப் போற்றும் வகையில் சுந்தர சோழப்பள்ளி என்ற பெயரில் சமணக் கோயில் கட்டப்பட்டு அதனருகில் சமணர் குடியிருப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. சோழர் காலத்தில் சிறப்புற்றிருந்த சமணம் பிற்காலத்தில் மறைய ஆரம்பித்தது. ஆகவே, சுந்தரசோழப்பள்ளி என்றழைக்கப்பட்ட இவ்வூரின் பெயரும் சுருக்கமாக சுந்தரம்பள்ளி என மாற்றப்பட்டிருக்கலாம். தற்பொழுதும் பல சமணர் குடும்பங்கள் இவ்வூரில் வாழ்ந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வூருக்கு, வடபகுதியில் புலியாண்ட நயினார் என்பவரது நிலத்தில் பச்சைநிறக் கல்லினால் (Basalt) செய்யப்பட்ட தீர்த்தங்கரரின் புடைப்புச் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. இச்சிற்பத்திற்கு அருகே பல பாறைகளும், செங்கற் துண்டுகளும், சிதைந்து காணப்படுவதால் இங்கு சமணர் கோயில் இருந்திருக்க வேண்டும் எனலாம். இச்சிற்பமானது மிகுந்த வேலைப்பாடுகளுடன் அழகுற வடிக்கப்பட்டுள்ளது. இப்பெருமான் கருணை வடிவான முகப்பொலிவையும், தசைப்பிடிப்பற்ற உடலமைப்பையும் பெற்று தவக்கோலத்தில் காட்சியளிக்கிறார். இவருக்கு இருமருங்கிலும் சாமரம் வீசுவோர் தலையில் கிரீட மகுடம் அணிந்து காணப்படுகின்றனர். தீர்த்தங்கரரின் தலைக்குப் பின்னால் கலையம்சம் பொருந்திய அரை நீள்வட்ட பிரபாவளியும், அதற்குமேல் முக்குடையும், கொடி மற்றும் மலர் தோரணங்களும் திறம்படத் தீட்டப்பட்டுள்ளன. இந்த அரிய கலைச்செல்வம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.



கி. குமார், சென்னை.

## 43 : 13 சமணத்தீர்த்தங்கரர் சிலை

விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், செஞ்சியிலிருந்து தென் கிழக்கில் சுமார் 16 கி.மீ. தூரத்தில் உள்ள எண்ணாயிரம் என்னும் மேல் கூடலூரில் உள்ள குன்றின் மேல் அமைந்த பார்சுவநாதரை வணங்க படிகளில் ஏறிச்செல்லும் வழியில் இடதுபுறம் இயற்கையாக அமைந்த தற்போது தூர்ந்து போய் முட்புதர் மண்டிக்கிடக்கும் சுனைப்பாறையின் மீது இரண்டாக உடைந்த நிலையில் சார்த்தி வைத்தபடி சுமார் 1.25 செ.மீ உயரமும் 0.75 செ.மீ. அகலமும் 0.19 செ.மீ. கனமும் கொண்ட அமர்ந்திருக்கும் சிதைந்த நிலை தீர்த்தங்கரர் சிலை கழுத்துப் பகுதியில் உடைந்த நிலையில் காணப்படுகிறது. தீர்த்தங்கரரை குறிக்கும் அடையாள இலாஞ்சனை இல்லாத

நிலையில் இதனைப் பொதுவாக மகாவீரர் சிலை எனக் கொள்ளலாம். இதன் காலம் சுமார் கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம்.



பெ. லெனின், புதுச்சேரி.

## போளூர் வட்டத்தில் கி.பி. 15 -ஆம் நூற்றாண்டுச் சிற்பங்கள்

### 43 : 14 துர்க்கை

திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டத்தில் போளூரிலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் நெடுஞ்சாலையின் தென் பகுதியில் தச்சாம்பாடி என்ற ஊர் அமைந்துள்ளது. தச்சாம்பாடிக்கு மேற்கில் ஒரு பாசன ஏரியின் வட கோடியில் ஒரு கல்லாங்குத்துக் காணப்படுகிறது. இங்கு ஒரு பாறையில் புடைப்பாக ஒரு துர்க்கை சிலை அழகாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.

துர்க்கை ஒரு எருமைத் தலை மீது சமபங்க நிலையில் நிற்கிறது. இந்த எருமைத் தலைக்கு இடது பக்கத்தில் துர்க்கையின் வாகனம் சிங்கம் அமர்ந்திருக்கிறது. சிலையின் சிலபகுதிகள் சிதைந்துள்ளன. துர்க்கைக்கு எட்டுக் கைகள் இருக்கின்றன. வலது பக்க கைகளில் சக்கரமும் அம்பும் பட்டாக் கத்தியும் அபய முத்திரையும் இடது கைகளில் சங்கும் வில்லும் கேடயமும் கட்டிய வலம்பித முத்திரையும் காணப்படுகின்றன. சக்கரமும் சங்கும் கர்திரி முத்திரையில் இருக்க மற்ற கைகளில் ஆயுதங்கள் முஸ்தி

முத்திரையில் உள்ளன. மார்பில் சன்ன வீரமும் கழுத்தில் பொன் மாலைகளும் காணப்படுகின்றன. துர்க்கை சிலையைச் சுற்றிலும் திருவாசி கோட்டுருவமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றது. துர்க்கை சிலையின் உயரம் 105சென்டி மீட்டர். அகலம் 70 சென்டி மீட்டர் ஆகும்.

## 43 : 15 வீரக்கல்

தச்சாம்பாடிக்கு வடக்கில் 3 கிலோ மீட்டர் தொலைவில் குளக்கரைவாடி (போளூர் வட்டம்) என்ற ஊர் அமைந்திருக்கிறது. குளக்கரைவாடியின் பாசன ஏரியின் கரையில் ஒரு வீரக்கல் காணப்படுகிறது.

வீரன் இடது கையில் வில்லை ஏந்தி வலது கையால் அம்பை வில்லில் தொடுத்து இடது பக்கத்தில் விரைகிறான். தலையின் தலைமுடியைத் துணியால் உருண்டையாகக் கட்டி துணியின் முனை தலையின் பின் பக்கத்தில் விரிந்து காணப்படுகிறது. வீரனுடைய முகம் வட்டமானது. முகத்தில் மீசை நுட்பமாகக் காட்டப்பட்டுள்ளது. வீரத்தோற்றத்தை முகம் காட்டுகிறது. வீரனுடைய முதுகில் அம்பறாதூணி தொங்குகிறது. அது அலங்கரிக்கப்பட்டுள்ளது. இடை ஆடை அழகுடன் செதுக்கப்பட்டிருக்கிறது. இடையிலிருந்து ஒரு சுங்கு வீதம் ஒவ்வொரு தொடையிலும் தொங்குகிறது. இடை ஆடையைக் கட்டிய துணியின் குஞ்சங்கள் நெளிவாகத் தொங்குகின்றன. கைகளில் வளையல்களும் கால்களில் கழல்களும் காணக்கிடக்கின்றன. சிலையின் உயரம் பூமிக்கு மேல் 90சென்டி மீட்டர். அகலம் 85 சென்டி மீட்டர் ஆகும்.

## 43 : 16 கணேசர்

வேலூர் மாவட்டத்தைச் சேர்ந்த குடியாத்தம் வட்டத்தில் உள்ள பேர்ணாம்பட்டு என்ற ஊரிலிருந்து ஆம்பூருக்குச் செல்லும் பெருவழியில் பக்கலபள்ளி என்றொரு ஊர் உள்ளது. பக்கலபள்ளியின் ஊர் நடுவில் சிதைந்த கோயிலில் இரண்டு கற்சிலைகள் காணப்படுகின்றன. ஒன்று கணேசர், அடுத்தது சூரியன் சிற்பபாணியின் அடிப்படையில் இந்த இரண்டுக் கற்சிலைகளும் கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை எனக்கருத இடமுள்ளது.

## 43 : 17 நடுகல்

குடியாத்தம் நகரிலிருந்து வடமேற்கில் 4 கிலோமீட்டர் தொலைவில் பேராம்பட்டு என்ற ஊர் இருக்கிறது. இவ்வூரின் சாலை ஓரத்தில் விஜயநகர பேரரசு காலத்து நடுகல் காணப்படுகிறது. வீரன் வலது கையில் வாளைத் தரையில் ஊன்றியும் நெடிய வில்லை இடது கையில் தாங்கியுள்ளவாறும் செதுக்கப்பட்டிருக்கிறது. வீரனின் மனைவி இடது கையில் சாமரத்தைத் தன்னுடைய கணவரை நோக்கி பற்றியுள்ளார். நடுகல்லின் உயரம் 2 அடி, அகலம் 1 அடி 6 அங்குலம்.



## 43 : 18 காவேரிப்பாக்கம் தாய்த்தெய்வ சுடுமண் சிற்பம்

வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், காவேரிப்பாக்கம் அரசு மேனிலைப்பள்ளி விளையாட்டுத் திடலில் கண்டெடுக்கப்பட்டது. இதன் காலம் 14 ஆம் நூற்றாண்டு.

இச்சிற்பம் 13 செ.மீ உயரம், 8.5 செ.மீ அகலம், 3 செ.மீ குறுக்களவு கொண்ட கனமுக்கோண வடிவில் அமைந்துள்ளது. தாயும் சேயும் இணைந்த இச்சுடுமண் சிற்பம் புடைப்புச் சிற்பமாக வடிவமைக்கப்பட்டு உள்ளது. இச்சிற்பத்தில் அகன்ற நெற்றி, அமைதி தவழும் எடுப்பான முகம், தலையில் கொண்டையும், காதுகளில் கம்மலும், கழுத்தில் மூன்று ஆரங்களும் அணிச்செய்கின்றன. மார்பில் பூணூலும் தோள்களில் வளையும், கைகளில் வளையலும், கால்களில் சிலம்பும் அழகாகக் காட்சியளிக்கின்றன. வனப்பான ஆடையும், ஆடையின் கட்டும் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளன.



தாயானவள் தனது வலது தொடையில் குழந்தையை அமர்த்தி, வலது கையால் மார்பில் அணைத்துப் பிடித்துள்ளாள். இடது கை, இடது

தொடையின் மேல் வைத்து 'உத்குடிகாசன' நிலையில் அமர்ந்துள்ளாள். இச்சிற்பம் செங்குத்தாக வைப்பதற்கு ஏற்றவாறு அடிபரப்பு வடிவமைக்கப்பட்டுள்ளது.

**ப. வெங்கடேசன்,** காவேரிப்பாக்கம்.

## 43 : 19 அனுமந்தண்டலம் பல்லவர் கால நடுகல்

காஞ்சிபுரம் மாவட்டம், உத்திரமேரூர் வட்டம், அனுமந்தண்டலம் என்னும் ஊரில் விநாயகர் கோயிலுக்கும் கூத்து மேடைக்கும் அருகில், 170 செ.மீ நீளமும், 83 செ.மீ அகலமும் கொண்ட கற்பலகையிலுள்ள நடுகல். இது எட்டாம் நூற்றாண்டு பல்லவர் காலத்தது.

வீரனின் வலது கையில் கேடயம், இடது கையில் வளைந்த வாளும் உள்ளன. தலையில் கொண்டையும், காதுகள் அகன்றும், வட்ட வடிவமான முகமும் கொண்டு வீரன் காட்சியளிக்கிறான். கழுத்தில் மணியாரமும், தோள்களில் வளையும் கால்களில் வீரக்கழலும், இடுப்பில் அரையாடையும் குறுவாளும் அழகாகக் காட்சியளிக்கின்றன. வீரனின் கைகளில் செவ்வக வடிவ வளைந்த கேடயமும், வளைந்த வாளும் காணப்படுகின்றன. கல்வெட்டு, வீரனின் மேல்பகுதியிலுள்ளது. கல்வெட்டு மிகவும் பொரிந்து விட்டது.

**கல்வெட்டு :**

1. ஸ்ரீ கோவிசைய ..........
2. .......... மற் .......... ண்டு



ப.வெங்கடேசன், காவேரிப்பாக்கம்
முத்து எத்திராசன், சென்னை

## 43 : 20 சுடுமண் பொம்மைத் தலை

புதுச்சேரி மாநிலம், மண்ணாடிப்பட்டு கொம்யூன், மதகடிப்பட்டு, சுமார் 12-13 ஆம் நூற்றாண்டு, 14 செ.மீ., உயரம், 13 செ.மீ. அகலம், 10 செ.மீ. குறுக்களவுள்ள இவ்வுருவம் சிதைந்த நிலையிலுள்ளது.

தலைவன் ஒருவனின் சுடுமண்உருவ பொம்மையின் தலைப்பகுதியாக இருக்க வேண்டும். கழுத்திலிருந்து தலைமுடிவரை துளை உள்ளதால் சுடுமண் பொம்மையின் தொழில் நுட்பம் நன்கு விளங்குகிறது. கலை நயத்துடன் கூடிய தலைமுடி அமைப்பு இடதுபுறத்தில் சிறப்புடன் காணப்படுகிறது வலது புறத்தில் இம்முடியமைப்பு சிதைந்து காணப்படுகிறது. புருவங்கள் உயர்ந்து கீரல் கோட்டில் காட்டப்பட்டுள்ளன. கண்களும் அவ்வாறே பாவை இல்லாமல் கோட்டுருவத்தில் காதுவரை நீட்டிக் காட்டப்பட்டுள்ளன. காதுகள் நீண்டவைகளாக உள்ளன. எடுப்பான நாசி சிதைந்த நிலையில் உள்ளது. இது புன்முருவல் பூத்த உதடுகள் கொண்ட அழகிய உருவமாகும்.



பெ. லெனின், புதுச்சேரி.

# 44. புதிய வெளியீடுகள்

புலவர் செ. இராசு, **கொங்கு நாடும் சமணமும், கொங்கு ஆய்வகம்,** 64.5 டி.ஜி.பி.காம்பளக்ஸ். புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில், ஈரோடு 638011. பக்.360, விலை. ரூ.150/-

தொல்பொருள் வரலாற்றுத் துறையில் குறிப்பாகக் கொங்கு நாடு தொடர்பாக அரைநூற்றாண்டிற்கு மேலாக உழைத்துவரும் முனைவர் புலவர் செ.இராசு அவர்கள் கொங்கு நாட்டின் பல்வேறு ஊர்கள், கோயில்கள், குலங்கள் பற்றிய வரலாற்று நூல்களை எழுதி வட்டார, நாட்டுவரலாற்றுக்குச் சிறந்த பணியாற்றி வருகிறார்கள். அவர் கால் நூற்றாண்டுக்கும் மேலாக உழைத்து உருவாக்கி முனைவர் பட்டமும் பெற்ற ஆய்வேடு இப்போது நூலாக வந்துள்ளது. இதே தலைப்பில் கோவைகிழார் சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் 1953-இல் ஒரு அருமையான நூலை வெளியிட்டார். அதற்கு அடிக்குறிப்பு பின்னுரை முதலியவற்றை மறைந்த கல்வெட்டாய்வாளர் இரா.ப.கருணானந்தத்தைக் கொண்டு செய்வித்துப் பேரூர்ப்புலவர் பேரவை 2002-இல் வெளியிட்டுள்ளது.

இராசு அவர்கள் மீண்டும் களஆய்வு செய்து பல கல்வெட்டுக்களைப் புதிதாகக் கண்டுபிடித்தும் மறுவாசிப்புச் செய்தும் பிறவாறு பல செய்திகளைத் திரட்டியும் நிறைவு செய்துள்ளார். 54 கல்வெட்டுக்களின் பாடம், சில மக்கென்சி ஆவணங்கள், அறுபதுக்கும் மேற்பட்ட அரிய ஒளிப்படங்கள், நிலப்படம், கோட்டுப்படம், குடும்பக் கால்வழிப் படம் போன்றவற்றை இணைத்து இந்நூலில் கொடுத்திருப்பது ஆய்வாளர்களுக்கு விருந்தாக அமைந்துள்ளது.

நூலில் கொங்குநாடு பற்றிய வரலாறு, சமணசமயம் பற்றிய பொதுவான விளக்கங்கள் என்ற இரண்டைப்பற்றியும் முதலில் இரு இயல்கள் பேசுகின்றன. கொங்குநாட்டில் சமணம் என்ற மூன்றாவது தலைப்பில் கொங்குநாட்டில் சமணம் பரவுதல், செழித்தல், சமணர் மலைகள், கோயில்கள், உருவங்கள், தலங்கள் பற்றிய செய்திகள் விரிவாக ஆய்ந்து விளக்கப்படுகின்றன. கொங்குச் சமணர் தமிழ்ப்பணி என்ற தலைப்பில் பெருங்கதை, சிந்தாமணி, நேமிநாதம், வச்சணந்தி மாலை, நன்னூல், மயிலைநாதர் உரை, அரும்பபத உரையாசிரியர் உரை, அடியார்க்கு நல்லார் உரை, கொங்குமண்டல சதகம், கல்வியொழுக்கம் என்ற நூல்கள் கொங்கு மண்ணில் எழுந்த வரலாற்றை ஆய்ந்துரைக்கிறார். கொங்குச் சமணம் - சின்னங்களும் செய்திகளும் என்ற தலைப்பில் இயக்கர் இயக்கி வழிபாடு சல்லேகனை, அஞ்சினான் புகலிடம், மாற்றப்பட்ட சமணக் கோயில்கள், கொங்கு ஆவணங்களில் கழுவேற்றம் சமய ஒருமைப்பாடு, சமணசமயத் தாக்கம், பேரூர்ச் சமணச் செப்பேடு, சமணக் கல்வெட்டுக்கள், கல்வெட்டில் அரசர் அரசியர் பெயர்கள், மக்கென்சி ஆவணங்களில் சமணம், சமணர்களின் இன்றைய நிலை என்ற தலைப்பில் பல செய்திகளைத் தொகுத்துத் தந்துள்ளார்.

மோரியர் வருகை சமணர் வருகையைக் குறிப்பதாக ஆசிரியர் கருதுகிறார். கி.மு.300க்கு முன்பே கொங்கில் சமணம் பரவியிருந்தது. பத்திரபாகுவின் சீடர் விசாகர் அதன் பின்தான் சமணம் பரப்ப வந்தார் என்பது இராசுவின் கருத்து. குகைக் கல்வெட்டுக்கள் காலத்திற்குப் பின் கி.பி.9 ஆம் நூற்றாண்டிற்குப்பின்னர்தான் கொங்கு நாட்டுச் சமணக் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன (பக்.69) என்பதால் கொங்கு நாட்டில் பக்தி இயக்கம் செய்த சமணம் ஒழிப்பு முற்றிலும் வெற்றி பெறவில்லை என்ற இராசுவின்கருத்து கவனிக்கப்படவேண்டியது. இந்த கருத்து தமிழகத்தின் ஏனைய பகுதிகளுக்கும் பொருந்தும் என்பது முனைவர் வெ.வேதாசலம் கருத்து. கொங்கு நாட்டில் சமணம் செழித்திருந்தது. அங்கே 72 சமண ஆலயங்கள் இருந்திருக்கின்றன.

அறச்சலூர்க் கல்வெட்டுக் குறிக்கும் வண்ணக்கன் என்பது வண்ணக்க- இசை அறிஞன் என்ற பிராகிருதப் பொருளிலேயே ஆளப்பட்டிருக்க வேண்டும் என்பதை அதன் சூழலே குறிக்கிறது. எனவே நாணயப் பரிசோதகன் என்ற பொருள் பொருத்தமில்லாமல் இருக்கிறது (பக்.78). விசயமங்கலத்தில் அமைந்திருந்த கொங்குவேளிர் பற்றிய வடமொழிக் கல்வெட்டு உடைக்கப்பட்டுவிட்டது என்பது வருத்தம் தரும் செய்தியாகும்(105, 142).

சீவகசிந்தாமணி ஆசிரியர் கொங்கு நாட்டவர் என்பதற்குச் சிந்தாமணியில் காணப்படும் கன்னடச் சொற்கள் காணப்படுவதைத் துணைச்சான்றாகக் கொள்ளலாம். (பார்க்க: கி.நாச்சிமுத்து, சீவக சிந்தாமணியில் கன்னடச் சொற்கள் கட்டுரை). நேமிநாதம் வச்சணந்தி மாலை என்ற இரண்டின் ஆசிரியரைக் கொங்கு நாட்டவராகக் காட்டுவதற்கு உரிய காரணங்கள் வலுவாக இல்லை. மயிலைநாதர் கொங்கு நாட்டவர் என்பதற்கு உரிய சான்றுகளை வழங்குகிறார் ஆய்வாளர். பவணந்தியையும் அடியார்க்குநல்லாரையும் கொங்கு நாட்டவராகக் கூறும் கொங்குமண்டல சதகம் குணவீர பண்டிதரையும் மயிலைநாதரையும்அவ்வாறு கூறவில்லை. குணவீர பண்டிதர் காலத்தை ஆசிரியர் தெளிவுபடுத்தவில்லை(161). மூன்றாம் குலோத்துங்கன் (1178-1216) காலம் என்ற முன்னோர் முடிபைக் கேள்விக்குள்ளாக்குவதோடு நின்றுவிடுகிறார் ஆசிரியர். மேலும் நேமிநாதம் வீரசோழியத்திற்கு (வீரராசேந்திரன் காலம் 1063-1070)ப் பிற்பட்டது. வீரசோழியக் கருத்துக்கள் பலவற்றை நேமிநாதம் கையாள அவற்றை அப்படியே நன்னூலாரும் பின்பற்றியிருக்கிறார். விசயமங்கலம் சந்திரப்பிரபதீர்த்தங்கார் ஆலயத்தில் பவணந்தி சிலையும் சீயகங்கன் சிலையும் உள்ளன என்று ஆய்வாளர் கூறுவதற்கு (பக் 103, 176) உரிய சான்றுகள் முதலியன தந்து உறுதிப்படுத்தவேண்டும். அரும்பதவுரையாசிரியர் இளங்கோவைப் போன்றே சேரத்தமிழ் மொழியை ஆள்பவர் என்று கருதவும் இடமுண்டு (கி.நாச்சிமுத்து, சிலப்பதிகாரமும் மலைநாட்டு வழக்குகளும்). அவ்வையார் பெயரில் வழங்கும் கல்வியொழுக்கம் என்ற நூலைப் பின்னிணைப்பில் கொடுத்திருக்கலாம்.

கல்வெட்டுச் செய்திள் பற்றிய பகுப்பாய்வு, இடம்பெயர்த்த சமணர் பற்றிய ஆய்வு முதலியன இனி மேற்கொள்ளப்பெற வேண்டும். இந்நூலில் நூலடைவோடு ஒரு பொருளகராதியும் சேர்த்திருந்தால் மிகுந்த பயனுடையதாக இருந்திருக்கும். மொத்தத்தில் முனைவர் புலவர் செ.இராசு அவர்கள் இந்நூலைத் தன் வாழ்நாள் பணியாக மேற்கொண்டிருக்கிறார். அவருடைய கடும் உழைப்பு ஆராய்ச்சிப் பாங்கு நுண்மாண் நுழைபுலம் இவை எல்லாம் இந்நூலில் வெளிப்படுகின்றன. இந்நூல் வாயிலாக அவர் சமணசமய வரலாற்றிற்கும் கொங்கு நாட்டு வரலாற்றிற்கும் ஆற்றியிருக்கும் பணி மனமுவந்து பாராட்டத்தக்கதாகும். ஆயிரத்தைந்நூறு ஆண்டுகள் மறையாமல் இருந்த சமணச் சின்னங்கள் சில பதிற்றாண்டுகளில் மறைந்துள்ளதையும் சமணர்கள் சுவடின்றி மறைந்து போவதையும் இவர் சுட்டிச் செல்லுவது மனதைப் பிழிவதாக இருக்கிறது.

**கி.நாச்சிமுத்து,** திருவனந்தபுரம்.

G. சேதுராமன், **தமிழக நிகழ்கலை வரலாறு,** து.து.பதிப்பகம், மதுரை, 2004, 203 பக்கங்கள் (விலை ரூ.100/-).

தமிழகத்தில் பன்னெடுங்காலமாக நிலவி வரும் பாரம்பரியமிக்க நிகழ்த்துக்கலைகளான இசைக்கலை, நாட்டியக்கலை, நாடகக்கலை மற்றும் நாட்டுப்புறக்கலையோடு சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் உருவான திரைப்படக் கலையையும் இணைத்து இந்நூல் எழுதப்பட்டு உள்ளது. திரைப்படக்கலை மற்றும் நாட்டுப்புறக்கலை நீங்கலாக தமிழகத்தில் பிற கலைகளின் வரலாற்றையும் வளர்ச்சியையும் சங்க காலம் முதல் இருபதாம் நூற்றாண்டு வரை கல்வெட்டுகள், சிற்பங்கள், ஓவியங்கள் மற்றும் இலக்கியங்களின் வாயிலாக இந்நூல் எளிய நடையில் கோர்வையாக எடுத்துரைக்கிறது. மேலும் இக்கலைகள் தமிழகத்தில் பல்வேறு காலகட்டங்களில் நிலவிவந்த வெவ்வேறு சமூகச் சூழல்கள் எவ்வாறு தங்களின் வளர்ச்சிக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு முன்னேற்றம் பெற்றன என்பதைத் தக்க இடங்களில் உணர்த்தியுள்ளது சிறப்புடையதாகும். தமிழக வரலாற்றின் துவக்க காலத்திலும் இடைக்காலத்திலும் இசைக்கலையும் நாட்டியக்கலையும் கோயில் வழிபாட்டு முறைகளை முற்றிலும் தழுவி இருந்த நிலையினையும் ஆனால் அதேசமயம் நாடகக்கலை கோயில் வழிபாட்டு முறைகளுக்கு உட்பட்டும் அப்பாற்பட்டும் இருந்த நிலையினையும் இந்நூலாசிரியர் மிக விரிவாக திறம்பட தெளிவுபடுத்துகிறார். நாட்டுப்புற விளையாட்டுகளான மஞ்சுவிரட்டு, சேவல் மற்றும் ஆட்டுக் கிடாசண்டை, வண்டிப்பந்தயம் போன்றவற்றை நாட்டுப்புற நிகழ்கலைகளுக்குள் அடக்கியிருப்பதைத் தவிர்த்திருக்கலாம். இந்நூலாசிரியர் விளையாட்டுக்கலையும் நிகழ்த்துகலையே என்று கருதியிருக்கக்கூடும்.

**சு. கண்ணன்,** சிதம்பரம்.

மு. நளினி, இரா. கலைக்கோவன், **பெண்தெய்வ வழிபாடு தோற்றமும் வளர்ச்சியும்,** டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றுமையம், திருச்சிராப்பள்ளி, 2005, பக்.248, (விலை ரூ.120/-).

உலகம் முழுவதும் தாய்த்தெய்வ வழிபாடு முதன்மையான ஒன்றாக விளங்கி வந்துள்ளது. தமிழகம் அதற்கு விதிவிலக்கல்ல. பெண் தெய்வம் உள்ளிட்ட பல்வேறு கட்டுரைகளின் தொகுப்பாகும் இந்நூல். பெண்தெய்வ வழிபாடு பற்றிய கட்டுரை கொற்றவை, உமை, சப்தகன்னியர், காளி ஆகியோரின் வழிபாடு எவ்வெப்போது தமிழகத்தில் தோன்றி வளர்ந்தது என்பதையும், சிலப்பதிகாரத்தில் பெண்தெய்வ வழிபாடு பற்றிவரும் சிந்தனைத் தூண்டுதல்களையும், கல்வெட்டுக்களில் மற்றும் சிற்பங்களின் மூலம் அறியப்படும் பெண்தெய்வ வழிபாட்டுத் தொடக்கம் மற்றும் வளர்ச்சி பற்றியும் விளக்கமாகக் கூறுகிறது. இரண்டாவது கட்டுரை பல்லவர், பாண்டியர், முத்தரையர் காலத்துப்பெண் தெய்வச்சிற்பங்களை அடையாளங் காட்டுவதாக அமைந்துள்ளது.

இந்நூலின் மூன்றாவது கட்டுரை கல்வெட்டறிக்கைகள் காலந்தோறும் எவ்வாறு வடிவமைக்கப்பட்டு வளர்ச்சியுற்றன என்பது பற்றியும், தொடக்ககாலப் பதிப்பாசிரியர்களின் பெயர்களும், பதிப்பிப்பதில் அவர்களுக்கிருந்த சிக்கல்கள் பற்றியும், பதிப்பித்ததன் பயன்களும், அதில்காணப்படும் சில குறைபாடுகள் பற்றியும் கூறுகிறது. நான்காவது கட்டுரை முன்னதைத் தழுவியே கல்வெட்டுகளைத் தேடல், அவற்றில் தெளிந்த அறிவு பெறுதல், வகைப்படுத்துதல், பதிப்பித்தல் ஆகியவற்றில் ஏற்படும் சிக்கல்கள், அதற்கான தீர்வுகள் பற்றி அனுபவபூர்வமாக விளக்குகிறது.

ஐந்தாவது கட்டுரை இந்நூல் ஆசிரியர்களின் ஆழ்ந்த அனுபவத்தின் விளைவாகத் தோன்றிய் கோயிற்கலை ஆய்வுநெறிமுறைகளை விவரிக்கின்றது. தலைப்பறை, மத்தளம், சிரட்டைக்கின்னரி என்னும் இசைக்கருவிகள் பற்றி கல்வெட்டுகள் மற்றும் சிற்பச்சான்றுகள் மூலம் அறியப்படும் செய்திகளை ஆறாவது கட்டுரை தாங்கியுள்ளது.

ஏழாவது கட்டுரை ஒரே கோயிலை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு எவ்வாறு ஆராயலாம் என்பதற்கு ஒரு அடிப்படையாக உருத்திரகோமீசுவரர் கோயில் பற்றி ஆய்கிறது. இதில் ஆசிரியர்கள் கண்டுபிடித்த பதினைந்து கல்வெட்டுகளும் இணைக்கப்பட்டுள்ளன. இதனைப் போன்றதே அரும்பாவூர்க் கோயில் பற்றிய கட்டுரை. இறுதியாக அமைந்துள்ள இரண்டுகட்டுரைகளும் பிள்ளையார் வழிபாட்டின் தோற்றம், வளர்ச்சி மற்றும் தொன்மைச்சிற்பங்கள் பற்றியதாகும்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள அனைத்துக் கட்டுரைகளும் ஆசிரியர்களின் களப்பணியின் விளைவால் உருவானவையாகும். அடுத்துவரும் ஆய்வாளர்களுக்கு உதவும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

**கு.சேதுராமன், மதுரை.**

இரா. கலைக்கோவன், **சோழர் கால ஆடற்கலை**, அலமு பதிப்பகம், சென்னை, 2003, பக். 288 (விலை ரூ.*100/-*).

தமிழகத்தில் தொன்று தொட்டு ஆடற்கலை வளர்ந்து வருகின்றது. 'சோழர் கால ஆடற்கலை' என்னும் இந்நூல் கி.பி. 846 முதல் 1070 வரையான

சோழர்காலத்து ஆடற்கலையைக் களமாகக் கொண்டு விளங்குகிறது. இந்நூலின் முன்னுரையில் ஆசிரியர் சங்ககாலம் தொடங்கி பிற்காலச் சோழர்கால ஆட்சி வரையான ஆடல், பாடல், இசை பற்றிய வரலாற்றைச் சுருக்கமாக, தெளிவாகக் கொடுத்துள்ளார். இரண்டாவது இயலில் ஆடல் பற்றிய இலக்கியச்செய்திகள், ஆடற்கல்வி பயிற்றுவிக்கப்பட்ட இடங்கள், பயிற்றுமுறை, நாட்டியப் பெண்களின் குடியிருப்புகள் பற்றி ஏராளமான இலக்கிய, கல்வெட்டு, சிற்பச்சான்றுகள் மூலம் ஆசிரியர் தமது கருத்துக்களை நிலைநிறுத்தியுள்ளார். ஆடல் வகைகளும், கரணச் சிற்பங்களும், அவற்றிற்கும் பரதரின் நாட்டிய சாத்திரக்கருத்துக்களுக்கிடையிலான ஒப்புமையும் விளக்கப்பட்டுள்ளது. மூன்றாவது இயல் ஆடல், மற்றும் இசைக்கலைஞர்களை வகைப்படுத்தியும், அக்காலத்தில் வழக்கிலிருந்த பல்வேறு இசைக்கருவிகள் பற்றியும், நாட்டியம் மற்றும் இசைவல்லுநர்களுக்கு அளிக்கப்பட்ட ஊதியங்கள் மற்றும் கொடைகள் பற்றியும் கூறுகிறது. சங்ககாலம் முதல் சோழர்காலம் முடிய ஆடல் அரங்கங்கள் எவ்வாறு அமைந்திருந்தன, அவற்றிற்கு எவ்வெக்காலத்தில் என்னென்ன பெயர்கள் விளங்கிவந்தன, அவற்றை அமைக்கக் காரணமாயிருந்தவர்கள் யார் என்பன நான்காவது இயலில் விவரிக்கப்பட்டுள்ளது.

ஐந்தாவது இயல், சமுதாய நோக்கில் ஆடற்கலைஞர்களின் வாழ்க்கை முறையைச் சித்தரிக்கின்றது. அவர்கள் பெற்றிருந்த பல்வேறு மரபுப் பெயர்கள், மணவாழ்க்கை பணிச்சூழல் போன்றவை விளக்கப் பெற்றுள்ளன. இவ்வியலைப் படிப்போர் அக்காலக்கலைஞர்கள் சமுதாயத்திலும், அரசவையிலும் பெற்றிருந்த உயர்ந்தநிலையை உணரமுடியும். ஆறாவது இயல் நூலாசிரியரின் முடிவான கருத்துக்களை இயல்வாரியாகக் குறிப்பிடுகிறது. இவ்வாய்வின் போது நூலாசிரியரால் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகளில் பத்து மட்டும் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன.

இந்நூல் பல புதிய கண்டுபிடிப்புகளையும், முன்னர் கூறப்பட்ட செய்திகளை மாற்றும் அறிவியல் சார்ந்த கருத்தமைவுகளையும், கொண்டுள்ளது. ஆசிரியரின் ஆழமான ஆய்வுத்திறனை வெளிக்காட்டும் இந்நூல் மேல்வரும் ஆய்வுகளுக்கு அடித்தளம் அமைத்துள்ளது.

**கு.சேதுராமன்,** மதுரை.

எஸ்.எஸ்.கமால், **இராமர் செய்த கோயில் இராமேஸ்வரம்,** சர்மிளா பதிப்பகம், இராமநாதபுரம், 2004, 211 பக்கங்கள், (ரூ.85/-).

இராமேஸ்வரம் திருக்கோயில் பற்றிய முழுமையான தொகுப்பு நூல். சேதுநாட்டின் தொன்மைச் சிறப்பினையும் வரலாற்றுப் பெருமையினையும் தொடர்ந்து வெளிக்கொணரும் இந்நூல் ஆசிரியரின் மற்றுமொரு படைப்பு. புராணம், இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு எனப் பல்வேறு தரவுகளை மையமாகக் கொண்டு இப் புனிதத்தலத்தின் சிறப்புகள் எளிய நடையில் காட்டப்பட்டுள்ளன. தொன்மையான இலக்கியம் முதல் சுவாமி விவேகானந்தரின் வருகை வரையிலான வரலாற்றுச் செய்திகள் இதில்

உள்ளன. இராமனுக்கும் சேதுவுக்கும் உள்ள தொடர்பு, சேது மன்னர்களின் கொடை உள்ளம், திருப்பணிகள், கோயில் பண்டாரம் அவரது செயல்பாடுகள் எனப் பல வரலாற்றுச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளமை சிறப்புக்குரியது. வெவ்வேறு பரம்பரையைச் சேர்ந்த மன்னர்களுக்கும் இத்தலத்திற்கும் உள்ள தொடர்புகள் கூறப்பட்டுள்ளன. கோயிலின் அமைப்பு, வழிபாடுகள், நடைமுறைகள், விழாக்கள், கடவுளர்களின் வாகனங்கள், சிலைகள், படிமங்கள் எனப் பல பகுதிகளை உள்ளடக்கியது இந்நூல். இராமேஸ்வரம் திருத்தலம்மட்டுமல்லாது அதனைச் சுற்றியுள்ள முக்கியமான புனிதத் தலங்களும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. அல்பெருனி குறிப்புகளிலிருந்து சேது பற்றிய செய்திகள் காட்டப்பட்டுள்ளன. இதில் குறிப்பிடப்படும் 'பந்தர்', பஞ்சயவார் போன்ற சொற்களுக்கு முறையே 'அணை', தஞ்சாவூர்' எனப் பொருள் காட்டப்பட்டுள்ளமை (ப. 206) மேலும் ஆய்வுக்குரியது. பக்கம் 60 இல் 4, 5 ஆம் வரிகளில் சொற்கள் விடுபட்டுள்ளமை மற்றும் கி.பி. 1628 இன் வரலாற்று நிகழ்வுக்கு சான்றாக 1827 இல் வெளியிடப்பட்ட செப்பேடு காட்டப்பட்டுள்ளமை போன்ற ஒருசில தவறுகளே காணப்படுகின்றன. நேர்த்தியான ஒளிப்படங்கள் நூலுக்குச் சிறப்பு சேர்க்கின்றன.

**பா. ஜெயக்குமார்**, தஞ்சாவூர்.

B.Sasisekaran, **Iron Industry and Metallurgy - A study of Ancient Technology,** நியுஇரா பப்ளிகேஷன்ஸ், அஞ்சல் பெட்டி.எண்.8780, அடையாறு சென்னை.

தொன்மை வாய்ந்த இந்திய வரலாற்றில் இரும்புக்காலப் பண்பாடு மிகச்சிறந்த இடத்தைப்பெற்றுத் திகழ்கிறது. குறிப்பாகத் தமிழ்நாட்டில் நடத்தப்பட்ட அகழாய்வுகளில் பெரும்பாலான இடங்களில் இரும்புக்கருவிகள் மிகுந்த அளவில் பெருங்கற்காலப் பண்பாட்டில் இருந்துள்ளன என்பதை அறியமுடிகிறது, இருப்பினும் பண்டைத் தமிழகத்தில் பரவலாக இருந்த இரும்புத்தொழிலின் தொழிற்நுட்ப வரலாற்றையும் அதனை உருக்குவதற்காக தமிழன் பயன்படுத்திய பல்வேறு முறைகளையும் அறிவியல் முறைப்படி ஆய்வுசெய்து இதுவரை எந்த நூலும் வெளிவரவில்லை என்பது வெளிப்படை. இதனைப் போக்கும் வகையில் முனைவர் சசிசேகரன் எழுதியுள்ள "பண்டைய இரும்புத் தொழில் நுட்பமும் உலோகவியலும்-ஓர், ஆய்வு", (Iron Industry and Metallurgy-A Study of Ancient Technology) என்ற ஆங்கில நூல் தொல்லியல் ஆய்வாளர்களுக்கும் பண்டைத் தொழில்நுட்பங்களை அறிய விழையும் ஆர்வலர்களுக்கும் பயனுள்ளதாக அமையும். இந்நூல், முனைவர் சசிசேகரன் தமது முதுமுனைவர் பட்டத்திற்காக பல்வேறு ஊர்களுக்கு நேரிடையாக களஆய்வுகள் சென்றும் தமிழ்நாட்டில் பிறதுறைகள் செய்த அகழாய்வுகளில் பெறப்பட்ட தரவுகளின் அடிப்படையிலும் எழுதியுள்ளார்.

இந்நூல் நான்கு அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. முதல் அத்தியாயம் இந்தியாவில் இதுவரை தொன்மைக்காலத்தில் இரும்பு மற்றும்

உருக்குத்தொழில் நுட்பம் குறித்து மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளைப் பற்றிக்குறிப்பிடுகிறது. இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் பண்டைக் காலத்தில் எங்கெங்கு இரும்பு வெட்டி எடுக்கப்பட்டன? அவற்றை மூலத்தாதுவிலிருந்து பிரித்தெடுக்க பண்டைய இந்தியாவில் பயன்படுத்தப் பட்ட முறைகள் எவை? என்பதையும் சுட்டிக்காட்டும் இந்நூலாசிரியர் நிலப்பொதியியல் அறிஞர்கள் கண்டறிந்துள்ள பண்டைக்கால இரும்புத் தாதுப்பகுதிகள் எவை என்பதையும் மாவட்ட வாரியாகப் பகுத்துள்ளார். தமிழகத்தில் இரும்புத்தாதுக்கள் கிடைக்கின்ற பகுதிகளை 12 பகுதிகளாக மாவட்ட அடிப்படையில் பிரித்துள்ள இவர் குறிக்கப்படாத பிற மாவட்டங்களில் இரும்புத்தாது உள்ளனவா? என்பதைக் குறிப்பிடவில்லை. அதற்கான ஆய்வுகள் நடத்தப்பட்டனவா? என்பதையும் குறிப்பிடவில்லை. முதல் அத்தியாயத்தில் தமிழகத்தில் இருந்த இரும்பின் பயன்பாடு தமிழகத்தில் புதியகற்காலத்தில் மிக மெதுவாகப் புகுந்து பின்னர் இரும்புக்காலத்தில் அதிக அளவில் பழக்கத்திற்கு வந்துள்ளதைச் சுட்டிக்காட்டுகின்றார். பெரும்பாலும் இரும்புக்காலப்பண்பாடு சிற்றாறுகளும் காட்டாறுகளும் மலைகளும் மிகுந்த தர்மபுரி, வட ஆர்க்காடு (இன்றைய வேலூர் மற்றும் திருவண்ணாமலை மாவட்டங்கள்) மிகுந்திருந்ததை விளக்குகின்றார். மேலும் சங்க இலக்கியங்கள் சுட்டும் இரும்புக் கருவிகள், இரும்பின் பயன்பாடு, இரும்பின் பல்வேறு பெயர்கள் ஆகியவற்றையும் குறிப்பிடுகின்றார். இரும்புத்தொழில், அவற்றை உருக்கும் தொழில் செய்யும் கருமான், இரும்பை உருக்கப் பயன்படுத்தப்பட்ட பல்வேறு தொழில்நுட்பம் ஆகியவற்றைச் சுருக்கமாக விளக்குகின்றார்.

இரண்டாவது அத்தியாயம் பண்டைய இந்தியாவில் இரும்பு உருக்குத்தொழில் பற்றிய அறிவு எவ்வாறு வளர்ச்சி பெற்றது என்பது குறித்தும் சிறிய அளவில் தொடங்கிய இத்தொழிநுட்பம் பின்னர் எஃகு அல்லது தேனிரும்பை உருவாக்கும் தொழில்நுட்பம் எங்கெல்லாம் வளர்ச்சி அடைந்தது என்பது குறித்து ஆய்வு செய்கிறது. அகழாய்வு மற்றும் களஆய்வுகள் மூலம் கண்டுபிடிக்கப்பட்ட இரும்புத் தொழிற்கூடங்கள் மிக்க பண்டைய இரும்புக்கால வாழ்விடங்களைப் பட்டியல் இட்டு விவரிக்கின்றது. இவ்வரிசையில் குட்டூர், கொடுமணல் போன்ற அகழாய்வு செய்யப்பட்ட இடங்களும் காட்டாங்குளத்தூர், மேல்சிறுவளூர், பெருங்களூர் போன்ற கள ஆய்வு இடங்களும் இடம் பெற்றுள்ளன. இவ் அத்தியாயத்தில் பண்டைத்தமிழகத்தில் இரும்பை உருக்கப் பயன்படுத்தப்பட்ட பல்வேறு வகை உலைக்களங்கள் பற்றியும் அவை கிடைத்துள்ள இடங்கள் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளன. மேலும் அக்காலத்தில் மக்கள் இரும்பை உருக்குவதற்காகக் கையாண்ட பல்வேறு தொழிற்நுட்பங்கள் குறித்தும் இப்பகுதியில் பேசப்படுகிறது. இரும்பு மற்றும் இரும்பு எஃகு ஆகியவற்றை எவ்வெவ்வாறு மாறுபட்ட வெப்பநிலையில் பிரித்து எடுத்தனர் என்பதும் இரும்பை உருக்க உலை மட்கலன்கள் எவ்வாறு பயன்பட்டன என்பதும் இவை கரிமத்துடன் சேர்த்து இந்தியாவில் மிகுந்த அளவில் உருக்கு (ஊட்ஸ் ஸ்டீல்) என்னும் இரும்புவகை எவ்வாறு தயாரிக்கப்பட்டது என்பதையும் இந்த அத்தியாயம் விளக்குகிறது.

மூன்றாவது அத்தியாயத்தில் இரும்பு உருக்கும் கலை மற்றும் அகழாய்வு மற்றும் கள ஆய்வுகளில் கிடைத்த இரும்புப் பொருட்களின் திடத்தன்மை அவற்றுள் உள்ள பல்வேறு மூலக்கனிமங்களின் தன்மை அவற்றின் அளவு போன்றவை மிக நுட்பமாக பல்வேறு அறிவியல் ஆய்வுகளின் அடிப்படையில் கண்டறியப்பட்டு விவரிக்கப்பட்டுள்ளது. இதற்காக இந்நூலாசிரியர் வேதியியல் ஆய்வுகளையும் இயற்பியல் ஆய்வுகளையும் இரும்பின் குறுக்குவெட்டுத்தன்மை போன்ற ஆய்வுகளையும் செய்துள்ளார். இது இந்நூலின் சிறப்புத்தன்மையாகும்.

நான்காவது இறுதி அத்தியாயம் இவ்வாய்வில் பெறப்பட்ட முடிவுகளையும் கருதுகோள்களையும் சுருக்கமாக விளக்குகிறது. இந்நூலில் இறுதியாக இணைக்கப்பட்டுள்ள துணைநூற்பட்டியல் தொல்லியல் ஆய்வாளர்களுக்கும் பண்டைத் தொழில்நுட்பத்தை ஆய்வு செய்யும் ஆய்வாளர்களுக்கும் பயனுள்ளதாக அமையும். இறுதியில் இணைக்கப் பட்டுள்ள ஒளிப்படங்களில் தமிழகத்தில் இரும்பு கிடைக்கின்ற இடங்கள், இரும்புக் கருவிகள் அறிவியல் ஆய்வகத்தில் ஆய்வுசெய்து பெறப்பட்ட பல்வேறு நிலையில் உள்ள இரும்பு மற்றும் பிற கனிமங்களின் தன்மைகள் அவற்றின் உட்கூறுகள் இடம் பெற்றுள்ளன.

மிக நேர்த்தியான முறையில் தரம் மிக்க தாளில் வெளியிடப் பட்டுள்ள இந்நூலின் ஒளிப்படங்களும் மிகச்சிறந்த முறையில் அமைந்துள்ளன. ஒளிப்படங்களுடன் வரைபடங்கள், நிலப்படங்கள் இடம் பெற்றுள்ளன. கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் எழுதப்பட்டுள்ள இந்நூலில் தமிழகத்தில் பரவலாகக் காணப்படும் இரும்புக்கால மற்றும் வரலாற்றுத்தொடக்ககால இடங்களில் கிடைத்துள்ள இரும்புப் பொருட்களின் தொழில்நுட்பத்தையும் அவற்றின் தன்மைகளையும் இணைத்திருந்தால் ஒரு முழுமை வாய்ந்த ஆய்வு நூலாக இது அமைந்திருக்கும்.

**சு. இராஜவேல், சென்னை.**

# 45. தமிழகத் தொல்லியல் கழக 14 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு அறிக்கை

பா. ஜெயக்குமார், செயலர்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 14 ஆம் ஆண்டுக்கருத்தரங்கம் மற்றும் ஆவணம் இதழ்-15 வெளியீட்டு விழா 2004 ஜூலை 24, 25 ஆகிய இரு நாட்கள் சிதம்பரம், கீழவீதி, இராசி திருமண மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது. சிதம்பரம், மெய்யப்பன் தமிழாய்வகம் முன்னின்று நடத்திய இக்கருத்தரங்கின் உள்ளூர்ச் செயலராக திரு.ச. கிருஷ்ணமூர்த்தி (தொல்லியல் அலுவலர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை) செயல்பட்டார்.

24.7.2004 காலை 10.30 மணிக்குத் தொடக்க விழா முனைவர் செ.இராசு (தலைவர், தமிழகத் தொல்லியல் கழகம்) தலைமையில் நடைபெற்றது. திரு. கே.டி.எஸ். சுப்பிரமணியன் (மேலாளர், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம்) முன்னிலை வகித்தார். உள்ளூர்ச் செயலர் வரவேற்புரை வழங்கினார். முனைவர் கோ. விஜயவேணுகோபால் (பிரெஞ்சு இந்திய நிறுவனம், பாண்டிச்சேரி) ஆவணம் இதழ்-15ஐ வெளியிட்டு சிறப்புரை ஆற்றினார். ஆவணம் இதழின் சிறப்புகளை எடுத்துரைத்ததோடு இதழை மேலும் மேம்படுத்துவது குறித்தும் தேவையான கருத்துகளை வழங்கினார். இதழின் முதல் படியைப் பெற்றுக்கொண்டு மருத்துவர் திருமதி. பத்மினி கபாலிமூர்த்தி வாழ்த்துரை வழங்கினார். தமிழ்நாட்டின் வரலாற்றாய்விற்குக் கழகம் ஆற்றிவரும் பங்களிப்பைச் சுட்டிக்காட்டினார். முனைவர் இரா. பூங்குன்றன் (முன்னாள் உதவி இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை), பேரா. சரசுவதி வேணுகோபால், மருத்துவர் க.நடராஜன் (ஆர்.கே. மருத்துவமனை, சிதம்பரம்), செந்தமிழ்க் காவலர் சிதம்பரம் மயில்வாகனன் ஆகியோரும் வாழ்த்துரை வழங்க முனைவர் சு. இராஜவேலு வழங்கிய நன்றியுரையுடன் தொடக்கவிழா நிறைவடைந்தது.

பிற்பகல் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. திரு.ஐராவதம்மகாதேவன் இ.ஆ.ப.(ஓய்வு) அவர்கள் நிறுவிய தி.நா.சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவை திரு.தியாக. சத்தியமூர்த்தி (தொல்லியல் கண்காணிப்பாளர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, சென்னை வட்டம்) 'கேரளத் தமிழ்க் கல்வெட்டுகள்' என்ற தலைப்பில் ஆற்றினார். இந்நிகழ்விற்கு முனைவர் செ.இராசு தலைமை வகித்தார். கோவிலூர் ஆதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவை முனைவர் கு.சேதுராமன் (பேராசிரியர், கலைவரலாற்றுப் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை) 'தமிழக-தக்காணக் கலைப்பரிமாற்றங்கள்' என்ற தலைப்பில் வழங்கினார். இப்பொழிவிற்கு முனைவர் வெ.வேதாசலம் (தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, மதுரை) தலைமையேற்றார். தொடர்ந்து கருத்தரங்க அமர்வுகள் நடைபெற்றன.

இக்கருத்தரங்கின் 3 அமர்வுகளில் 33 கட்டுரைகள் படிக்கப்பட்டன. அவை பின்வருமாறு:

நாள் : 24.07.2004 நேரம் : 16.15 - 18.15

அமர்வு - 1

தலைமை : **முனைவர் எஸ். பத்ரி நாராயணன்**

1. தியாக. சத்தியமூர்த்தி - தில்லை மூவாயிரவரும் கேரளப் பண்பாடும்
2. சொ. சாந்தலிங்கம் - திணை, பெருந்திணை - ஒரு மறுபார்வை.
3. கோ. திருமூர்த்தி - சிதம்பரம் கோயில் கல்வெட்டுகளில் நிலதானம்
4. அனந்தபுரம் கிருஷ்ணமூர்த்தி - அங்காளம்மன் பேரில் ஓலைச்சுவடி
5. க. கண்ணன் - திருக்குறுங்குடி அக்ரஹாரக் கல்வெட்டு
6. மு.வள்ளியம்மாள் - பாணன்பறம்பு பாறை ஓவியம்
7. க. கருப்பையா - விக்கிரமசோழனின் கடத்தூர் கல்வெட்டு காட்டும் சர்க்கரை நோய் - ஒரு சிறுகுறிப்பு
8. ப.ஷீலா - விலாரிபாளையம் சதிக்கல் ஓர் ஆய்வு
9. S. Badrinarayanan, B. Sasisekaran - Geo-Archaeological aspects of Adhichchanallur area - A study

25.07.2004 நேரம் : 9.00 - 11.00

அமர்வு - 2

தலைமை : **முனைவர் இரா. பூங்குன்றன்**

10. ஆர். பாலசந்திரன் - முத்துலாபுரம் செக்குக்கல்வெட்டு
11. ச. இரவி - கொங்குநாட்டில் இடைக்காலப் பாண்டியர் நீர்ப்பாசனக் கல்வெட்டு
12. செந்தி. நடராசன் - சரலூர் கல்வெட்டும் துளிர்விடும் சில கருதுகோள்களும்
13. இல. தியாகராஜன் - பெருவழிகள்
14. நாக. கணேசன் - வேட்டமங்கலம் புஷ்பவன ஈஸ்வரர் கோயில் கல்வெட்டுகள்
15. மோ. சரண்யா - தாண்டிக்குடி பெருங்கற்படைச் சின்னங்கள்

16. இராசு. பவுன்துரை - தென்கொரிய தென்னிந்தியப் பண்பாடு

17. கே. சங்கரி - தமிழகக் கல்வெட்டுகள் செப்பேடுகள் காட்டும் இந்து முஸ்லிம் நல்லிணக்கம்

18. இரா. பூங்குன்றன், ம. கணேசன் - ஆலத்தூர் கல்வெட்டில் வழக்கும் தீர்ப்பும்

25.7.2004 நேரம் : 11.00 - 13.15

அமர்வு - 3

தலைமை : **முனைவர் இல. தியாகராஜன்**

19. ச. கிருஷ்ணமூர்த்தி - பேரம்பலவாணர்

20. க. பன்னீர்செல்வம் - திருமுனைப்பாடிநாட்டு வரலாற்றுப் பெயராய்வு

21. மு.ஆ.ப. சரஸ்வதி - மலைப்பட்டு தொல்லியல் செய்திகள்

22. தீ. கோவிந்தராஜ் - ரிஷிபகுஞ்சரன் சிற்பம்

23. முத்து. எத்திராஜன் - சேரமன்னர்களின் குலதெய்வம்

24. கரு. இராசேந்திரன் - சீர்மிகு சுந்தரத்து நகரத்தார்கள் அறப்பணிகள்

25. ம. காந்தி - ஜம்பை ஊர்ப்பெயராய்வு

26. கோ. முத்துச்சாமி - பூம்புகார் புதையல்

27. கி.குமார் - கார்கூர் பாறை ஓவியங்கள்

28. சு. முத்துச்சாமி - பொதுமக்களுக்கான ஆய்வுநூற்கள்

29. வீரராகவன் - விழுப்புரம் மாவட்டத்தில் ஏழுகன்னிகள்

30. ந. சுந்தரராஜன் - பொறிப்புள்ள நீலமங்கலம் கொம்பு இசைக் கருவி

31. ஆர். மணி - செஞ்சிக்கோட்டையில் புதிய கண்டுபிடிப்புகள்

32. அ. சந்திரபோஸ் - செட்டிநாட்டு ஓவியங்களில் பிரிட்டிஸ் இந்திய நீதிமன்றம்

33. அரா. செல்வகணபதி - தொல்லியலும் தொன்மைத்தமிழும்.

25. 7. 2004 மாலை 13.15 மணி முதல் 14.15 வரை செயற்குழுக்கூட்டம் நடைபெற்றது. பின்னர், 15.00 மணி முதல் 16.00 வரை கழகப் பொதுக்குழுவும் அதனைத் தொடர்ந்து நிறைவுவிழாவும் பேரா. கு.சேதுராமன் தலைமையில் நடைபெற்றன. செயலரின் நன்றியுரையுடன் 14 ஆவது கருத்தரங்கம் இனிதே நிறைவுற்றது.

# கட்டுரையாளர்கள்

ஆறுமுகசீதாராமன்
12, ராஜாராஜன் நகர்
மானோஜிப்பட்டி (தெற்கு)
மருத்துவக்கல்லூரி (அஞ்சல்)
தஞ்சாவூர் – 613 004.

இராசேந்திரன், கரு.
விராச்சிலை
மேலப்பனையூர் (அஞ்சல்)
புதுக்கோட்டை – 622420.

இரவிச்சந்திரன், பெ.
கௌரவ விரிவுரையாளர்
அரசு கலைக்கல்லூரி
வரலாற்றுத்துறை
அரியலூர்.

உத்திராடம், கோ.
நடுத்தெரு
பாங்குளத்தூர் (அஞ்சல்)
திண்டிவனம் வட்டம் – 604 101

கண்ணன், சு.
விரிவுரையாளர்,
வரலாற்றுத் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
சிதம்பரம்.

குமார், கி.
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு,
தாடண்டர் நகர்
சைதாப்பேட்டை
சென்னை – 600 015.

சாய்கவிதா, ப. செல்வி
கௌரவ விரிவுரையாளர்
வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர்.

சுகந்தி, சா.
கல்வெட்டியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

சுப்பராயலு, எ.
கல்வெட்டியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

செவ்வேள், வே.
பகுதி நேர முனைவர்பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத்துறை
அரசுகலைக் கல்லூரி
அரியலூர்.

சேதுராமன், கு.
கலை வரலாற்றுத்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

தங்கவேலு, வி.பி.
சென்னை.

தமிழரசன், பு.சி.
புதுக்கோட்டை.

தியாக சத்தியமூர்த்தி
தொல்லியல் கண்காணிப்பாளர்
மத்திய அரசு தொல்லியல் துறை
செயின்ட் ஜார்ஜ் கோட்டை
சென்னை.

தில்லை கோவிந்தராஜன், கோ.
70/115,
சக்தி இல்லம்
பழைய அல்லா கோயில் சந்து
வடக்கு வீதி
தஞ்சாவூர் – 613 009.

தியாகராசன், இல.
வரலாற்றுத்துறை
அரசுக்கலைக் கல்லூரி
அரியலூர் – 621713.

துளசேந்திரன், ஆ.
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

பன்னீர்செல்வம், க.
இயக்குநர் அலுவலகம்
மத்திய தொல்லியல் துறை
கல்வெட்டுப் பிரிவு
மைசூர் – 570 005.

பவானி, மா.
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

பாலச்சந்திரன், ஆர்.
272, பி–4, எஸ்.என்.புரம் ரோடு
சரசுவதி நகர்
திருத்தங்கல் – 626 130.

பாஸ்கரன், இரா.
46, சங்கரமடம் வீதி,
புதுக்கோட்டை – 622 005.

முத்தழகன், சு.ப.
புதுக்கோட்டை.

முத்து எத்திராசன்
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உசுமான் சாலை
தியாகராய நகர்
சென்னை – 600 017.

முருகானந்தம், பி.
வரலாற்றுத்துறைப் பேராசிரியர்
பெரியார் ஈ.வே.ரா.
அரசு கலைக்கல்லூரி
திருச்சி.

ராஜவேலு, சு.
துணை கல்வெட்டு கண்காணிப்பாளர்
அலுவலகம்
மத்திய தொல்லியல் துறை
சென்னை – 600 009.

ராஜேஷ், மு.
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005.

வள்ளியம்மாள், மு.
வரலாற்றுத்துறை பேராசிரியர்
டோக் பெருமாட்டி கல்லூரி
மதுரை,

வெங்கடேசன், ந.
11, கிழக்கு சந்நிதி வீதி
வில்லியனூர் – 605 110.

வெங்கடேசன், ப.
3.178 கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜா பேட்டை – 632 513.

Kesavan Veluthat
P.G. Dept. of History
Mangalore University
Mangalore - 574 199
Karnataka State.

Selvakumar, V.
Centre for Heritage Studies
Hill Palace
Tiripunithura
Erankulam Dt. 681 302.
Kerala State.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2005

| | | | |
|---|---|---|---|
| Opening Balance : | | Printing | 21,125.00 |
| Cash in hand | 137.63 | Xerox & Stationary | 2,107.00 |
| Cash at Bank<br>Indian Bank, | 14,806.00 | Audit Fees | 800.00 |
| SBI, TNJ | 16,070.23 | Salary | 1,200.00 |
| Sale of Books | 1,560.44 | Indian Bank FD | 70,000.00 |
| Membership Fees | 13,600.00 | Honorarium | 4,000.00 |
| Interest | 18,023.36 | Postage | 2,376.08 |
| Donation | 19,000.00 | Transport & Freight Charges | 2,434.00 |
| Grant | 47,500.00 | Bank Charges | 224.00 |
| | | General Expenses | 1,635.00 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 15,984.99 |
| | | Indian Bank, TNJ | 8,492.000 |
| | | Cash in Hand | 319.55 |
| | **1,30,697.62** | | **1,30,697.62** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2005

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 21,125.00 | By Sales of Books | 1,560.00 |
| To Xerox & Stationary | 2,107.00 | By Membership Fees | 13,600.00 |
| To Audit Fees | 800.00 | By Interest | 18,023.36 |
| To Salary | 1,200.00 | By Donation | 19,000.00 |
| To Honorarium | 4,000.00 | By Grant | 47,500.00 |
| To Postage | 2,376.08 | | |
| To Freight Charges | 2,434.00 | | |
| To Bank Charges | 224.00 | | |
| To General Expenses | 1,635.00 | | |
| To Excess of Income Over Expenditure | 63,782.28 | | |
| | **99,683.36** | | **99,683.36** |

### BALANCE SHEET AS ON 31.03.2005

| LIABILITIES | | ASSETS | |
|---|---|---|---|
| FUND ACCOUNT :<br>Opening Balance | 2,12,013.86 | Fixed Deposit | 2,40,000.00 |
| Add Income<br>Excess of Income over Expenditure | 63,782.28 | Furniture | 11,000.00 |
| | **2,75,796.14** | Cash at Bank :<br>Indian Bank, TNJ | 8,492.00 |
| | | SBI, TNJ | 15,984.99 |
| | | Cash in hand | 319.55 |
| | **2,75,796.14** | | **2,75,796.14** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
'951, East Main St., Thanjavur - 1

# அஞ்சலி

## கொடுமுடி சண்முகன்

தோற்றம் : 19.3.1938 மறைவு : 19.03.2005

பொறியாளர் கொடுமுடி சண்முகன் அவர்கள் தமிழக அரசில் பொதுப்பணித்துறையில் திறம்படப்பணியாற்றியவர். அவருக்குத் தன் பொறியியல் துறையைப் போலவே தொல்பொருள் கல்வெட்டு சுவடியியல் முதலிய துறைகளின் பால் அளவற்ற ஈடுபாடிருந்தது. கொங்கு, தேனோலை முதலிய இதழ்களை வெளியிட்டு அத்துறையில் அவர் காட்டி வந்த ஆர்வம் அவரைத் தனியாக அடையாளம் காட்டியது. தமிழகத்தில் பல கல்வெட்டுக்களையும் சின்னங்களையும் கண்டுபிடித்து அவற்றைப் பாதுகாக்கவும் நடவடிக்கைகள் மேற்கொண்டார். பழந்தமிழர் பொறியியல் நுட்பத்திறன் குறித்து ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றார். தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் தமிழ்ப் பயிற்றுமொழி இயக்கம் போன்றவற்றில் அவர் காட்டிய முனைப்பு குறிப்பிடத்தக்கது. ஆறுக்கும் மேற்பட்ட பொறியியல் நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ள அவர் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் அறிவியல் களஞ்சியத்தின் பதிப்பாசிரியராகவும் சில காலம் பணியாற்றியுள்ளார். தொல்காப்பிய நூன்மரபு மொழிமரபில் எழுத்தமைதி பற்றிய சூத்திரங்களுக்கு எழுதிய விரிவுரை அவர் நூற்களில் குறிப்பிடத்தக்கது. தமிழகத் தொல்லியல் கழகத்தின் தலைவராக சில காலம் இருந்தார். அவருடைய மறைவு தமிழக வரலாற்று ஆர்வலருக்கு மிகப்பெரிய இழப்பாகும்.

## இரா.ப. கருணாநந்தன்

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் கல்வெட்டாய்வாளாராகப் பணியாற்றியவரும் சிறந்த பல ஆய்வுக்கட்டுரைகளை வழங்கியவருமான முனைவர் இரா.ப.கருணாநந்தன் அவர்கள் அண்மையில் இயற்கை எய்தினார். அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தினர்க்கும் நண்பர்களுக்கும் தமிழகத் தொல்லியல்கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## சிங்கம்புணரி சீ. லட்சுமணன்

தமிழகத் தொல்லியல் கழகத்தின் தொடக்க நாள் முதல் வாழ்நாள் உறுப்பினராகச் சேர்ந்து பணியாற்றிப் பல அரிய கண்டுபிடிப்புகளைத் தந்தவரும், கட்டுரைகள் அளித்தவருமான திரு.சீ.லட்சுமணன் அவர்கள் அண்மையில் இயற்கை எய்தினர். அவரைப் பிரிந்து வாடும் இல்லத்தார்க்கும் நண்பர்களுக்கும் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

**Avanam** 1 – 2 not available
**Avanam** 3 – 14 Rs. 100/- (per copy)
**Avanam** 15 – 16 Rs. 150/- (per copy)

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society**, to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.25/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam**, Rs.100/-

<u>Address to be contacted</u>

Secretary / Treasurer
Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும், ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1 - 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 - 14 | ரூ.100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15 - 16 | ரூ.150/- (இதழ் ஒன்றுக்கு) |

நொபொரு கராஷிமா, **வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம்** - ரூ.100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.1000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.2000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/-ம் செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப் பிடித்தம் ரூ.25/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும்.

**முகவரி**
செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005.

Contact
Secretary/Treasurer
Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil University, Thanjavur - 613 005.

அச்சிட்டோர் : விஜய் ஆப்செட் பிரிண்டர்ஸ், T.B.ரோடு, மதுரை - 625 016.